# திரிகோண கணிதம்

( பட்டப்படிப்புக்குரியது )

ஆசிரியர்
வி. அரங்கநாதன்,
முன்னாள் முதல்வர்,
தேசியக் கல்லூரி, திருச்சி.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

# அணிந்துரை

(திரு. செ. மாதவன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969 ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் விஞ்ஞானப் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் மாணவர்க்குக் கலை, அறிவியல் பாடங்களைத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'திரிகோண கணிதம்' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 207 ஆவது வெளியீடாகும். இதுவரை 242 நூல்கள் வெளிவந்துள்ளன.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனப் கலந்த நன்றி உரித்தாகுக.

செ. மாதவன்

# பொருளடக்கம்

அத்தியாயம் I

# 1. திரிகோண கணிதச் சூத்திரப் பட்டியல்

1·1. நாம் முன்பே கற்ற திரிகோண கணிதச் சூத்திரங்களின் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது (இச் சூத்திரங்களை நன்கு மனத்தில் கொள்ளவேண்டும்).

(1) $\cos^2\theta + \sin^2\theta = 1$

(2) $\sec^2\theta = 1 + \tan^2\theta$

(3) $\operatorname{cosec}^2\theta = 1 + \operatorname{cof}^2\theta$.

(4) $\sin 0^\circ = \cos 90^\circ = 0.$ ;
$\cos 0^\circ = \sin 90^\circ = 1$
$\sin 30^\circ = \cos 60^\circ = \frac{1}{2}$
$\cos 30^\circ = \sin 60^\circ = \sqrt{\frac{3}{4}}$.
$\sin 45^\circ = \cos 45^\circ = \dfrac{1}{\sqrt{2}}$

(5) $\sin(-\theta) = -\sin\theta$.
$\cos(-\theta) = \cos\theta$.
$\sin(90^\circ - \theta) = \cos\theta$.
$\cos(90^\circ - \theta) = \sin\theta$.
$\sin(90^\circ + \theta) = \cos\theta$.
$\cos(90^\circ + \theta) = \sin\theta$.
$\sin(180^\circ - \theta) = \sin\theta$.
$\cos(180^\circ - \theta) = -\cos\theta$.
$\sin(180^\circ + \theta) = -\sin\theta$.
$\cos(180^\circ + \theta) = -\cos\theta$.

(6) $\sin(A+B) = \sin A\cos B + \cos A\sin B$.
$\cos(A+B) = \cos A\cos B - \sin A\sin B$.
$\sin(A-B) = \sin A\cos B - \cos A\sin B$.
$\cos(A-B) = \cos A\cos B = \sin A\sin B$.

(7) $\sin C + \sin D = 2 \sin \frac{C+D}{2} . \cos \frac{C-D}{2}.$

$\sin C - \sin D = 2 \cos \frac{C+D}{2} . \sin \frac{C-D}{2}.$

$\cos C + \cos D = 2 \cos \frac{C+D}{2} . \cos \frac{C-D}{2}.$

$\cos C - \text{ces } D = 2 \sin \frac{C+D}{2} . \sin \frac{D-C}{2}.$

(8) $2 \sin A \text{ ces } B = \sin (A+B) + \sin (A-B).$
$2 \cos A \sin B = \sin (A+B) - \sin (A-B).$
$2 \cos A \cos B = \cos (A+B) + \cos (A-B).$
$2 \sin A \sin B = \cos (A+B) - \cos (A+B).$

(9) $\sin 2A = \sin A . \cos A$
$\cos 2A = \cos^2 A - \sin^2 A = 2 \cos^2 A - 1$
$= 1 - 2 \sin^2 A.$

(10) $\tan (A+B) = \frac{\tan A + \tan B}{1 - \tan A . \tan B}$

$\tan (A-B) = \frac{\tan A - \tan B}{1 + \tan A . \tan B}$

(11) $\sin 2A = \frac{2 \tan A}{1 + \tan^2 A}$

$\cos 2A = \frac{1 - \tan^2 A}{1 + \tan^2 A}$

$\tan 2A = \frac{2 \tan A}{1 - \tan^2 A}$

(12) $\sin 3A = 3 \sin A - 4 \sin^3 A.$
$\cos 3A = 4 \cos^3 A - 3 \cos A.$
$\tan 3A = \frac{3 \tan A - \tan^3 A}{1 - 3 \tan^2 A}$

## 2. நேர்மாறு வட்டச் சார்புகள்
## (Inverse circular functions)

1·2.1. ஒரு கோணம் '$\theta$' கொடுக்கப்பட்டால் $\sin \theta$, $\cos \theta$, $\tan \theta$ முதலியவை சுலபமாகக் கண்டுபிடிக்கக்கூடியவை. இப்பொழுது $\theta$ன் மதிப்பு '$a$' என்று கொடுக்கப்பட்டால்,

அதிலிருந்து $\theta$ஐக் கண்டுபிடிப்பதற்கு நேர்மாறு சார்பு முறையை உபயோகிக்கவேண்டும்.

$\sin\theta = a$ என்றால், $\theta = \sin^{-1} a$ என்று சொல்லவேண்டும். இதற்கு நேர்மாறு வட்டச் சார்பு எனப் பெயர். இப்பொழுது, $\theta$க்கு பல மதிப்புக்கள் கண்டுபிடிக்கலாம். உதாரணமாக, $\sin\theta = \frac{1}{2}$ என்றால், $\theta$ன் மதிப்பு $30°$ அல்லது $150°$ அல்லது $390°$.........ஆக இருக்கலாம்.

ஆனால், $\theta = \sin^{-1} a$ என்றால் $\theta$க்கு மிகக் குறைவான அளவுள்ள மதிப்பைத்தான் எடுத்துக்கொள்ளவேண்டும். இம்மதிப்பு நேர் (positive) அல்லது எதிர் (negative) ஆக இருக்கலாம். எனவே, $\sin^{-1} a$ என்பது $-90°$க்கும் $+90°$க்கும் இடையே இருக்க வேண்டும்.

இம் மாதிரியே $\cos^{-1} a$ என்பது $0°$க்கும் $180°$க்கும் இடையே இருக்கவேண்டும். $\tan^{-1} a$ என்பது $-90°$க்கும் $+90°$க்கும் இடையே இருக்கவேண்டும்.

எனவே, $\sin^{-1} a$க்கு முதல் மதிப்பு (principal value) ஒன்று தான் உண்டு. இது போல் $\cos^{-1} a$, $\tan^{-1} a$ இவைகளுக்கும் முதல் மதிப்பு ஒன்றுதான் உண்டு.

உ-ம் : $\sin^{-1}\frac{\sqrt{3}}{2} = \frac{\pi}{2}$ (முதல் மதிப்பு)

$$\cos^{-1}\left(-\frac{1}{\sqrt{2}}\right) = \frac{3\pi}{4} \quad (\quad ,, \quad)$$

$$\tan^{-1}(-\sqrt{3}) = -\frac{\pi}{3} \quad (\quad ,, \quad)$$

1·2.2. நாம் $\sin^{-1} a$ ஐ நிர்ணயித்து இருப்பதால் இதையே $\operatorname{cosec}^{-1}\frac{1}{a}$ என்றும் சொல்லலாம்.

ஏனென்றால் $\sin^{-1} a = \theta$ என்று வைத்தால்,

$a = \sin\theta$ என்று கிடைக்கிறது.

$$\therefore \frac{1}{a} = \frac{1}{\sin\theta}$$

அதாவது $\frac{1}{a} = \operatorname{cosec}\theta$.

$$\therefore \operatorname{cosec}^{-1}\frac{1}{a} = \theta.$$

$$\text{எனவே } \sin^{-1} a = \operatorname{cosec}^{-1} \frac{1}{a}$$

$$\text{இம்மாதிரியே } \cos^{-1} a = \sec^{-1} \frac{1}{a} \text{ என்றும்}$$

$$\tan^{-1} a = \cos^{-1} \frac{1}{a} \text{ என்றும் நாம்}$$

நிரூபிக்கலாம்.

1·2.3. நேர்மாறு சார்பின் வரைவிலக்கணத்திலிருந்து நாம் இப்பொழுது $\sin^{-1} a + \cos^{-1} a = \frac{\pi}{2}$ என்று நிரூபிக்கலாம்.

'$a$' என்பது ஒரு நேர் எண்ணாக இருக்கட்டும். $ABC$ என்று ஒரு செங்கோண முக்கோணத்தை $\hat{C} = 90°$; $CB=a$; $AB=1$ என்ற அளவுகளுடன் எடுத்துக்கொள்.



படம்-1

$$\sin A = \frac{a}{1} = a;$$

$$\cos B = \frac{a}{1} = a.$$

$$\therefore \sin^{-1} a + \cos^{-1} a = A + B$$

$$= 90°$$

$$= \frac{\pi}{2}. \text{ (வட்ட அளவில் } 90°$$

$$= \frac{\pi}{2} \text{ ஆரையன் (radian)}$$

இம்மாதிரியே $a$க்கு எதிர் மதிப்பு எடுத்துக் கொண்டாலும்,

$$\sin^{-1} a + \cos^{-1} a = \frac{\pi}{2} \text{ என்று கிடைக்கும். மேலும்,}$$

$$\tan^{-1} a + \operatorname{cof}^{-1} a = \frac{\pi}{2} \text{ என்றும்,}$$

$$\operatorname{see}^{-1} a + \operatorname{cosec}^{-1} a = \frac{\pi}{2} \text{ என்றும் தக்க படங்கள்}$$

வரைந்து நிரூபிக்கலாம்

1·2.4. $\sin^{-1}a$ என்பதற்குப் பதிலாக "*arc sin a*" என்றும், $\cos^{-1}a$க்கு "*arc cos a*" என்றும் இதேபோல் $\tan^{-1}a$க்கு 'arc tan a' என்றும் சொல்லுவதுண்டு.

1·2.5.

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1 : $\tan^{-1}a+\tan^{-1}b = \tan^{-1}\dfrac{a+b}{1-ab}$ என்று நிருவுக.

$\tan^{-1}a = x$ என்றும், $\tan^{-1}b=y$ என்றும் வைக்க.

$\therefore \tan x=a$ ; $\tan y=b$. .........(A)

ஆனால் $\tan(x+y) = \dfrac{\tan x+\tan y}{1-\tan x.\ \tan y}$

$\therefore \tan(x+y) = \dfrac{a+b}{1-ab}$. [ (A)யிலிருந்து $\tan x$க்கு $a$யும் $\tan y$க்கு $b$யும் பிரதியிடு.]

$\therefore x+y = \tan^{-1}\dfrac{a+b}{1-ab}$.

அதாவது $\tan^{-1}a+\tan^{-1}b = \tan^{-1}\dfrac{a+b}{1-ab}$.

மாதிரி 2 : $\tan^{-1}\frac{1}{2}+\tan^{-1}\frac{1}{3} = \tan^{-1}\frac{1}{4}+\tan^{-1}\frac{3}{5}$ என்று நிருவுக.

மாதிரி ஒன்றிலிருந்து

$\tan^{-1}a+\tan^{-1}b = \tan^{-1}\dfrac{a+b}{1-ab}$ என்று நமக்குக் கிடைக்கிறது.

$\therefore \tan^{-1}\frac{1}{2}+\tan^{-1}\frac{1}{3} = \tan^{-1}\dfrac{\frac{1}{2}+\frac{1}{3}}{1-\frac{1}{2}\cdot\frac{1}{3}}$

$= \tan^{-1}1$ .........(A)

மேலும் $\tan^{-1}\frac{1}{4}+\tan^{-1}\frac{3}{5} = \tan^{-1}\dfrac{\frac{1}{4}+\frac{3}{5}}{1-\frac{1}{4}\cdot\frac{3}{5}}$.

$= \tan^{-1}1$ .........(B)

$\therefore$ (A), (B)யிலிருந்து

$\tan^{-1}\frac{1}{2}+\tan^{-1}\frac{1}{3} = \tan^{-1}\frac{1}{4}+\tan^{-1}\frac{3}{5}$ என்று நமக்குக் கிடைக்கிறது.

மாதிரி 3 : $\cos\left[\sin^{-1}\sqrt{\dfrac{13}{17}}\right] = \sin\left[\tan^{-1}\dfrac{2}{3}\right]$ என நிருவுக.

$\sin^{-1}\frac{\sqrt{13}}{\sqrt{17}} = A$ எனவும், $\tan^{-1}\frac{2}{3} = B$ எனவும் வைக்க.



படம்-2



படம்-3

$\therefore \sin A = \frac{\sqrt{13}}{\sqrt{17}}$, $R_1P_1 = \sqrt{13}$ என்றும், $P_1Q_1 = \sqrt{17}$ என்றும் எடுத்துக்கொள்ளலாம்.

$$\therefore Q_1R_1 = \sqrt{(\sqrt{17})^2 - (\sqrt{13})^2} = \sqrt{17-13}$$
$$= 2.$$

$$\cot\left[\sin^{-1}\sqrt{\frac{13}{17}}\right] = \cot[A]$$
$$= \frac{Q_1R_1}{R_1P_1} \quad [\text{படம் 1 (இ)}]$$
$$= \frac{2}{\sqrt{13}} \quad \ldots\ldots\ldots(i)$$

$\because \tan B = \frac{2}{3}$, $R_2P_2 = 2$ என்றும், $Q_2R_2 = 3$ என்றும் எடுத்துக்கொள்ளலாம்.

$$\therefore P_2Q_2 = \sqrt{(Q_2R_2)^2 + (R_2P_2)^2} = \sqrt{3^2+2^2} = \sqrt{13}.$$

$$\text{Sin}\left[\tan^{-1}.\frac{2}{3}\right] = \text{Sin}[B]$$
$$= \frac{R_2P_2}{Q_2P_2} \quad [\text{படம் 1 (ஆ)}]$$
$$= \frac{2}{\sqrt{13}} \quad \ldots\ldots\ldots(ii)$$

$\therefore$ (i); (ii) லிருந்து, நமக்கு

$\cot\left[\sin^{-1}\sqrt{\frac{13}{17}}\right] = \sin\left[\tan^{-1}.\frac{2}{3}\right]$ என்று கிடைக்கிறது.

மாதிரி 4 : தீர் :— $\tan^{-1}\frac{x-1}{x-2} + \tan^{-1}\frac{x+1}{x+2} = \frac{\pi}{4}$.

மாதிரி ஒன்றிலிருந்து $\tan^{-1} a + \tan^{-1} b = \tan^{-1} \frac{a+b}{1-ab}$ என்று கிடைக்கிறது. ஆகையால்,

$$\tan^{-1} \frac{x-1}{x-2} + \tan^{-1} \frac{x+1}{x+2} = \tan^{-1} \frac{\frac{x-1}{x-2} + \frac{x+1}{x+2}}{1 - \frac{x-1}{x-2} \cdot \frac{x-1}{x+2}}$$

$$= \tan^{-1} \frac{2x^2 - 4}{-3}$$

$$= \frac{\pi}{4} \quad \text{(கொள்கை)}$$

$$\therefore \quad \tan^{-1} \frac{2x^2 - 4}{-3} = \frac{\pi}{4}.$$

அதாவது $\frac{2x^2 - 4}{-3} = \tan \frac{\pi}{4}$

$= \tan 45^\circ = 1$

$\therefore \quad 2x^2 - 4 = -3.$

அதாவது $2x^2 = 1$

$x^2 = \frac{1}{2}$

$\therefore \quad x = \pm \frac{1}{\sqrt{2}}.$

மாதிரி 5 : $\cos^{-1} \frac{1-x^2}{1+x^2} = 2 \tan^{-1} x$ என நிறுவுக.

$x = \tan A$ எனக் கொள்.

$$\therefore \quad \frac{1-x^2}{1+x^2} = \frac{1 - \tan^2 A}{1 + \tan^2 A}$$

$= \cos 2A$ [ சூத்திரம் 11 ]

அதாவது $\cos^{-1} \frac{1-x^2}{1+x^2} = 2A.$ ......... (i)

$\because \quad x = \tan A; \quad \tan^{-1} x = A.$

$\therefore \quad 2 \tan^{-1} x = 2.\ A$ ......... (ii)

(i), (ii) லிருந்து நமக்கு

$\cos^{-1} \frac{1-x^2}{1+x^2} = 2 \tan^{-1} x$ என்று கிடைக்கிறது.

## அப்பியாசம் 1 (அ)

1. $\sin^{-1} x + \sin^{-1} y = \sin^{-1} [x\sqrt{1-y^2} + y\sqrt{1-x^2}]$ என நிறுவுக.

[குறிப்பு : $\sin^{-1} x = A$ என்றும் $\sin^{-1} y = B$ என்றும் வைக்க.

$\therefore \quad x = \sin A; \quad y = \sin B$

$\cos A = \sqrt{1-\sin^2 A} = \sqrt{1-x^2}$

$\cos B = \sqrt{1-\sin^2 B} = \sqrt{1-y^2}$.

$\therefore \quad \sin(A+B) = \sin A \cos B + \cos A \sin B$

$= x\sqrt{1-y^2} + y.\sqrt{1-x^2}$.

$\therefore \quad A+B = \sin^{-1}\{x\sqrt{1-y^2} + y\sqrt{1-x^2}\}$.

அதாவது,

$\sin^{-1}x + \sin^{-1}y = \sin^{-1}\{x\sqrt{1-y^2} + y\sqrt{1-x^2}\}$.]

2. $\sin^{-1}x - \sin^{-1}y = \sin^{-1}[x\sqrt{1-y^2} - y\sqrt{1-x^2}]$ என நிறுவுக.

3. $\cos^{-1}x + \cos^{-1}y = \cos^{-1}[xy - \sqrt{1-x^2}\sqrt{1-y^2}]$ என நிறுவுக.

4. $\cos^{-1}x - \cos^{-1}y = \cos^{-1}[xy + \sqrt{1-x^2}\sqrt{1-y^2}]$ என நிறுவுக.

5. $\cos^{-1}\frac{7}{25} = 2\cos^{-1}\frac{4}{5}$ என நிறுவுக.

6. $\sin^{-1}\frac{24}{25} = 2\sin^{-1}\frac{3}{5}$ என நிறுவுக.

7. $\sin^{-1}(3x-4x^3) = 3\sin^{-1}x$ எனக் காண்க.

8. $\cos^{-1}(4x^3-3x) = 3\cos^{-1}x$ எனக் காண்க.

9. (i) $\tan^{-1} + \tan^{-2} = \tan^{-1}(-3)$ என்று நிறுவுக.

(ii) $\tan^{-1}2 + \tan^{-1}3 = \tan^{-1}(-1)$ என்று நிறுவுக.

(iii) $\tan^{-1}3 + \tan^{-1}4 = \tan^{-1}\left(-\frac{7}{11}\right)$ எனக் காண்க.

(iv) $\tan^{-1}\frac{1}{2} + \tan^{-1}\frac{1}{4} = \tan^{-1}\frac{6}{7}$ என நிறுவுக.

10. $\tan^{-1}\frac{3}{4} + \tan^{-1}\frac{33}{56} = \sin^{-1}\frac{12}{13}$. என நிறுவுக.

11. $a>0,\ b>0,\ ab>1$ என்றால் $\tan^{-1}a + \tan^{-1}b = \pi + \tan^{-1}\frac{a+b}{1-ab}$ எனக் காண்க.

12. $\cot\left[\sin^{-1}\frac{4}{5}\right] = \sin\left[\cot^{-1}\frac{\sqrt{7}}{3}\right]$ எனக் காண்க.

13. $\tan\left[\cos^{-1}\frac{21}{29}\right] = \cos\left[\cot^{-1}\frac{20}{\sqrt{41}}\right]$ எனக் காண்க.

14. $\cos\left[\sin^{-1}\frac{12}{13}\right] = \sin\left[\sec^{-1}\frac{13}{12}\right]$ எனக் காண்க.

15. $\sin^{-1}\frac{3}{5} + \cos^{-1}\frac{12}{13} = \cos^{-1}\frac{33}{65}$ எனக் காண்க.

16. $\sin^{-1}\frac{4}{5} - \tan^{-1}\frac{20}{21} = \sin^{-1}\frac{24}{155}$. எனக் காண்க.

17. $\cot^{-1}\frac{21}{20} - \sec^{-1}\frac{13}{12} = \text{cosec}^{-1}\frac{377}{135}$ எனக் காண்க.

18. $\tan^{-1}x + \tan^{-1}y + \tan^{-1}z = \tan^{-1}\frac{x+y+z-xyz}{1-xy-yz-zx}$. என நிறுவுக.

19. $\tan^{-1}x + \tan^{-1}y + \tan^{-1}z = \frac{\pi}{2}$ ஆனால், $xy+yz+zx = 1$ எனக் காண்க.

20. $\tan^{-1}x + \tan^{-1}y + \tan^{-1}z = \pi$ ஆனால் $x+y+z = xyz$ எனக் காண்க.

21. $\tan^{-1}\frac{ax+b}{\sqrt{b^2-ac}} + \tan^{-1}\frac{ay+b}{\sqrt{b^2-ac}} = \tan^{-1} d$ ஆனால் $\sqrt{b^2-ac}\,\{a(x+y) + 2b\} + ad\{axy + b(x+y)+c\} = 0$ எனக் காண்க.

22. $\cos^{-1}\left[\frac{b+a\cos x}{a+b\cos x}\right] = 2\tan^{-1}\left[\sqrt{\frac{a-b}{a+b}}\cdot\tan\frac{x}{2}\right]$ எனக் காண்க.

23. $\tan^{-1}a - \tan^{-1}b = \tan^{-1}\frac{a-b}{1+ab}$ என நிறுவுக.

24. $\tan^{-1}\frac{a-b}{1+ab} + \tan^{-1}\frac{b-c}{1+bc} + \tan^{-1}\frac{c-a}{1+ca} = 0$ எனக் காண்க.

25. $2\tan^{-1}\frac{1}{3} - \tan^{-1}\frac{1}{4} = \tan^{-1}\frac{8}{19}$ எனக் காண்க.

26. $\tan^{-1}\frac{1}{4} + \tan^{-1}\frac{8}{19} + \tan^{-1}\frac{1}{7} = \frac{\pi}{4}$ எனக் காண்க.

27. $4\tan^{-1}\frac{1}{5} - \tan^{-1}\frac{1}{70} + \tan^{-1}\frac{1}{99} = \frac{\pi}{4}$ எனக் காண்க.

28. $\tan^{-1}x + \tan^{-1}y + \tan^{-1}z = \frac{\pi}{4}$ எனில், $x+y+z+xy+yz+zx = 1+xyz$ என்று நிறுவுக.

29. $\cos^{-1}x + \cos^{-1}y + \cos^{-1}z = \pi$ ஆனால், $x^2+y^2+z^2+2xyz = 1$ எனக் காண்க

[குறிப்பு : $\cos^{-1}x = A$, $\cos^{-1}y = B$, $\cos^{-1}z = c$ எனக் கொள்.
$\cos^{-1}x+\cos^{-1}y+\cos^{-1}z=\pi$ (கொள்கை)

அஃதாவது,

$$A + B + C = \pi$$
$$\therefore\ A + B = \pi - C.$$
$$\therefore\ \cos(A+B) = \cos(\pi - C)$$
$$\therefore\ xy-\sqrt{1-x^2}\ \sqrt{1-y^2} = -z$$
அல்லது $xy+z = \sqrt{1-x^2}.\ \sqrt{1-y^2}$
$$\therefore\ (xy+z)^2 = (1-x^2)\ (1-y^2)$$
(அ-து.) $x^2y^2+z^2+2xyz = 1-x^2+y^2+x^2y^2$.
அல்லது, $x^2+y^2+z^2+2xyz = 1$.]

30. பின்வருவனவற்றைத் தீர்.

(i) $\tan^{-1}\left(\dfrac{x+1}{3x+1}\right)+\tan^{-1}\left(\dfrac{2x+1}{x+2}\right) = \dfrac{\pi}{4}$

[விடை : $x = 1, -\frac{1}{8}$]

(ii) $\tan^{-1}\left(\dfrac{2x+7}{4x-1}\right)-\cot^{-1}\left(2x\right) = \dfrac{\pi}{4}$

[விடை : $x = \frac{8}{9}, 1$]

(iii) $\dfrac{\pi}{4}-\tan^{-1}\left(\sqrt{\dfrac{1-x^2}{1+x^2}}\right) = \dfrac{1}{2}\sin^{-1}\dfrac{4}{9}$

[விடை : $x = \pm\frac{2}{3}$]

(iv) $\sin^{-1}\left(\dfrac{20}{x}\right)+\sin^{-1}\left(\dfrac{21}{x}\right) = \dfrac{\pi}{2}$

[விடை : $x = 29$]

(v) $\cos^{-1}\left(\dfrac{1-x^2}{1+x^2}\right)+\dfrac{1}{2}\sin^{-1}\left(\dfrac{2x}{1+x^2}\right) = \dfrac{\pi}{2}$

$\left[\text{விடை : } x = \dfrac{1}{\sqrt{3}}\right]$

(vi) $\cos^{-1}x+\cos^{-1}(2x) = \dfrac{2\pi}{3}$ $\left[\text{விடை : } x = \sqrt{\dfrac{3}{28}}\right]$

(vii) $\cos(\cot^{-1}x) = \sin(\tan^{-1})$ [விடை : $x = \pm 2$]

31. $\tan^{-1}\left(\dfrac{3x-x^3}{1-3x^2}\right) = 3\tan^{-1}x$ என நிறுவுக.

32. $2\tan^{-1}x = \sin^{-1}\dfrac{2x}{1+x^2}$ என்று நிறுவுக.

# 3. திரிகோண கணிதச் சமன்பாடுகள்

1·3.1. முற்பிரிவில் $\sin^{-1}a$க்கு முதல் மதிப்பைக் கண்டுபிடித்திருக்கிறோம். இப்பொழுது $\sin^{-1}a$க்கு உள்ள எல்லா மதிப்புக்களேயும் கண்டுபிடிப்போம். இம் மதிப்புக்களை எல்லாம் ஒரு பொதுக் கோவையில் அமைக்கமுடியும்.

1·3.2. வரை கணித முறையில் $\theta$வினுடைய பொது மதிப்பினைக் கொடுக்கப்பட்ட $\sin\theta$ன் மதிப்பிலிருந்து கண்டுபிடிப்போம்.

அதாவது, $\sin\theta = K$ எனில், $\theta$ஐக் கண்டுபிடிப்போம்.

வகை I. $K$ ஒரு நேர் எண்.

நாம் வரைபடம் மூலம், எந்தெந்த கோணத்திற்கு sineன் மதிப்பு $\theta$விற்குச் சமமாக இருக்கிறதோ, அவைகளைப் பின்வருமாறு கண்டுபிடிக்கலாம் :

$O$ஐ மையமாய் வைத்து ஏதேனும் ஒரு நீளம், உதாரணமாக ஒரு செ.மீ. ஆரமுள்ள வட்டத்தை வரை. $X^1OX$ என்பது அதன் விட்டமாக இருக்கட்டும். $P$ என்ற புள்ளியை $X^1OX$ல் எடுத்து அதன் வழியாக $PL$ ஐ $K$ செ.மீ. நீளத்திற்குச் சமமாகவும் $X^1OX$க்குச் செங்குத்தாகவும் இருக்கும்படி எடு. $L$ வழியாக $X^1OX$க்கு ஓர் இணைகோடு வரை. இந்த இணைகோடு வட்டத்தை $A$, $B$யில் வெட்டட்டும். $A$, $B$யிலிருந்து $X^1OX$க்கு வரையப்பட்ட குத்துக் கோடுகளின் அடிப்புள்ளிகள் $N$, $M$ என்று இருக்கட்டும்.



படம்-4

$ANMB$ ஒரு செவ்வகம்

$\therefore \quad NA = MB = PL = K$ (அமைப்பு)

மேலும், $OA = OB$ (வட்ட ஆரங்கள்)

$\therefore \quad \triangle AON \equiv \triangle BOM.$

$A\hat{O}N = \alpha$, எனில்,

$B\hat{O}M = A\hat{O}N = \alpha$ என்று நமக்குக் கிடைக்கிறது.

$\therefore \quad N\hat{O}B = 180^\circ - B\hat{O}M = 180^\circ - \alpha.$

இப்பொழுது,

$$\sin N\hat{O}A = \frac{NA}{OA} = \frac{K}{1} = K, \text{ மேலும்}$$

$$\sin M\hat{O}B = \frac{MB}{OB} = \frac{K}{1} = K.$$

வட்ட ஆரம் $OA$ அல்லது $OB$ நிலையில் (position) இருந்தால் கோணத்தின் sine அஃதாவது $\sin N\hat{O}A$ அல்லது $\sin M\hat{O}B$ன் மதிப்பு, கொடுக்கப்பட்ட $K$க்குச் சமம்.

வகை $II$: ($K$ எதிர் எண்)

$K$ எதிர் எண் ஆகையால், $L, A, B$ முதலிய புள்ளிகள் $X^1OX$க்குக் கீழே இருக்கும். $B$ என்பது மூன்றாவது கால் வட்டத்திலும், $A$ என்பது நான்காவது கால் வட்டத்திலும் (third and fourth quadrants) இருக்கும்

$$\sin N\hat{O}A = \frac{NA}{OA} = \frac{K}{I} = K$$

$$\sin M\hat{O}B = \frac{MB}{OB} = \frac{K}{I} = K.$$



படம்-5

ஆகையால், இவ்விரண்டு வகைகளிலும் எந்த வகையாயினும் இரண்டு கோணங்கள் தாம் கிடைக்கின்றன. அவ்விரு கோணங்களும் மிகை நிரப்புக்கோணங்களாகவே (supplementary angles) அமைகின்றன. ஏனெனில், முக்கோணங்கள் $AON$, $BOM$ இரண்டும் சர்வசமம்.

ஒவ்வொரு படத்திலும் (படம் 4, படம் 5) வட்ட ஆரம், $OA$ என்னும் நிலையிலிருக்கும் பொழுது $\hat{\alpha}$ஐக் குறித்தால், அதே நிலை $2\pi+\alpha$, $4\pi+\alpha\ldots$, $-2\pi+\alpha$, $-4\pi+\alpha$, .. முதலிய கோணங்களை முறையே $OA$ஐ இடமாக 1, 2,...முறைகள் சுற்றும்பொழுதும், வலமாக 1, 2...முறைகள் சுற்றும்பொழுதும் குறிக்கும். எனவே, ஆரம் $OA$ பொதுவாக $2l\pi+\alpha$ என்ற கோணத்தைக் குறிப்பதாக எடுத்துக் கொள்ளலாம் ($l$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

எனவே, ஒரு பகுதித் தீர்வாக $\theta = 2l\pi+\alpha$ என்று நமக்குக் கிடைக்கிறது ................ $(a)$

ஆரம், $OB$ என்ற நிலையில் $180°-\alpha$ அதாவது $\pi-\alpha$ஐக் குறிப்பதால், அதுவே பொதுவாக $2m\pi+(\pi-\alpha)$ என்னும் கோணத்தைக் குறிப்பதாக நாம் எடுத்துக்கொள்ளலாம். ($m$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண், அல்லது பூச்சியம்.)

ஆகையால், மற்றொரு பகுதித் தீர்வாக, $\theta = (2m+1)\pi-\alpha$ என்று நமக்குக் கிடைக்கிறது............$(b)$

$(a)$, $(b)$ என்ற இரண்டு கோவைகளையும் ஒன்று சேர்த்து $\theta = n\pi + (-1)^n \alpha$ என்ற பொதுக் கோவையை எழுதலாம். ............ $(A)$

($n$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண், அல்லது, பூச்சியம்; ஏனெனில், $2m+1$ என்ற ஒற்றை எண்ணிற்கு $n$ சமமாக இருக்கும்பொழுது $(-1)^n$ என்பது $-1$க்குச் சமமாக இருக்கும். அப்பொழுது கோவை $(A)$, கோவை $(b)$க்குச் சருவ சமன். இம் மாதிரியே, $2l$ என்ற இரட்டை எண்ணிற்கு '$n$' சமமாக இருந்தால், $(-1)^n$ என்பது $+1$க்குச் சமமாக இருக்கும். அப்பொழுது கோவை $(A)$, கோவை $(a)$க்குச் சருவசமன்.

ஆகையால், $\sin\theta = K$ எனில், $\theta$வின் மதிப்புகளைக் கொடுக்கும் பொதுக் கோவையாவது,

$\theta = n\pi + (-1)^n \alpha$ ($\alpha$ என்னும் கோணத்தை, $\sin\alpha = K$ ஆக இருக்கும்படி எடுத்துக் கொள்ளவேண்டும்.)

குறிப்பு :— $\sin\theta = \sin\alpha$ எனில், $\theta = n\pi + (-1)^n \alpha$.

உ-ம் :— $\sin\theta = \frac{1}{2}$ எனில், $\theta$ன் பொது மதிப்பினைக் காண்க.

$$\sin 30^\circ = \tfrac{1}{2} \text{ (சூத்திரம் (4))}$$

$$\therefore \sin\theta = \sin 30^\circ = \sin\frac{\pi}{6}$$

$$\therefore \theta = n\pi + (-1)^n \frac{\pi}{6}.$$

## 1·3·3. இப்பொழுது, $\theta$ன் பொது மதிப்பினை, கொடுக்கப்பட்ட $\cos\theta$விலிருந்து கண்டுபிடிப்போம்.

முன் போலவே, 1 செ.மீ. ஆரமுள்ள வட்டத்தை எடுத்துக் கொள். அதில் $XOX^1$ என்ற விட்டத்தையும், அதன்மீது வட்ட மையம் $O$விலிருந்து $OP = K$ செ.மீ. என்னும்படி $P$ என்ற புள்ளியை எடுத்துக்கொள்.

கொடுத்த $K$ என்னும் எண் நேராக இருந்தால் $P$ என்னும் புள்ளி $O$ன் வலப்புறம் அமையும். $K$ என்பது எதிராக இருந்தால், $P$, $O$ன் இடப்புறம் அமையும்.

மேற்கூறிய வகைகளில் எவ்வகையாயினும், $P$ வழியே செல்லும் $XPX^1$ன் குத்துக் கோடு, வட்டத்தை $A$, $B$ என்ற இரு புள்ளிகளில் வெட்டும்.



படம்-6



படம்-7

படம் 6, படம் 7 ஆகிய இவ்விரு படங்களிலும்,

$$\cos\ (X\hat{O}A) = \frac{OP}{OA} = \frac{K}{I} = K$$

மேலும்,

$$\cos\ (B\hat{O}X) = \frac{OP}{OB} = \frac{K}{I} = K.$$

முக்கோணங்கள் $POA$, $POB$ இரண்டும் சருவ சமமானகையால்

$X\hat{O}A = \alpha$ எனில், $X\hat{O}B$, எதிர்த் திசையில் இருப்பதாலும் அளவில் சமமாக இருப்பதாலும், $-\alpha$க்குச் சமம்.

ஆகையால், வட்ட ஆரம் $OA$ என்ற நிலையில் இருக்கும் பொழுது, $\theta$ன் ஒரு மதிப்பு $\alpha$ ஆகும். எனவே, வட்ட ஆரம் $OA$ என்னும் நிலையிலிருந்து பல முறைகள் (வலமாகவோ அல்லது இடமாகவோ) சுற்றி மீண்டும் $OA$க்கு வந்து சேர்ந்தால், $2l\pi+\alpha$ என்ற கோணத்தை (பொதுவாக) பெறுவோம் ($l$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

இம்மாதிரியே, வட்ட ஆரம் $OB$ என்ற நிலையிலிருக்கும்பொழுது $-\alpha$ என்ற கோணம் கிடைப்பதால், $OB$யிலிருந்து பலமுறைகள் (வலமாகவோ இடமாகவோ) சுற்றி மீண்டும் $OB$க்கு வட்ட ஆரம் வந்து சேரும்பொழுது, $2m\pi-\alpha$ என்ற கோணத்தை (பொதுவாக) அடையலாம். ($m$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

ஆகையால், $\theta$விற்கு இரு பகுதித் தீர்வாகக் கிடைப்பது,

$$\theta = 2l\pi+\alpha \ldots\ldots\ldots\ldots(a)$$
$$\theta = 2m\pi-\alpha \ldots\ldots\ldots\ldots(b)$$

(*a*), (*b*) இரண்டையும் இப்பொழுது ஒன்று சேர்த்தால், பொதுத் தீர்வாகக் கிடைக்கும் கோணவையாவது, $\theta = 2n\pi \pm \alpha$ (*n* என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண், அல்லது பூச்சியம்)........(*A*)

ஆகையால், $\cos\theta = K$ எனில் θன் மதிப்பைக் கொடுக்கும் பொதுக்கோணவை, $\theta = 2n\pi \pm \alpha$ (*n* என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண், அல்லது பூச்சியம்) ($\cos\alpha = K$ என்று இருக்குமாறு αஐ எடுத்துக்கொள்ளவேண்டும்)

குறிப்பு :— $\cos\theta = \cos\alpha$ எனில் $\theta = 2n\pi \pm \alpha$.

உ.ம் : $\cos\theta = -\frac{1}{2}$ எனில் θன் பொது மதிப்பைக்காண்.

$\cos 120 = -\cos 60° = -\frac{1}{2}$ (சூத்திரம் (5) ; (4))

$$\therefore \cos\theta = \cos 120' = \cos\frac{2\pi}{3}.$$

$$\therefore \theta = 2n\pi \pm \frac{2\pi}{3}.$$

1 3.4. கொடுக்கப்பட்ட $\tan\theta$ மதிப்பிலிருந்து θன் பொது மதிப்பினைக் கண்டுபிடிக்க.

ஏதேனும் ஒரு நீளம், உதாரணமாக 2 செ.மீ. நீளமுள்ள *MN* என்ற நேர்க்கோட்டை வரைந்து அதன் மையப்புள்ளி *O*ஐ எடுத்துக்கொள். *N*, *M* வழியே *MN*க்குச் செங்குத்தாக $NA = MB$ ($= K$ செ.மீ.) என்ற இரு கோடுகளை வரை.



படம்-8 படம்-9

*K* நேர் எண்ணாக இருந்தால் படம் 8ம், *K* எதிர் எண்ணாக இருந்தால் படம் 9ம் நமக்குக் கிடைக்கின்றன. இவ்விரு படங்களிலிருந்தும்,

$$\tan X\hat{O}A = \frac{NA}{ON} = \frac{K}{1} = K.$$

மேலும்,

$$\tan X\hat{O}B = \frac{MB}{ON} = \frac{-BM}{-MO} = \frac{-K}{-1} = K.$$

முக்கோணங்கள் $MOB$, $NOA$யில்

$BM = NA = K.$

$MO = ON = 1$ செ.மீ.,

$\hat{M} = 90^\circ = \hat{N}.$

ஆகையால், $M\hat{O}B = N\hat{O}A.$

எனவே, $BOA$ என்பது ஒரு நேர்க்கோடு.

$N\hat{O}A = \alpha$ எனில், $N\hat{O}B = \pi + \alpha$ (படம் 8—படம் 9)

ஆகையால், ஒரு பகுதித் தீர்வாக $\theta = 2l\pi + \alpha$ என்றும் மற்றொரு பகுதித் தீர்வாக $\theta = 2m\pi + (\pi + \alpha)$ என்றும் கிடைக்கின்றன. ($l$, $m$ என்பவை நேர் அல்லது எதிர் முழுவெண்கள் அல்லது பூச்சியம்)

மேற்கூறிய இரு தீர்வுகளையும் ஒன்று சேர்த்தால் $\theta = n\pi + \alpha$ என்ற பொதுத்தீர்வு கிடைக்கின்றது. ($n$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்.)

ஆகையால், $\tan\theta = K$ எனில் $\theta$ன் மதிப்பைக் கொடுக்கும் பொதுக்கோவை, $\theta = n\pi + \alpha$ ($n$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்) ($\tan\alpha = K$ என்று இருக்குமாறு $\alpha$ஐ எடுத்துக்கொள்ளவேண்டும்)

குறிப்பு : $\tan\theta = \tan\alpha$ எனில் $\theta = n\pi + \alpha$.

உதாரணம் : $\tan\theta = -\frac{1}{\sqrt{3}}$ எனில் $\theta$ன் பொது மதிப்பை காண்போம். $\tan 150^\circ = \tan(180^\circ - 30^\circ) = -\tan 30^\circ = -\frac{1}{\sqrt{3}}$

$$\therefore \quad \tan\theta = \tan 150^\circ = \tan\frac{5\pi}{6}.$$

$$\therefore \quad \theta = n\pi + \frac{5\pi}{6}$$

1·3.5. $\sin\theta$, $\cos\theta$ அல்லது $\tan\theta$ன் மதிப்புக் கொடுக்கப்பட்டு அதிலிருந்து பொது மதிப்புக்கோவையை வேறு முறையில் கண்டுபிடித்தல்.

$\sin\theta = K$ எனக் கொள். கோணம் $\alpha$ஐ $\sin\alpha = K$ என்று இருக்குமாறு கண்டுபிடித்துக்கொள்.

ஆகையால், $\sin\theta - \sin\alpha = 0.$

அதாவது, $2\cos\frac{\theta+\alpha}{2}.\sin\frac{\theta-\alpha}{2} = 0.$ (சூத்திரம் (7))

$$\therefore \quad \cos\frac{\theta+\alpha}{2} = 0 \quad \ldots \quad \ldots \quad (1)$$

அல்லது $\sin\frac{\theta-\alpha}{2} = 0$ ... ... (2)

ஆகையால், $\frac{\theta+\alpha}{2} = (2m+1)\frac{\pi}{2}$ ((1)லிருந்து)

அல்லது, $\theta+\alpha = (2m+1)\pi$ ... ... ... (a)

($m$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்.)

(2) லிருந்து $\frac{\theta-\alpha}{2} = l\pi$

அல்லது, $\theta+\alpha = 2l\pi$ ... ... ... ... ... (b)

($l$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

($a$), ($b$) இரண்டிலிருந்தும் வரும் பொதுக்கோவை $\theta = n\pi + (-1)^n\alpha$.

இம்மாதிரியே, $\cos\theta - \cos\alpha$ ஆனல்

$\cos\theta - \cos\alpha = 0$

$\therefore\ 2\sin\frac{\theta+\alpha}{2}.\ \sin\frac{\alpha-\theta}{2} = 0$ (சூத்திரம் (7))

அல்லது, $2\sin\frac{\theta+\alpha}{2}.\ \sin\frac{\theta-\alpha}{2} = 0.$

ஆகையால் $\sin\frac{\theta+\alpha}{2} = 0$ ... ... ... (1)

அல்லது, $\sin\frac{\theta-\alpha}{2} = 0$ ... ... ... (2)

(1) லிருந்து, $\frac{\theta+\alpha}{2} = m\pi$

அல்லது $\theta+\alpha = 2m\pi$ ... ... ... ($a$)

($m$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

(2) லிருந்து, $\frac{\theta-\alpha}{2} = l\pi$

அல்லது $\theta-\alpha = 2l\pi$ ... ... ... ($b$)

($l$ என்பது, ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண், அல்லது பூச்சியம்)

$(a)$, $(b)$லிருந்து கிடைக்கும் பொதுக்கோவை, $\theta = 2n \pm \alpha$ ($n$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

$\tan\theta = \tan\alpha$ எனில்,

$$\frac{\sin\theta}{\cos\theta} - \frac{\sin\alpha}{\cos\alpha} = 0.$$

அல்லது,

$\sin\theta\cos\alpha - \cos\theta\sin\alpha = 0.$

அ∴தாவது, $\sin(\theta - \alpha) = 0.$

ஆகையால் $\theta - \alpha = n\pi$

அல்லது, $\theta = n\pi + \alpha$. ($n$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண் அல்லது பூச்சியம்)

1·36. சில திரிகோண விகிதச் சமன்பாடுகளைத் தீர்க்கும் பொழுது $\sin\theta = \frac{\sqrt{5}-1}{4}$ அல்லது $\frac{\sqrt{5}+1}{4}$ எனக் கிடைக்கும்.

அதற்காக நாம் இப்பொழுது $\sin 18° = \frac{\sqrt{5}-1}{4}$ என்றும், $\sin 54°$ $= \frac{\sqrt{5}+1}{4}$ என்றும் நிரூபிப்போம்.

நிருபணம் :-

$\theta = 18°$ எனில்.

$5\theta = 90°$

அதாவது $3\theta + 2\theta = 90°$

ஆகையால் $3\theta = 90° - 2\theta$

எனவே $\cos 3\theta = \cos(90° - 2\theta)$

$= \sin 2\theta$ .... ... ... $(A)$

ஆனல் $\cos 3\theta = 4\cos^3\theta - 3\cos\theta$ (சூத்திரம் (12))

$\sin 2\theta = 2\sin\theta . \cos\theta$ (சூத்திரம் (9))

ஆகையால், $(A)$யிலிருந்து கிடைப்பது,

$4\cos^3\theta - 3\cos\theta = 2\sin\theta . \cos\theta$

அதாவது, $\cos\theta\{4\cos^2\theta - 3 - 2\sin\theta\} = 0.$ .... .... $(B)$

ஆனல் $\theta = 18°$; ஆகையால் $\cos\theta \pm 0.$

∴ $(B)$யிலிருந்து $4\cos^2\theta - 2\sin\theta - 3 = 0.$ என்று கிடைக்கும்.

அதாவது, $4 - 4\sin^2\theta - 2\sin\theta - 3 = 0.$

∴ $4\sin^2\theta + 2\sin\theta - 1 = 0$

இந்த இருபடிச் சமன்பாட்டைத் தீர்த்தால்

$$\sin\theta = \frac{-2 \pm \sqrt{4+16}}{8}$$

$$= \frac{-2 \pm 2\sqrt{5}}{8}$$

$$= \frac{\sqrt{5}-1}{4} \text{ அல்லது } \frac{-\sqrt{5}-1}{4}$$

$\theta$, 18° ஆனால் $\sin\theta \pm \frac{-\sqrt{5}-1}{4}$ ($\because$ $\theta$ முதல் கால் வட்டத்தில் அமைந்துள்ளது.)

$$\therefore \quad \sin\theta = \frac{\sqrt{5}-1}{4}, \text{ அதாவது, } \sin 18^\circ = \frac{\sqrt{5}-}{4}$$

இப்பொழுது, $\cos 36^\circ = \frac{\sqrt{5}+1}{4}$ என நிரூபிப்போம்.

நிரூபணம் : $\cos 2A = 1-2\sin^2 A$ (சூத்திரம் (9) )

ஆகையால் $A$க்கு 18° பிரதியிட

$\cos 36^\circ = 1 - 2\sin^2 18^\circ$ எனக் கிடைக்கிறது.

அதாவது, $\cos 36^\circ = 1-2.\left\{\frac{\sqrt{5}-1}{4}\right\}^2$

$$= 1 - \frac{6 \quad 2\sqrt{5})}{8}$$

$$= \frac{2+2\sqrt{5}}{8} = \frac{\sqrt{5}+1}{4}.$$

ஆகையால், $\cos 36^\circ = \frac{\sqrt{5}+1}{4}$

குறிப்பு : 72°யும் 18°யும் நிரப்புக் கோணங்கள்.

ஆகையால் $\cos 72^\circ = \sin 18^\circ = \frac{\sqrt{5}-1}{4}$ ;

$$\sin 54^\circ = \cos 36^\circ = \frac{\sqrt{5}+1}{4}.$$

1·37· $a\cos\theta + b\sin\theta = c$ என்னும் சமன்பாட்டைத் தீர்க்க.

வகை I. $a\cos\theta + b\sin\theta = c$ (கொள்கை).

$\sqrt{a^2+b^2}$ ஆல் முழுவதும் வகுக்க.

$$\therefore \frac{a}{\sqrt{a^2+b^2}}\cos\theta + \frac{b}{\sqrt{a^2+b^2}}\sin\theta = \frac{c}{\sqrt{a^2+b^2}} \quad \ldots \text{(I)}$$

$a$, $b$ கொடுக்கப்பட்டிருந்தால் $\frac{b}{a}$ இன் மதிப்புக் கிடைக்கும்.

$\alpha$ என்னும் கோணத்தை $\tan\alpha = \frac{b}{a}$ என்னும்படி எடுத்தால், கணித அட்டவணையிலிருந்து $\alpha$ இன் மதிப்பைக் கண்டுபிடிக்கலாம். எனவே, $\tan\alpha = \frac{b}{a}$ ஆனால், $\frac{a}{\sqrt{a^2+b^2}}$, $\cos\alpha$ விற்கும், $\frac{b}{\sqrt{a^2+b^2}}$, $\sin\alpha$ விற்கும் சமமாகும்.

(I) லிருந்து, $\cos a\cdot\cos\theta+\sin a\cdot\sin\theta = \frac{c}{\sqrt{a^2+b^2}}$ எனக் கிடைக்கிறது. கணித அட்டவணையிலிருந்து $\beta$ என்னும் கோணத்தை $\cos\beta = \frac{c}{\sqrt{a^2+b^2}}$ என்னும்படி கண்டுபிடிக்கலாம். ஆகையால், $\cos a\cdot\cos\theta + \sin a\sin\theta = \cos\beta$.

அதாவது, $\cos(\theta-\alpha) = \cos\beta$.

ஆகையால், $\theta-\alpha = 2n\pi \pm \beta$.

அதாவது, $\theta = 2n\pi + \alpha \pm \beta$.

குறிப்பு (1): $c > \sqrt{a^2+b^2}$ ஆனால், $\frac{c}{\sqrt{a^2+b^2}} > 1$ ஆகும். ஆகையால், $\beta$ என்ற கோணத்தைக் கண்டுபிடிக்க இயலாது.

இம்மாதிரி நிலையில், $a\cos\theta + b\sin\theta = c$ என்னும் சமன்பாட்டிற்குத் தீர்வுகாண முடியாது.

குறிப்பு (2): $c$ எதிர் எண்ணாயின், $-c$ நேர் எண் ஆகும். அஃது சமயம், $\beta$ என்னும் கோணத்தை $\cos\beta = \frac{-c}{\sqrt{a^2+b^2}}$ என்னும்படி கண்டுபிடித்து, கொடுக்கப்பட்ட சமன்பாட்டை $\cos\theta\cdot\cos\alpha + \sin\theta\cdot\sin\alpha = -\cos\beta = \cos(\pi-\beta)$ என்று மாற்றியமைத்துத் தீர்வு காணலாம்.

குறிப்பு (3) :— $\alpha$ என்னும் கோணத்தை $\sin\alpha$, $\frac{a}{\sqrt{a^2+b^2}}$ க்குச்

சமமாகவும், $\beta$ என்னும் கோணத்தை $\sin\beta$, $\frac{c}{\sqrt{a^2+b^2}}$க்குச் சமமாக வும் இருக்கும்படி கண்டுபிடித்தால், கொடுக்கப்பட்ட சமன்பாடு $a\cos\theta+\beta\sin\theta=C$ ஐ, $\sin(\theta+\alpha)=\sin\beta$ என்று மாற்றி யமைத்துத் தீர்வு காண இயலும்.

$C$ நேர் எண்ணாக இருந்தால், $\beta$ நேர் எண்ணாகவும் $C$ எதிராக இருந்தால் $\beta$ எதிராகவும் இருக்கும். எனவே, $C$ நேர் எண்ணாக இருக்கும்பொழுது, $\sin(\theta+\alpha)=\sin\beta$ ஆகவும், $C$ எதிர் எண்ணாக இருந்தால், $\sin(\theta+\alpha)=\sin(-\beta)$ ஆகவும் இருக்கும்.

வகை II $t=\tan\frac{\theta}{2}$ எனக் கொள்.

$$\therefore \quad \cos\theta = \frac{1-t^2}{1+t^2};$$

$$\sin\theta = \frac{2t}{1+t^2}; \text{ (சூத்திரம் (II))}$$

எனவே, $a\cos\theta+b\sin\theta=C$ என்னும் சமன்பாடு,

$$a\cdot\frac{1-t^2}{1+t^2}+b.\frac{2t}{1+t^2}=c \text{ என்று மாறும்.}$$

$$\therefore \quad t^2(c+a)-2bt+c-a=0. \qquad (A)$$

$(A)$ யிலிருந்து, $t$க்கு இரு மதிப்புக்கள் கிடைக்கின்றன. அதாவது, $\tan\frac{\theta}{2}$க்கு இரு மதிப்புக்கள் கிடைக்கின்றன. அட்ட வணையிலிருந்து $\frac{\theta}{2}$க்கு இரு மதிப்புக்கள் பெறலாம். இம் மதிப்புக் புக்களை இரட்டித்தால் $\theta$ன் இரு மதிப்புக்களும் கிடைக்கும்.

குறிப்பு :— $\tan\frac{\theta}{2}$க்கு வகை IIன் மூலம் கிடைக்கும் இரு மதிப்புக் களில் ஏதேனும் ஒன்றோ அல்லது இரண்டுமோ நான்கைக் (4) காட்டி டிலும் பெரிதாக இருக்குமாயின் அட்டவணையின் மூலம் $\frac{\theta}{2}$ இன் மதிப்புக்களைச் சரியாகக் கண்டுபிடிக்க இயலாது. (கணித அட்டவணை யைப் பார்க்கவும்).

எனவே, வகை I, வகை IIஐக்காட்டிலும், எப்பொழுதும் பயன் தரத்தக்கது.

## மாதிரிக் கணக்குகள்

1·38

மாதிரி 1. தீர்:— $3 \cos 2\theta + \sin \theta = 1$.

$\cos 2\theta = 1 - 2 \sin^2\theta$ (சூத்திரம் (9)) கொடுக்கப்பட்ட சமன்பாட்டில் $\cos 2\theta = 1-2 \sin^2\theta$எனப் பிரதியிட $3(1-2\sin^2\theta) + \sin\theta - 1 = 0$ எனக் கிடைக்கிறது.

$\therefore \quad 6 \sin^2\theta - \sin\theta - 2 = 0.$

அதாவது $(3 \sin\theta - 2) \quad (2 \sin\theta + 1) = 0.$

$\therefore \qquad \sin\theta = \frac{2}{3}$ அல்லது,

$\sin\theta = -\frac{1}{2}$

கணித அட்டவணையிலிருந்து,

$\sin 41° \ 49' = \frac{2}{3}$ என்று கிடைக்கிறது. கோணம் $41° \ 49'$ஐ ஆரையின் அளவில் சுலபமாகச் சொல்ல முடியாததால் $\theta$ன் பொதுக் கோவையில், $\pi^c$ என்பதற்கு 180° எடுத்துக் கொள்ளுகிறோம்.

ஆகையால்,

$\theta = n.\ 180° + (-1)^n.\ \ 41° \ 49'$ (§ 1·32) [தீர்வு (i)]

$\sin\theta = -\frac{1}{2}$இலிருந்து $\theta = n\pi - (-1)^n.\ \frac{\pi}{6}$ [தீர்வு (ii)]

மாதிரி 2: தீர் : — $\cos 2\theta + 5 \cos\theta = 2$.

$\cos 2\theta = 2 \cos^2\theta - 1$ (சூத்திரம் (9)) என்று கொடுத்த கோவையில் பிரதியிட,

$2\cos^2\theta - 1 + 5\cos\theta - 2 = 0$ என்று கிடைக்கிறது.

அதாவது, $2\cos^2\theta + 5\cos\theta - 3 = 0$.

$\therefore \quad (2\cos\theta - 1)\ (\cos\theta + 3) = 0.$

ஆகையால், $\cos\theta = \frac{1}{2}$ அல்லது,

$\cos\theta = -3.$

[$\cos\theta \neq -3$; ஏனெனில், $\cos\theta$ன் மதிப்பு $-1$க்கும் $+1$க்கும் இடையேதான் இருக்க முடியும்.

ஆகையால், $\cos\theta = \frac{1}{2}$. என்ற தீர்வுதான் ஒப்புக்கொள்ளத்தக்கது.

ஆனால், $\cos 60° = \frac{1}{2}$.

ஆகையால், $\cos\theta = \cos 60° = \cos\frac{\pi}{3}$.

எனவே, $\theta = 2n\pi \pm \frac{\pi}{3}$ (§ 1·3.3)

மாதிரி 3: தீர்:— $\tan x - \sqrt{3}\cot x + 1 = \sqrt{3}$

$\tan x + 1 - \sqrt{3}(\cot x + 1) = 0$ (கொள்கை).

அதாவது, $(\tan x + 1) - \sqrt{3}\left(\frac{1 + \tan x}{\tan x}\right) = 0$

அல்லது, $\tan x(\tan x + 1) - \sqrt{3}(\tan x + 1) = 0$.

அதாவது, $(\tan x + 1)(\tan x - \sqrt{3}) = 0$.

ஆகையால், $\tan x = -1$ அல்லது
$\tan x = \sqrt{3}$

$\tan x = -1$ என்றால், $x = n\pi - \frac{\pi}{4}$ (§ 1·3.4)

[தீர்வு (i)]

$\tan x = \sqrt{3}$ என்றால், $x = n\pi + \frac{\pi}{3}$ [தீர்வு (ii)]

மாதிரி 4: தீர் :— $\sin\theta = 4\cos(\theta + 30°)$

$\sin\theta = 4\cos(\theta + 30°)$ (கொள்கை)

$= 4\{\cos\theta.\cos 30° - \sin\theta.\sin 30°\}$ (சூத்திரம் (6))

$\therefore \sin\theta\{1 + 4\sin 30°\} = 4\cos\theta\cos 30°$.

அதாவது, $\sin\theta\{1 + 4.\frac{1}{2}\} = 4.\cos.\theta\sqrt{\frac{3}{2}}$ (சூத்திரம் (4))

$\therefore \tan\theta = \frac{\sqrt{2}}{3}$.

$= \tan 49° 7'$

எனவே, $\theta = n\,180° + 49° 7'$ (§ 1·3.4)

மாதிரி 5: $\theta + \frac{\pi}{4} = n\pi + (-1)^n.\frac{\pi}{6}$ம்

$\theta - \frac{\pi}{4} = 2n\pi \pm \frac{\pi}{3}$ம் ஒரே கோணங்களைக் குறிக்கின்றனவா? ஏன்?

$\theta + \frac{\pi}{4} = n\pi + (-1)^n.\frac{\pi}{6}$ என்னும் கோணவை,

$\sin\left(\theta + \frac{\pi}{4}\right) = \sin\frac{\pi}{6}$ ன் பொதுத் தீர்வு.

அதாவது, $\sin\left(\theta + \frac{\pi}{4}\right) = \frac{1}{2}$. (i)

$\theta - \frac{\pi}{4} = 2n\pi \pm \frac{\pi}{3}$ என்னும் கோணவை,

$\cos\left(\theta - \frac{\pi}{4}\right) = \cos\frac{\pi}{3}$ ன் பொதுத் தீர்வு.

அதாவது, $\cos\left(\theta - \frac{\pi}{4}\right) = \frac{1}{2}$ (ii)

ஆனால், சமன்பாடு (i)லிருந்து உடனடியாகவே சமன்பாடு (ii)ஐப் பின்வருமாறு கொண்டுவரலாம்.

$$\cos\left(\theta - \frac{\pi}{4}\right) \equiv \cos\left(\frac{\pi}{4} - \theta\right)$$ (சூத்திரம் (5))

$$\equiv \sin\left\{\frac{\pi}{2} - \left(\frac{\pi}{4} - \theta\right)\right\}$$

(சூத்திரம் (5))

அதாவது, $$\equiv \sin\left(\frac{\pi}{2} - \frac{\pi}{4} + \theta\right)$$

$$\equiv \sin\left(\frac{\pi}{4} + \theta\right)$$

$$\equiv \sin\left(\theta + \frac{\pi}{4}\right)$$

ஆகையால்,

$\sin\left(\theta + \frac{\pi}{4}\right) = \frac{1}{2}$ம்

$\cos\left(\theta - \frac{\pi}{4}\right) = \frac{1}{2}$ம் ஒரே சமன்பாட்டைக் குறிக்கும்.

ஆகையால், இவ்விரு சமயங்களிலிருந்து கிடைக்கும் $\theta$இன் பொதுக் கோணவை ஒன்றாகத்தான் இருக்கும்.

$\theta + \frac{\pi}{4} = n\pi + (-1)^n \frac{\pi}{6}$ என்னும் கோவையைக் குறிக்கும் வட்ட ஆர நிலைகள் (இரண்டு நிலைகள், ஒன்று $n$ ஒற்றை எண்ணாக இருக்கும்பொழுதும், மற்றது $n$ இரட்டை எண்ணாக இருக்கும்பொழுதும்), $\theta + \frac{\pi}{4} = 2n\pi \pm \frac{\pi}{3}$ என்னும் கோவையையும் குறிக்கின்றன என்பதை நாம் படம் வரைந்து நன்கு அறியலாம்.

மாதிரி 6: தீர்: $\sqrt{3} \sin 2\theta + \cos 2\theta = 2$.

$a \cos\theta + b \sin\theta = c$ என்னும் சமன்பாடு கொடுக்கப்பட்டால், $\sqrt{a^2 + b^2}$ ஆல் சமன்பாட்டை வகுக்க வேண்டும்.

$$\sqrt{3} \sin 2\theta + \cos 2\theta = 2 \text{ (கொள்கை)}$$

$\sqrt{3 + 1}$ ஆல் முழுவதும் வகுக்க.

$$\therefore \quad \frac{\sqrt{3}}{2} \sin 2\theta + \tfrac{1}{2} \cos 2\theta = \tfrac{2}{2}$$

அல்லது, $\cos 30°. \sin 2\theta + \sin 30° \cos 2\theta = 1.$

அதாவது, $\sin (2\theta + 30°) = 1 = \sin 90°$

$$\therefore \quad \sin\left(2\theta + \frac{\pi}{6}\right) = \sin\frac{\pi}{2}$$

$$\therefore \quad 2\theta + \frac{\pi}{6} = n\pi + (-1)^n \frac{\pi}{2} \quad (\S\ 1{\cdot}3.2)$$

$$\therefore \quad \theta = n\frac{\pi}{2} + (-1)^n \frac{\pi}{4} - \frac{\pi}{12}$$

மாதிரி 7: தீர்: $4 \cos x - 3 \sin x + 2 = 0$

$t = \tan\frac{x}{2}$ எனக்கொள்.

$$\therefore \quad \cos x = \frac{1-t^2}{1+t^2};$$

$$\sin x = \frac{2t}{1+t^2} \quad \text{(சூத்திரம் 11)}$$

$\cos x. \sin x$, மதிப்புக்களைக் கொடுத்த சமன்பாட்டில் பிரதியிட.

$$\therefore \quad 4.\frac{1-t^2}{1+t^2} - 3\frac{2t}{1+t^2} + 2 = 0$$

அதாவது, $4(1-t^2) - 6t + 2(1+t^2) = 0$

அல்லது, $t^2+3t-3=0$

$$\therefore \quad t = \frac{-3 \pm \sqrt{9+12}}{2}$$

$$= \frac{-3 \pm 4\ 583}{2}$$

$= 0{\cdot}7915$ அல்லது $-3{\cdot}7915$

அதாவது, $\tan \frac{x}{2} = 0{\cdot}7915 = \tan 38^\circ\ 22'$ அல்லது

$$\tan \frac{x}{2} = -3{\cdot}7915 = \tan(-75^\circ\ 13')$$

எனவே, $x = n \cdot 360^\circ + 76^\circ\ 44'$ அல்லது

$$x = n\ 360^\circ - 150^\circ\ 26'$$

மாதிரி 8. $5 \sin x - 7 \cos x$ன் மிகப் பெரிய, மிகச் சிறிய மதிப்புக்களைக் கண்டுபிடி.

$$5 \sin x - 7 \cos x = \left[\frac{5}{\sqrt{5^2+7^2}} \sin x - \frac{7}{\sqrt{5^2+7^2}} \cos x\right] \sqrt{5^2-7^2}$$

$$= \sqrt{74} \left[\sin x.\ \cos \alpha - \cos x.\ \sin \alpha\right]$$

$\tan \alpha = \frac{7}{5} \quad \therefore \quad \alpha = 54^\circ\ 28')$

$$\therefore \quad 5 \sin x - 7 \cos x = \sqrt{74}\left[\sin(x-\alpha)\right]$$

$$= \sqrt{74} \sin(x - 54^\circ\ 28')$$

$\sin\theta$ன் மிகப் பெரிய மதிப்பு 1 என்றும், $\sin\theta$ன் மிகச் சிறிய மதிப்பு $-1$ என்றும் நமக்குத் தெரிந்ததே. ஆகையால், $x$க்கு $144^\circ$ [illegible] ln $x-7 \cos x$க்கு $\sqrt{74} \sin 90^\circ$, அதாவது $\sqrt{74}$ என்ற மிகப் பெரிய மதிப்புக் கிடைக்கிறது. இதேபோல், $x$க்கு $-35^\circ\ 32'$ என்று பிரதியிட்டால் $5 \sin.x - 7 \cos x$க்கு $\sqrt{74}. \sin(-90^\circ)$ அதாவது $-\sqrt{74}$ என்ற மிகச் சிறிய மதிப்புக் கிடைக்கிறது.

மாதிரி 9. பெருக்கல் சூத்திரத்தைப் பயன்படுத்தி $\sin 10x + \cos 20x = 0$ஐத் தீர்.

$$\sin 10x = \cos\left(\frac{\pi}{2} - 10x\right) \qquad \text{(சூத்திரம் (5))}$$

$\therefore$ $\sin 10x + \cos 20x = 0$ என்னும் சமன்பாட்டை $\cos\left(\frac{\pi}{2} - 10x\right) + \cos 20x = 0$ என்று மாற்றியமைக்கலாம்.

அதாவது,

$$2\cos\left(5x+\frac{\pi}{4}\right)\cdot\cos\left(15x-\frac{\pi}{4}\right)=0 \qquad \text{(சூத்திரம் 7))}$$

ஆகையால், $\cos\left(5x+\frac{\pi}{4}\right)=0=\cos\left(\frac{\pi}{2}\right)$ அல்லது

$$\cos\left(15x-\frac{\pi}{4}\right)=0=\cos\left(\frac{\pi}{2}\right).$$

$\therefore$ $5x+\frac{\pi}{4}=2n\pi\pm\frac{\pi}{2}$ அல்லது

$$15x-\frac{\pi}{4}=2n\pi\pm\frac{\pi}{2}$$

எனவே, $x=2n\frac{\pi}{5}\pm\frac{\pi}{10}-\frac{\pi}{20}$ அல்லது

$$x=2n\frac{\pi}{15}\pm\frac{\pi}{30}+\frac{\pi}{60}$$

மாதிரி 10. $\tan p\theta = \cot q\theta$ என்னும் சமன்பாட்டைத் தீர்த்து $\theta$ன் பல்வேறு மதிப்புக்கள் கூ. வி. இல் இருக்கின்றன எனக் காண்பி. (கூ. வி.: A.P.)

$\tan p\theta = \cot q\theta$ (கொள்கை)

$$=\tan\left(\frac{\pi}{2}-q\theta\right)$$

$\therefore$ $p\theta = n\pi+\frac{\pi}{2}-q\theta$

$$\theta(p+q)=n\pi+\frac{\pi}{2}$$

$\therefore$ $\theta = n\frac{\pi}{p+q}+\frac{\pi}{2(p+q)}$

$(n=0, \pm1, \pm2, \pm3 \ldots\ldots\ldots\ldots)$

ஆகையால், $\theta$ன் பல்வேறு மதிப்புக்களாவன,

$$\ldots\ldots\ldots\ldots,\ -\frac{2\pi}{p+q}+\frac{\pi}{2(p+q)},\quad \frac{-\pi}{p+q}+\frac{\pi}{2(p+q)},\quad \frac{\pi}{2(p+q)},$$

$\frac{\pi}{p+q}+\frac{\pi}{2(p+q)},\ldots\ldots\ldots\ldots$ . இவைகள் ஒரு கூட்டுவிருத்தியில் (கூ.வி.) அமைகின்றன. இந்த கூ.வி.யின் பொது வித்தியாசம் (common difference) $= \frac{\pi}{p+q}$.

மாதிரி 11. தீர் :- $\tan x + \tan 2x + \tan 3x = 0$

$t = \tan x$ எனக்கொள்.

$$\therefore \quad \tan 2x = \frac{2t}{1-2t} \qquad \text{(சூத்திரம் (11))}$$

$$\tan 3x = \frac{3t-t^3}{1-3t^2} \qquad \text{(சூத்திரம் (12))}$$

$\tan x + \tan 2x + \tan 3x = 0$ (கொள்கை)

$$\therefore \quad t + \frac{2t}{1-t^2} + \frac{3t-t^3}{1-3t^2} = 0.$$

அதாவது, $$t\left\{1+\frac{2}{1-t^2}\right\} + t\left\{\frac{3-t^2}{1-3t^2}\right\} = 0$$

அல்லது, $$t\left\{\frac{3-t^2}{1-t^2}+\frac{3-t^2}{1-3t^2}\right\} = 0$$

$$t(3-t^2)\cdot\left\{\frac{2-4t^2}{(1-t^2)(1-3t^2)}\right\} = 0$$

$$2\cdot t(3-t^2)(1-2t^2) = 0$$

$t = 0$ அல்லது,

$t = \pm\sqrt{3}$ அல்லது

$t = \pm\frac{1}{\sqrt{2}}$

அதாவது, $\tan x = 0 = \tan 0$ அல்லது,

$\tan x = \pm\sqrt{3} = \tan\left(\pm\frac{\pi}{3}\right)$

அல்லது, $\tan x = \pm\frac{1}{\sqrt{2}} = \tan(\pm 35^\circ\ 16')$

எனவே, $x = n\pi$ அல்லது

$x = n\pi \pm \frac{\pi}{3}$ அல்லது,

$x = n180^\circ \pm 35^\circ\ 16'$.

மாதிரி 12. தீர் : $\cos^3 x \sin 3x + \sin^3 x . \cos 3x = \frac{3}{4}$

$\sin 3x = 3 \sin x - 4 \sin^3 x;$

$\cos 3x = 4 \cos^3 x - 3 \cos x$ (சூத்திரம் (12) )

$\cos^3 x \cdot \sin 3x + \sin^3 x \cdot \cos 3x = \frac{3}{4}$ (கொள்கை)

$\cos^3 x(3 \sin x - 4 \sin^3 x) + \sin^3 x(4\cos^3 x - 3 \cos x) = \frac{3}{4}$.

அகாவது, $3 \sin x \cos x (\cos^2 x - \sin^2 x) = \frac{3}{4}$.

அல்லது $\frac{3}{2} \cdot \sin 2x \cdot (\cos 2x) = \frac{3}{4}$. (சூத்திரம் 9) )

அல்லது, $\frac{3}{4} \sin 4x = \frac{3}{4}$. (சூத்திரம் 9) )

எனவே, $\sin 4x = 1 = \sin \frac{\pi}{2}$.

$4x = n\pi + (-1)^n \frac{\pi}{2}$

அல்லது, $x = n\frac{\pi}{4} + (-1)^n \frac{\pi}{8}$

## அப்பியாசம் 1 (ஆ)

θன் பொதுக் கோவையைக் கண்டுபிடி : (கேள்விகள் 1 லிருந்து 10 வரை.)

1. $\sin \theta = \frac{\sqrt{3}}{2}$ [விடை $\theta = n\pi + (-1)^n \frac{\pi}{3}$ ]

2. $\sin \theta = -\frac{1}{\sqrt{2}}$ [விடை $\theta = n\pi - (-1)^n \frac{\pi}{4}$ ]

3. $\cos \theta = \frac{1}{2}$ [விடை $\theta = 2n\pi \pm \frac{\pi}{3}$ ]

4. $\sec \theta = -\frac{2}{\sqrt{3}}$ [விடை $\theta = 2n\pi \pm \frac{5\pi}{6}$ ]

5. $\sec \theta = -\sqrt{2}$ [விடை $\theta = 2n\pi \pm \frac{3\pi}{4}$ ]

6 $\operatorname{cosec}\theta = -3$ [விடை $\theta = n\,180^\circ - (-1)^n\ 19^\circ 28'$]

7. $\tan^2\theta = 3$ [விடை $\theta = n\pi \pm \frac{\pi}{3}$ ]

8 $\cos^3\theta = -\frac{1}{3\sqrt{3}}$ [விடை $\theta = n\pi - \frac{\pi}{3}$ ]

9. $\sec^2\theta = 4.$ [விடை $\theta = 2n\pi \pm \frac{\pi}{3};$

$\theta = 2n\pi \pm \frac{2\pi}{3}$ ]

10. $\operatorname{cosec}^2\theta = \frac{4}{3}$ [விடை $\theta = n\pi + (-1)^n\frac{\pi}{3}$ ;

$\theta = n\pi + (-1)^n\frac{\pi}{3}$ ]

11. $\cos\theta = -\frac{1}{\sqrt{2}}$; $\tan\theta = 1$ என்னும் இரு சமன்பாடுகளின் பொதுக் கோணம் $\theta$ன் பொது மதிப்பு (general value) $2n\pi + \frac{5\pi}{4}$ எனக் காண்க.

12. $\sin(\theta+\phi) = \frac{1}{2}$; $\cos(\theta-\phi) = -\frac{1}{2}$ எனில் $\theta$, $\phi$ஐக் கண்டுபிடிக்க.

[விடை $\theta = \frac{\pi}{2}(n+2m) + (-1)^w\frac{\pi}{12} \pm \frac{\pi}{3};$

$\phi = \frac{\pi}{2}(n-2m) + (-1)^w\frac{\pi}{12} \pm \frac{\pi}{3}$ ]

13. $\tan(\theta+\phi) = \frac{1}{\sqrt{3}}$; $\cos(\theta-2\phi) = \frac{1}{2}$ எனில் $\theta$, $\phi$ஐக் கண்டுபிடிக்க.

[விடை $\theta = \frac{2\pi}{3}(n+m) + \frac{\pi}{9} \pm \frac{\pi}{9};$

$\phi = \frac{\pi}{3}(n-2m) + \frac{\pi}{8} \pm \frac{\pi}{9}$ ]

14. $\cos\theta = \tan\phi$; $\sin\theta = \sec\phi$ என்றால் $\theta$, $\phi$ஐக் கண்டு பிடிக்க.

$$\left[\text{விடை } \theta = 2(n+1)\frac{\pi}{1};\ \phi = m\pi\right]$$

பின் வருவனவற்றைத் தீர்:

15. $4\cos\theta - 3\sec\theta = 2\tan\theta$

$$\left[\text{விடை } \theta = n\pi + (-1)^n\frac{\pi}{10};\quad \theta = n\pi - (-1)^n\frac{3\pi}{10}\right]$$

16. $11\sec\theta + 3\tan\theta = 20\cos\theta$

$$[\text{விடை } \theta = n(180^\circ) + (-1)^n\, 56^\circ\, 5'; \quad \theta = n(180^\circ) - (-1)^n\, 48^\circ\, 35']$$

17. $\sin x = \cos 2x$

$$\left[\text{விடை } x = n\pi + (-1)^n\frac{\pi}{6};\quad x = n\pi - (-1)^n\frac{\pi}{2}\right]$$

18. $2\cos^2\theta + 3\sin\theta - 3 = 0.$

$$\left[\text{விடை } \theta = m\pi + (-1)^m\frac{\pi}{2};\quad \theta = n\pi + (-1)^n\frac{\pi}{6}\right]$$

19. $4\cos 2\theta + 6\sin\theta - 5 = 0$

$$[\text{விடை } \theta = n(180^\circ) + (-1)^n\, 30^\circ; \quad \theta = m(180^\circ) + (-1)^m\, 14^\circ\, 29']$$

20. $22\cot^2\theta - 32\,\text{cosec}\,\theta + 32 = 0$

$$[\text{விடை } \theta = n(180^\circ) + (-1)^n\, 53^\circ\, 8'; \quad \theta = m(180^\circ) + (-1)^w\, 48^\circ\, 35']$$

21. $2\sin^2 x + \sin^2 2x = 2$

$$\left[\text{விடை } x = (2n+1)\frac{\pi}{2};\quad x = (2m+1)\frac{\pi}{4}\right]$$

22. $2 \tan^2 x = 7 - 3 \sec x$

[விடை $x = n(360°) \pm 48° 11'$;
$x = n(360°) \pm 109° 28'$]

23. $\tan \theta + 4 \cot 2\theta + 1 = 0$

$\left[ \text{விடை } \theta = n\pi - \frac{\pi}{4}; \right.$
$\theta = n(180°) + 63° 26'$]

24 $10 \sin^2 \theta - 21 \sin \theta . \cos \theta + 9 \cos^2 \theta = 0$

[விடை $\theta = n(180°) + 56° 19'$;
$\theta = m(280°) + 30° 58'$]

25. $\sec^2 \theta - (\sqrt{3}+2) \tan \theta + (\sqrt{3}-1) = 0$

$\left[ \text{விடை } \theta = n\pi + \frac{\pi}{3}; \right.$
$\left. \theta = m\pi + \frac{\pi}{4} \right]$

26. $\tan \theta + \sec \theta = \sqrt{3}$

$\left[ \text{விடை } \theta = 2n\pi + \frac{\pi}{6} \right]$

27. $\cot \left( \frac{\pi}{4} - \theta \right) = 3 \cot \left( \frac{\pi}{4} + \theta \right)$

$\left[ \text{விடை } \theta = n\pi + \frac{\pi}{4} \pm \frac{\pi}{6} \right]$

28. $\tan \theta = 1 - \sec 2\theta$ [விடை $\theta = n\pi$;
$\left. \theta = m \frac{\pi}{2} - \frac{\pi}{8} \right]$

29. $\cos \theta = 2 \sin (\theta + 10°)$ [விடை $\theta = n(180°) + 18° 20'$]

30. $\sin x = \cos \alpha$ என்னும் சமன்பாட்டைத் தீர்த்து, $(2n + \frac{1}{2})\pi \pm \alpha$, $n\pi + (-1)^n \left( \frac{\pi}{2} - \alpha \right)$ என்ற இரு கோவைகளும் ஒரே கோணத்தைக் குறிக்கின்றன எனக் காண்க

31. $\sqrt{\sin 2\theta} + \cos 2\theta = 2$

$\left[ \text{விடை } \theta = n \frac{\pi}{2} + (-1)^n \frac{\pi}{4} - \frac{\pi}{12} \right]$

32. $\tan x - \sqrt{2} \sec x = \sqrt{3}$

$$\left[\text{விடை } x = n\pi + \frac{\pi}{3} + (-1)^n \frac{\pi}{4}\right]$$

33. $\sin\theta + \cos\theta = \sqrt{2}$

$$\left[\text{விடை } \theta = n\pi + (-1)^n \frac{\pi}{2} - \frac{\pi}{4}\right]$$

34. $8 \cos^2\theta + 15 \sin\theta = -5{\cdot}1$

[விடை $\theta = n(360°) + 169° \ 24$ ;
$\theta = n\ 360°) + 3\ 4° \ 2?'$]

35. $\cos x + \sqrt{3} \sin x = 1$ [விடை $x = 2n\pi$;
$x = 2n\pi + 2\frac{\pi}{3}$]

36. $(1{\cdot}8) \cos\theta + (7{\cdot}5) \sin\theta = 3{\cdot}2$

[விடை $\theta = n(360°) + 142°$;
$\theta = n(360°) + 11°$]

37. $80 \sin\theta + 18 \cos\theta = 41$

[விடை $\theta = n(360°) + 17° \ 21'$;
$\theta = n(360°) + 137° \ 19'$]

38. $6 \cos x - 8 \sin x = 9$

[விடை $x = n(360°) - 53° \ 8' \pm 25° \ 51'$]

39. $5 \sin\theta - 12 \cos\theta = 3{\cdot}25$

[விடை $\theta = n(360°) - 22° \ 37' \pm 104° \ 29'$]

40. $\tan x + \tan y = \sqrt{2}$ ; $\tan x.\ \tan y = \sqrt{2} - 1$ எனில், $\tan x$, $\tan y$ ஐக் கண்டுபிடித்து, அதிலிருந்து, $x$, $y$ஐக் காண்க

$$\left[\text{விடை } x = m\pi + \frac{\pi}{8} ; \quad y = n\pi + \frac{\pi}{4} ;\right.$$
$$\left. x = n\pi + \frac{\pi}{4} ; \quad y = m\pi + \frac{\pi}{8}\right]$$

41. $4 \cos x - 3 \sin x + 2 = 0.$ [ விடை $x = n(360°) + 76° \ 44'$ ; $x = n(360°) - 150° \ 26'$ ].

பின்வரும் கோவைகளை $R \cos(\theta + \alpha)$ என்ற உருவத்தில் மாற்றி அமைக்க :— (கேள்விகள் 42லிருந்து 45 வரை)

42. $4 \cos(\theta) + 15 \sin\theta$ [ விடை $\sqrt{241} \cos(\theta - 75° 4')$

43. $8 \cos\theta + 6 \sin\theta$ [ விடை $10 \cos(\theta - 36° \ 52')$

44. $5 \cos\theta \sqrt{24} \sin\theta$ [ விடை $7 \cos(\theta + 44° 25')$ ]

45. $12 \cos\theta - \sin\theta$. [ விடை $13 \cos(\theta + 22° 37')$ ]

46. $3 \cos\theta - 40 \sin\theta$, $2 \sin\theta + 15 \cos\theta$ முதலிய கோவைகளின் மிகப் பெரிய, மிகச் சிறிய மதிப்புக்களைக் காண்க.

[ விடை $\pm\sqrt{1609}$ $\pm\sqrt{229}$ ]

பின்வருவனவற்றைத் தீர் :-

47. $\sin 7\theta - \sin\theta = \sin 3\theta$ [ விடை $\theta = \frac{n\pi}{6}$ ; $\theta = \frac{n\pi}{2} \pm \frac{\pi}{12}$ ]

48. $\cos 8\theta - \cos 4\theta = \sin 6\theta$ [ விடை $\theta = \frac{m\pi}{6}$ : $\theta = \frac{n\pi}{2} - (-1)^n \frac{\pi}{12}$ ]

49. $\sin 8\theta + \sin 6\theta = \sin 2\theta$ [ விடை $\theta = \frac{m\pi}{3}$ ; $\theta = \frac{(2n+1)}{8}\pi$ : $\theta = \frac{(2n+1)}{2}\pi$ ]

50. $\sin\theta + \sin 2\theta + \sin 3\theta = 0$

[ விடை $\theta = 2m\pi \pm \frac{2\pi}{3}$ ; $\theta = \frac{n\pi}{2}$ ]

51. $\cos 3\theta - \cos 4\theta = \cos 5\theta - \cos 6\theta$

[ விடை $\theta = n\pi$ ; $\theta = (2n+1)\frac{\pi}{9}$ ]

52. $4 \sin\theta . \sin(\theta - \alpha) = 2 \cos(\alpha) - 1$ என்னும் சமன்பாட்டைப் பெருக்கல் சூத்திரத்தின் மறுதலையை உபயோகித்து $\theta = n\pi + \frac{\alpha}{2} \pm \frac{\pi}{6}$ என்று நிறுவுக.

53. $2\sqrt{2} \cos 2\theta . \cos(2\theta - \alpha) = \sqrt{2} \cos x + 1$ எனில் $\theta = \frac{n\pi}{2} + \frac{\alpha}{4} \pm \frac{\pi}{16}$ எனக் காண்க.

54. $2 \sin 4\theta \cos(3\theta - \alpha) = \sin(\theta + \alpha) + 1$ எனில் $\theta = \frac{1}{4}\left\{ n\pi + \alpha + (-1)^n \frac{\pi}{2} \right\}$ என நிறுவுக.

55. $\sin 2\theta = \cos 3\theta$ என்னும் சமன்பாட்டிலிருந்து $\theta$க்குக் கிடைக்கும் மதிப்புக்கள் இரு கூட்டு விருத்திகளில் அமையும் எனக் காட்டுக. அவ்விரு கூட்டு விருத்திகளின் பொது வித்தியாசங்கள் (C. D's.) முறையே $\frac{2\pi}{5}$, $2\pi$ என்றும் நிறுவுக

பின் வருவனவற்றைத் தீர் :— (கேள்விகள் 56லிருந்து 64 வரை.)

56. $\sin 5\theta = \cos 6\theta$ [விடை $\theta = (4n+1)\frac{\pi}{22}$; $\theta = -(2m + \frac{1}{2})\pi$]

57. $\tan 3\theta \cot \theta = 1$ [விடை $\theta = \frac{n\pi}{2}$]

58 $\tan 2\theta . \tan 6\theta = 1$ [விடை $\theta = (n + \frac{1}{2})\frac{\pi}{8}$]

59. $\tan \theta + \tan 2\theta + \tan \theta . \tan 2\theta = 1$

[விடை $\theta = \frac{n\pi}{3} + \frac{\pi}{12}$]

60. $\tan \theta + \cot 2\theta = 0$ [விடை $\theta = n\pi - \frac{\pi}{2}$]

61. $2 \cos 3\theta + 6 \cot - 3\sqrt{3} = 0$

[விடை $\theta = 2n\pi \pm \frac{\pi}{6}$]

62. $\sin 3\theta - 3 \sin \theta + \frac{1}{2} = 0$

[விடை $\theta = n\pi + (-1)^n \frac{\pi}{6}$]

63. $\tan 3x = \tan x + \tan 2x$

[விடை $x = n\pi, \frac{n\pi}{2}, \frac{n\pi}{3}$]

64. $2 \cos 3\theta + 6 \cos \theta - 1 = 0.$

[விடை $\theta = 2n\pi \pm \frac{\pi}{3}$]

# 4. விலக்கல்

## (Elimination)

மாறிகளை, கொடுக்கப்பட்டிருக்கும் சமன்பாடுகளிலிருந்து விலக்குவதற்குத் திரிகோண விகித சூத்திரங்கள் பயன்படும். மாறிகளை விலக்கும் சில முறைகளை சில உதாரணங்கள் மூலம் விளக்குகிறோம்:

1·41. ஒரு மாறி (One variable)

மாதிரி 1 : $a, b, c, l, m, n$ நிலை எண்களாகில்,

$$a \sec \theta + b \tan \theta = c$$

$l \sec \theta + m \tan \theta = n$ என்ற இரு சாம்யங்களிலிருந்தும் $\theta$ என்ற மாறியை விலக்க.

$$a \sec \theta + b \tan \theta = c \qquad \text{.........(i)}$$

$$l \sec \theta + m \tan \theta = n \qquad \text{.........(ii)}$$

சமன்பாடு (i)ஐ $l$ ஆலும் (ii)ஐ ($a$) ஆலும் பெருக்கிக் கழிக்க.

$$(bl-am) \tan \theta = cl-an$$

எனவே,
$$\tan \theta = \frac{cl-an}{bl-am} \qquad \text{.........(iii)}$$

சமன்பாடு (i)ஐ $m$ ஆலும் (ii)ஐ $b$ ஆலும் பெருக்கிக் கழிக்க.

$$(am-bl) \sec \theta = cm-bn$$

எனவே,
$$\sec \theta = \frac{cm-bn}{am-bl} \qquad \text{.........(iv)}$$

மேலும் $\sec^2\theta \equiv 1 + \tan^2\theta$ (சூத்திரம்)

எனவே, $$\left(\frac{cm-bn}{am-bl}\right)^2 = 1 + \left(\frac{cl-an}{bl-am}\right)^2$$

அதாவது $(cm-bn)^2 = (bl-am)^2 + (cl-an)^2$

(ii) இரு மாறிகள் (Two variables)

மாதிரி 2. $\theta, \phi$ என்று இரு மாறிகளையும் கீழ்வரும் சமன்பாடுகளிலிருந்து விலக்க.

(i) $(x-a) \cos \theta + y \sin \theta = a;$

(ii) $(x-a) \cos \phi + y \sin \phi = a;$

(iii) $\tan \frac{\theta}{2} - \tan \frac{\phi}{2} = 2e.$

$$\cos A = \frac{1-\tan^2 A/2}{1+\tan^2 A/2}; \sin A = \frac{2 \tan A/2}{1 + \tan^2 A/2}$$

$\tan A/2 = t$ என்க.

$\tan\dfrac{\phi}{2} = t_1$, $\tan\dfrac{\theta}{2} = t_2$ எனில், சமன்பாடுகள் (i), (ii) லிருந்து, $t_1$, $t_2$ என்பவை.

$(x-a)\dfrac{1-t^2}{1+t^2} + y.\dfrac{2t}{1+t^2} = a$ என்ற சமன்பாட்டின் மூலங்களாகும். அதாவது, $t_1$, $t_2$ என்பவை

$$(x-a)(1-t^2) + 2t(y) = a(1+t^2)$$

அல்லது $xt^2 - 2yt + 2a - x = 0$ என்ற சமன்பாட்டின் மூலங்களாகும்.

எனவே, $t_1 + t_2 = \dfrac{2y}{x}$; $t_1 t_2 = \dfrac{2a-x}{x}$ .........(A)

ஆனால் சமன்பாடு (iii)லிருந்து $t_1 - t_2 = 2e$ .........(B)

மேலும் $(t_1 + t_2)^2 = (t_1 - t_2)^2 + 4t_1 t_2$.

ஆகையால், (A), (B)யிலிருந்து,

$$\frac{4y^2}{x^2} = 4e^2 + 4\left(\frac{2a-x}{x}\right)$$

அதாவது, $y^2 = e^2x^2 + x(2a-x)$

அல்லது, $x^2(1-e^2) + y^2 = 2ax$.

### அப்பியாசம் 1 (இ)

1. கீழ் வருவனவற்றில் $\theta$ஐ விலக்குக.

(i) $a\cos\theta + b\sin\theta = c$; $a\sin\theta - b\cos\theta = d$.
[விடை : $a^2 + b^2 = c^2 + d^2$]

(ii) $a\cos\theta + b\sin\theta + c = 0 = l\cos\theta + m\sin\theta + n$
[விடை : $(bn-cm)^2 + (cl-an)^2 = (am-bl)^2$]

(iii) $\dfrac{a}{b}\cos\theta = 1 = \dfrac{a}{c}\sin(\theta-\phi)$ [$\phi$ நிலையானது]
[விடை : $(c + b\sin\phi)^2 + b^2\cos^2\phi = a^2\cos^2\phi$]

(iv) $\dfrac{x}{a}\cos\theta + \dfrac{y}{b}\sin\theta - 1 = 0 = \dfrac{y}{b}\cos\theta - \dfrac{x}{a}\sin\theta$
[விடை : $\dfrac{x^2}{a^2} + \dfrac{y^2}{b^2} = 1$]

(v) $a\tan\theta = 1 = b\cos\theta$
[விடை : $a^2 + 1 = a^2b^2$]

(vi) $\frac{x}{a}\cos\theta + \frac{y}{b}\sin\theta = 1$; $y\cos\theta = x\sin\theta + \sqrt{a^2\sin^2\theta + b^2\cos^2\theta}$.

[விடை : $\frac{x^2}{a} + \frac{y^2}{b} = a + b$ அல்லது

$\{a(y^2-b^2 + b(x^2-a^2)\}^2 + 4\,ab\,x^2y^2 = 0$]

(vii) $a\sin^8\theta = 1 = b\cos^8\theta$.

[விடை : $\frac{1}{a^{\frac{2}{8}}} + \frac{1}{b^{\frac{2}{8}}} = 1$]

2. கீழ்வருவனவற்றில் $\theta$, $\phi$ஐ விலக்க :

(i) $(x-a)\cos\theta + y\sin\theta = x + a$;

$(x-a)\cos\phi + y\sin\phi = x + a$.

$\tan\frac{\theta}{2} \cdot \tan\frac{\phi}{2} = -1$. [விடை : $x+a = 0$]

(ii) $ax\cos\theta + by\sin\theta = c$;

$ax\cos\phi + by\sin\phi = c$;

$\tan\theta . \tan\phi = -\frac{a^2}{b^2}$

[விடை : $a^2b^2(x^2 + y^2) = c^2(a^2+b^2)$]

(iii) $\cos\theta + \cos\phi = a$.

$\sin\theta + \sin\phi = b$.

$\tan\frac{(\theta-\phi)}{2} = c$ [விடை : $(a^2+b^2)(1+c^2) = 4$]

(iv) $x\cos\theta + y\sin\theta = a$.

$x\cos\phi + y\sin\phi = a$.

$\sin\theta\sin\phi = 2\sin\frac{\theta}{2}\sin\frac{\phi}{2}$

[விடை : $y^2 = 2 = xa + a^2$]

## அத்தியாயம் II

# முக்கோணங்களும், நாற்கரங்களும்

## முதற்பிரிவு (முக்கோணங்கள்)

2·11. நாற்கர உண்மைகளை விளக்கக்கூடிய சூத்திரங்களை நிறுவுவதற்கு முன்பு, கீழ்க்கண்ட முக்கோண சூத்திரங்களை மனத்தில் வைத்துக்கொள்வது மிகவும் அவசியம்.

$$\frac{a}{\sin A} = \frac{b}{\sin B} = \frac{c}{\sin C} = 2R \qquad \text{.........}(a)$$

$$\begin{aligned} \triangle &= \tfrac{1}{2} bc \sin A = \tfrac{1}{2} ca \sin B = \tfrac{1}{2} ab \sin C \\ &= \frac{abc}{4R} = 2R^2 \sin A.\ \sin B.\ \sin C. \end{aligned} \qquad \text{.........}(b)$$

$$\left.\begin{aligned} a^2 &= b^2+c^2 - 2bc \cos A \\ b^2 &= c^2+a^2 - 2ca \cos B \\ c^2 &= a^2+b^2 - 2ab \cos C \end{aligned}\right\} \qquad \text{.........}(c)$$

$$\left.\begin{aligned} a &= b \cos C + c \cos B \\ b &= C \cos A + a \cos C \\ c &= a \cos B + b \cos A \end{aligned}\right\} \qquad \text{.........}(d)$$

$$\left.\begin{aligned} r &= \frac{\triangle}{s} \\ r_1 &= \frac{\triangle}{s-a} \\ r_2 &= \frac{\triangle}{s-b} \\ r_3 &= \frac{\triangle}{s-c} \end{aligned}\right\} \qquad \text{.........}(e)$$

$$\left.\begin{aligned} \sin(B+C) &= \sin(180^\circ - A) = \sin A \\ \cos(B+C) &= \cos(180^\circ - A) = \cos A \\ \tan(B+C) &= \tan(180^\circ - A) = -\tan A \\ \sin\frac{(B+C)}{2} &= \sin\left(90^\circ - \frac{A}{2}\right) = \cos\frac{A}{2} \\ \cos\left(\frac{B+C}{2}\right) &= \cos\left(90^\circ - \frac{A}{2}\right) = \sin\frac{A}{2} \\ \tan\left(\frac{B+C}{2}\right) &= \tan\left(90^\circ - \frac{A}{2}\right) = \operatorname{cof}\frac{A}{2} \end{aligned}\right\} \qquad \text{.........}(f)$$

$$\left.\begin{aligned}\sin A + \sin B + \sin C &= 4\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}.\\ \sin B + \sin C - \sin A &= 4\cos\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\\ \sin C + \sin A - \sin B &= 4\cos\frac{B}{2}.\sin\frac{C}{2}.\sin\frac{A}{2}.\\ \sin A + \sin B - \sin C &= 4\cos\frac{C}{2}.\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\end{aligned}\right\}\cdots\cdots (g)$$

2·12. இப்பொழுது $r = 4R\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}$ என நிரூபிப்போம். ($R$ என்பது சுற்றுவட்ட ஆரம்)—(circum radius).

$$r = \frac{\Delta}{s}. \qquad \text{(சூத்திரம் (e))}$$

ஆனால், $\Delta = 2R^2 \sin A.\sin B.\sin C.$ (சூத்திரம் ($b$))

$$= 2R^2.\,2\sin\frac{A}{2}.\cos\frac{A}{2}.\,2\sin\frac{B}{2}.\cos\frac{B}{2}.\,2\sin\frac{C}{2}.\cos\frac{C}{2}$$

$$\left[\because \sin A = 2\sin\frac{A}{2}.\cos\frac{A}{2}. \quad \text{(சூத்திரம் (9)}\right]$$

§ L·1

$$= 16R^2\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2} \qquad \ldots\ldots\ldots\ldots (i)$$

$$s = \tfrac{1}{2}(a + b + c)$$

$$= \tfrac{1}{2}.\{2R\sin A + 2R\sin B + 2R\sin C\}$$

(சூத்திரம் ($a$))

$$= R(\sin A + \sin B + \sin C)$$

$$= R\left(4\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}\right) \text{(சூத்திரம் (g)} \ldots (ii)$$

∴ (i), (ii)லிருந்து,

$$r = \frac{\Delta}{s} = \frac{16R^2\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}}{4R.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}}$$

$$= 4R.\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.$$

இம்மாதிரியே,

$$r_1 = \frac{\Delta}{s-a} = \frac{16R^2\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}}{\frac{1}{2}(b+c-a)}$$

$$= \frac{16R^2\sin\frac{A}{2}\ \sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}}{R(\sin B+\sin C-\sin A)}$$

$$= \frac{16R^2\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}}{4R\cos\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}}$$

[சூத்திரம் (v)]

$$\therefore\ r_1 = 4R\sin\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}.$$

2·13. $r = (s-a)\tan\frac{A}{2} = (s-b)\tan\frac{B}{2} = (s-c)\tan\frac{C}{2}$

என நிரூபிப்போம்.

$$s-a = \tfrac{1}{2}(b+c-a)$$
$$= \tfrac{1}{2}(2R\sin B+2R\sin C-2R\sin A)$$
$$= R(\sin B+\sin C-\sin A)$$
$$= 4R\cos\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}$$

(சூத்திரம் (g))

$$\therefore\ (s-a)\tan\frac{A}{2} = 4R\cos\frac{A}{2}\ \sin\frac{B}{2}.\sin\frac{C}{2}.\frac{\sin\frac{A}{2}}{\cos\frac{A}{2}}$$

$$= 4R\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}$$

$$= r$$

(§ 2·12)

இம்மாதிரியே,

$$(s-b)\tan\frac{B}{2} = r = (s-c)\tan\frac{C}{2}.$$

இப்பொழுது, $r_1 = s\tan\frac{A}{2}$ என நிரூபிப்போம்.

$$s = \tfrac{1}{2}(a+b+c)$$
$$= R(\sin A+\sin B+\sin C)$$
$$= 4R.\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2} \qquad \text{(சூத்திரம் (g))}$$

$$\therefore\ s\tan\frac{A}{2} = 4R\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}.\frac{\sin\frac{A}{2}}{\cos\frac{A}{2}}$$

$$= 4R\sin\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}$$
$$= r_1 \qquad (\S\ 2\cdot12)$$

இம்மாதிரியே

$$s\tan\frac{B}{2} = r_2;\quad s\tan\frac{C}{2} = r_3$$

2·14. இப்பொழுது $r_1+r_2+r_3-r=4R$ என நிரூபிப்போம்.

$r_1+r_2+r_3-r$

$$= 4R\left\{\sin\frac{A}{2}.\cos\frac{B}{2}.\cos\frac{C}{2}+\sin\frac{B}{2}.\cos\frac{C}{2}.\cos\frac{A}{2}\right\}$$

$$+ 4R\left\{\sin\frac{C}{2}.\cos\frac{A}{2}\ \cos\frac{B}{2}-\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}.\sin\frac{C}{2}\right\} \quad (\S\ 2\cdot12)$$

$$= 4R.\cos\frac{C}{2}\left\{\sin\frac{A}{2}.\cos\frac{B}{2}+\cos\frac{A}{2}.\sin\frac{B}{2}\right\}$$

$$+ 4R.\sin\frac{C}{2}\left\{\cos\frac{A}{2}.\cos\frac{B}{2}-\sin\frac{A}{2}.\sin\frac{B}{2}\right\}$$

$$= 4R.\cos\frac{C}{2}.\sin\frac{A+B}{2}+4R.\sin\frac{C}{2}.\cos\frac{A+B}{2} \qquad \text{சூத்திரம் (6))}$$

$$= 4R.\cos\frac{C}{2}.\cos\frac{C}{2}+4R\sin\frac{C}{2}.\sin\frac{C}{2} \qquad \text{(சூத்திரம் (f))}$$

$$= 4R\left\{\cos^2\frac{C}{2}+\sin^2\frac{C}{2}\right\}$$

$$= 4R.$$

2·15. முக்கோணம் $ABC$ இன் சுற்று மையம் (circum centre) $S$க்கும் உள் மையம் $I$க்கும் இடையே உள்ள தூரத்தைக் கண்டு பிடிக்க.

$S$ என்பது $ABC$ முக்கோணத்தின் சுற்று மையம். ஆகையால், $S$இலிருந்து $AB$க்கு செங்குத்துக்கோடு வரைந்து அதற்கு $F$ என்பது அடிப்புள்ளியாக இருந்தால், $F$ என்பது $AB$ன் மையப்புள்ளி ஆகும். இம்மாதிரியே, $IZ$ என்பது $AB$க்குச் செங்குத்துக்கோடு.




படம்-10

$$\frac{IZ}{AI} = \sin\frac{A}{2}$$ [∵ $IA$ கோணம் $A$ன் உள் இருசம வெட்டி]

$$AI = \frac{IZ}{\sin A/2}$$

$$= \frac{r}{\sin\frac{A}{2}} = \frac{4R\sin\frac{A}{2}\cdot\sin\frac{B}{2}\cdot\sin\frac{C}{2}}{\sin\frac{A}{2}}$$

$$= 4R.\sin\frac{B}{2}\cdot\sin\frac{c}{2} \qquad \ldots\ldots\ldots\ldots(i)$$

$$SA = R \qquad \ldots\ldots\ldots\ldots(ii)$$

$$F\hat{A}S = 90^\circ - A\hat{S}F = 90^\circ - C;$$

$$F\hat{A}I = I\hat{A}C = \frac{A}{2}$$

$$\therefore\ S\hat{A}I = \frac{A}{2} - 90^\circ - C;$$

$$= \frac{A}{2} - 90^\circ + C$$

$$= \frac{A}{2} + C - \left(\frac{A}{2} + \frac{B}{2} + \frac{C}{2}\right)$$

$$(\because A + B + C = 180^\circ)$$

$$= \frac{C-B}{2} \qquad \ldots\ldots\ldots\ldots(iii)$$

இப்பொது, $\triangle\ SAI$ இலிருந்து,

$$SI^2 = AS^2 + AI^2 - 2AS.\ AI \cos S\hat{A}T \quad (\text{சூத்திரம் } (C))$$

$$= R^2 + 16R^2 \sin^2\frac{B}{2}.\ \sin^2\frac{C}{2} - 2\ R.\ 4R.$$

$$\sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}.\ \cos\frac{C-B}{2}$$

[ (i), (ii), (iii) லிருந்து ]

$$= R^2 + 16R^2 \sin^2\frac{B}{2}.\ \sin^2\frac{C}{2}$$

$$- 8\ R^2 \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}$$

$$\left\{\cos\frac{B}{2}.\ \cos\frac{C}{2} + \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}\right\}$$

$$= R^2 + 16\ R^2 \sin^2\frac{B}{2}.\ \sin^2\frac{C}{2} - 8R^2 \sin^2\frac{B}{2}$$

$$\sin 2\frac{C}{2} - 8\ R^2 \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}.\ \cos\frac{B}{2}.\ \cos\frac{C}{2}.$$

$$= R^2 + 8\ R^2 \sin^2\frac{B}{2}.\ \sin^2\frac{C}{2} - 8R^2 \sin\frac{B}{2}.$$

$$\sin\frac{C}{2}.\ \cos\frac{B}{2}.\ \cos\frac{C}{2}$$

$$= R^2 - 8\ R^2 \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}.$$

$$\left\{\cos\frac{B}{2}.\ \cos\frac{C}{2} - \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}\right\}$$

$$= R^2 - 8\ R^2 \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}.\ \cos\frac{B+C}{2}$$

$$R^2 - 8R^2 \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}.\ \sin\frac{A}{2} \quad (\text{சூத்திரம் } (\gamma))$$

$$= R^2 - 2R.\ 4R.\ \sin\frac{A}{2}.\ \sin\frac{B}{2}.\ \sin\frac{C}{2}.$$

$$\therefore\ ST^2 = {}^2 r - 2R.\ r.$$

2·16. முக்கோணம் $ABC$யின் சுற்று மையம் $S$க்கும் வெளி மையம் $I_1$க்கும் இடையே உள்ள தூரத்தைக் கண்டுபிடிக்க.

படம் 11ல் $I_1$ என்பது வெளி மையம் $I_1$லிருந்து $AC$க்கு வரையப்படும் லம்பத்தின் அடிப்புள்ளி $M$. ஆகையால், $I_1M = r_1$.



படம் - 11

மேலும், $I_1$ ஐ மையமாக வைத்து $I_1M$ஐ ஆரமாகக் கொண்டு வரையப்பட்ட வெளிதொடு வட்டம் $AB$, $AC$ன் நீட்டிய பாகங்களை யும், $BC$ஐயும் தொடும் $AC$ன் நீட்டிய பாகத்தை இவ்வட்டம் தொடும் புள்ளிதான் $M$.

$I_1$ என்பது, கோணம் $A$ன் உள் இரு சமவெட்டி, கோணங்கள் $B$, $C$ன் வெளி இரு சமவெட்டிகள் ஆகிய இம்மூன்று நேர் கோடு களும் சந்திக்கும் புள்ளி. (ஆகையால், $A$, $I$, $I_1$ இம்மூன்று புள்ளி களும் ஒரே நேர் கோட்டில் அமையும்)

$$\frac{I_1M}{AI_1} = \sin\frac{A}{2}.$$

அல்லது, $$AI_1 = \frac{I_1M}{\sin\frac{A}{2}}$$

$$= \frac{r_1}{\sin\frac{A}{2}}$$

அதாவது, $$AI_1 = 4R\cos\frac{B}{2}\cdot\cos\frac{C}{2} \quad \text{.................(i)}$$

$$SA = R \quad \text{.................(ii)}$$

$$S\hat{A}T_1 = S\hat{A}I = \frac{C-B}{2} \quad \text{.................(iii)}$$

$\triangle SAI_1$ லிருந்து, $SI_1^2 = SA^2 + AI_1^2 - 2SA.\ AI_1.\cos S\hat{A}I_1$

$$= R^2 + 16R^2 \cos^2 \frac{B}{2} \cdot \cos^2 \frac{C}{2}$$

$$- 2R.\ 4R.\ \cos \frac{B}{2} \cdot \cos \frac{C}{2} . \cos \frac{C-B}{2}$$

$$\therefore \quad SI_1^2 = R^2 + 16 R^2 \cos^2 \frac{B}{2} . \cos^2 \frac{C}{2} - 8R^2 \cos \frac{B}{2} \cdot$$

$$\cos \frac{C}{2} \left\{ \cos \frac{B}{2} . \cos \frac{C}{2} + \sin \frac{B}{2} \sin \frac{C}{2} \right.$$

$$= R^2 + 16R^2 \cos^2 \frac{B}{2} . \cos^2 \frac{C}{2} - 8R^2 \cos^2 \frac{B}{2} \cos^2 \frac{2}{C}$$

$$= 8R^2 . \cos \frac{B}{2} . \cos \frac{C}{2} . \sin \frac{B}{2} . \sin \frac{C}{2}$$

$$= R^2 + 8R^2 \cos^2 \frac{B}{2} . \cos^2 \frac{C}{2} - 8R^2 \cos \frac{B}{2} \cdot$$

$$\cos \frac{C}{2} . \sin \frac{B}{2} . \sin \frac{C}{2}$$

$$= R^2 + 8R^2 \cos \frac{B}{2} . \cos \frac{C}{2}$$

$$\left\{ \cos \frac{B}{2} . \cos \frac{C}{2} - \sin \frac{B}{2} . \sin \frac{C}{2} \right\}$$

$$= R^2 + 8R^2 \cos \frac{B}{2} . \cos \frac{C}{2} . \cos \frac{B+C}{2}$$

$$= R^2 + 8R^2 \cos \frac{B}{2} . \cos \frac{C}{2} . \sin \frac{A}{2}$$

$$= R^2 + 2R.\ 4R. \sin \frac{A}{2} . \cos \frac{B}{2} . \cos \frac{C}{2}$$

$$\therefore \quad SI_1^2 = R^2 + 2R.\ r_1$$

இம்மாதிரியே, $SI_2^2 = R^2 + 2\ R.\ r_2$ ; $SI_3^2 = R^2 + 2R.\ r_3$.

குறிப்பு : $SI^2 + SI_1{}^2 = SI^2{}_2 + SI^2{}_3 = 12R^2$

$\because \quad SI^2 = R^2 - 2R\ r$ ............(§ 2.15)

$SI^2{}_1 = R^2 + 2Rr_1$

$SI^2{}_2 = R^2 = 2Rr_2$

$SI^2{}_3 = R^2 + 2R\ r_3$ ............(§ 2·16)

$$\therefore \quad SI^2 + SI_1^2 + SI_2^2 + SI_3^2$$
$$= 4R^2 + 2R\,(r_1 + r_2\, r_3 - r)$$
$$= 4R^2 + 2R.\,4R \qquad \text{.........(§ 2.14)}$$
$$= 12R.$$

2·17. வெளிமையங்கள் $I^1$, $I^2$, $I_3$ ஐச் சேர்க்கும் முக்கோணம்




படம் -11 (அ)

$AII$, $BII_2$, $CII_3$ ஆகிய இம்மூன்றும் நேர்க்கோடுகள் ($I$, உள்மையம்). $CI$, $CI$, கோணம் $C$இன் உள் , இரு சமவெட்டிகள்

ஆகையால், $B\hat{C}I = \frac{C}{2}$;

$$B\hat{C}I_1 = 90° - \frac{C}{2}.$$

இம்மாதிரியே, $C\hat{B}I_1 = 90° - \frac{B}{2}$. ஆகையால்,

கோணம். $I_3I_1I_2 = 180° - \left(90° - \frac{B}{2}\right) = \left(90° - \frac{C}{2}\right)$

$$= \frac{B + C}{2} = 90° - \frac{A}{2}.$$

$\triangle\ I_1I_2I_3$ல் $\hat{I}_1 = 90° - \frac{A}{2}$; இம்மாதிரியே,

$$\hat{I}_2 = 90° - \frac{B}{2};$$

$$I_3 = 90° - \frac{C}{2}.$$

முக்கோணம் $AI_2C$லிருந்து $\frac{AI_2}{AC} = \frac{\sin\left(90° - \frac{C}{2}\right)}{\sin\left(90° - \frac{B}{2}\right)}$

(சூத்திரம் ($a$) )

ஆகையால், $AI_2 = b. \frac{\cos\frac{C}{2}}{\cos\frac{B}{2}}$

$$= 2R \sin B \frac{\cos\frac{C}{2}}{\cos\frac{B}{2}}$$

$$= 4R \sin\frac{B}{2} . \cos\frac{B}{2} . \frac{\cos\frac{C}{2}}{\cos\frac{B}{2}}$$

$$= 4R \sin\frac{B}{2} . \cos\frac{C}{2} \qquad \text{.........}(i)$$

இம்மாதிரியே, $\triangle BAI_3$ இருந்து, $\frac{I_3A}{AB} = \frac{\sin\left(90° - \frac{B}{2}\right)}{\sin\left(90° - \frac{c}{2}\right)}$

அல்லது, $I_3A = C \frac{\cos\frac{B}{2}}{\cos\frac{C}{2}}$

$$= 4R. \sin\frac{C}{2} . \cos\frac{C}{2} . \frac{\cos\frac{B}{2}}{\cos\frac{C}{2}}$$

$$= 4R. \sin\frac{C}{2} . \cos\frac{B}{2} \qquad (ii)$$

$$\therefore \quad I_3A + AI_2 = 4R \left\{ \sin\frac{B}{2} . \cos\frac{C}{2} + \cos\frac{B}{2} \sin\frac{C}{2} \right\}$$

$$= 4R \left\{ \sin \frac{(B + C)}{2} \right\}$$

$$= 4R \cos \frac{A}{2} \cdot \qquad \text{(சூத்திரம் } (f))$$

ஆகையால்; $I_2I_3 = 4R \cos \frac{A}{2}$

இம்மாதிரியே, $I_3I_1 = 4R \cos \frac{B}{2}$

$$I_1I_2 = 4R \cos \frac{C}{2}$$

குறிப்பு (1): $\triangle\ I_1I_2I_3$க்கு $I$ என்பது செங்குத்து மையம் (Orthocentre).

குறிப்பு (2): $\triangle\ I_1I_2I_3$இன் சுற்று ஆரம்

$$= \frac{I_2I_3}{2 \sin \hat{I}_1} \qquad \text{(சூத்திரம் } (a))$$

$$= \frac{4R \cos \frac{A}{2}}{2 \sin \left(90^\circ - \frac{A}{2}\right)}$$

$$= \frac{4R \cos \frac{A}{2}}{2 \cos \frac{A}{2}}$$

$$= 2R.$$

அதாவது, $= 2$ (சுற்று ஆரம்)

($R$ முக்கோணம் $ABC$ யின்சுற்று ஆரம்)

குறிப்பு (3): $\triangle\ I_1I_2I_3$ன் பரப்பு

$$= \frac{I_1I_2 \quad I_2I_3 \quad I_3I_1}{4 \quad 2R} \qquad \text{(சூத்திரம் } (b))$$

$$= \frac{64R_3 \cos \frac{A}{2} \cos \frac{B}{2} \cos \frac{C}{2}}{8R}$$

$$= 8R^2 \cos \frac{A}{2} \cos \frac{B}{2} \cos \frac{C}{2}$$

$$= 2R^2\ 4 \cos \frac{A}{2} \cos \frac{B}{2} \cos \frac{C}{2}$$

$= 2R. \{ \sin A + \sin B + \sin C \}$ (சூத்திரம் (x))

$= 2R^2 \left\{ \frac{a}{2R} + \frac{b}{2R} + \frac{c}{2R} \right\}$ (சூத்திரம் ($a$))

$= R(a+b+c)$

$= R; 2s$

$= 2Rs.$

2.18. $\triangle ABC$இன் சுற்று மையம் $S$-க்கும் செங்குத்து மையம் $O$க்கும் இடையே உள்ள தூரத்தைக் கண்டுபிடிக்க.

படம் 12

$BC$க்கு, $A$யிலிருந்து வரையப்பட்ட குத்துக்கோடு $AL$ மீது $O$ அமையும்

$\triangle ALC$யிலிருந்து..

$L\hat{A}C = 90° - L\hat{C}A = 90° - C.$ $(\because \hat{L} = 90°)$

மேலும், $F\hat{S}A = \hat{C}$ ($FS \perp AB$ (அமைப்பு)

$\therefore \quad F\hat{A}S = 90° - C \quad (\because \hat{F} = 90°)$

மேலும் $S\hat{A}O = \hat{A} - F\hat{A}S - O\hat{A}C$

$= A - (90° - C) - (90 - C)$

$= A - 2(90° - C)$

$= 2C + A - (A + B + C)$

$(\because A + B + C = 180°)$

$= C - B.$ ..............(1)

$SA = R$ ..........(ii)

$AO = 2SD$ (வடிவகணிதத் தேற்றம்)

ஆனல், $\frac{SD}{BS} = \cos D\hat{S}B = \cos \hat{A}$

$\therefore \quad SD = BS. \cos A = R \cos A$

$\therefore \quad AD = 2SD \qquad = 2R\cos A$.......... (iii)

$\triangle SAO$ விலிருந்து,

$SO^2 = AS^2 + AO^2 - 2AS.\ AO \cos S\hat{A}O$

(சூத்திரம் (c) )

$= R^2 + 4R^2\cos^2 A - 2.\ R.\ 2R.\cos A.\cos(C - B)$

$= R^2 + 4R^2\cos^2 A - 4R^2\cos A.\cos(C - B)$

$= R^2 - 4R^2\cos A\{\cos(C - B) - \cos A\}$

$= R^2 - 4R^2\cos A\{\cos(C - B) + \cos(B + C)\}$

(சூத்திரம் (f) )

$= R^2 - 4R^2\cos A\{2\cos B.\cos C\}$

(சூத்திரம் (7) )

$\therefore \quad SO = R^2 - 8R^2\cos A.\cos B.\cos C.$

## 2. 9 பாத முக்கோணம் (Pedal triangle)




படம் 13

$AD, BE, CF$ என்பவை $BC, CA, AB$க்கு வரையப்பட்ட குத்துக் கோடுகள். ஆகையால், $B\hat{F}C = 90° = B\hat{E}C$.

எனவே, $BFEC$ ஒரு வட்ட நாற்கரம்

$\therefore \quad A\hat{F}E = E\hat{C}B$ (உள் எதிர்க்கோணம்)

$= \hat{C}$

இம்மாதிரியே, $A\hat{E}F = \hat{B}$.

ஆகையால், முக்கோணங்கள் $AEF, ABC$ வடிவொத்தவை. (similar trianngles)

$\therefore \quad \dfrac{EF}{BC} = \dfrac{AF}{AC} = \cos F\hat{A}C \quad (\because \hat{F} = 90°)$

$= \cos \hat{A}$

அல்லது, $EF = BC \cos A = a \cos \hat{A}$

இம்மாதிரியே,

$FD = b \cos \hat{B}; \quad DE = C \cos \hat{C}$

மேலும் $ODBF$ ஒரு வட்ட நாற்கரம்

$\therefore \quad O\hat{D}B + O\hat{F}B = 90^\circ + 90^\circ = 180^\circ)$

ஆகையால், $O\hat{D}F = O\hat{B}F.$

$= A\hat{B}E = 90^\circ - \hat{A} \quad (\because \; A\hat{E}B = 90^\circ)$

இம்மாதிரியே $O\hat{D}E = O\hat{C}E = F\hat{C}A = 90^\circ - A.$

ஆகையால், $E\hat{D}F = O\hat{D}F + O\hat{D}E = 90^\circ - A$

$+ 90^\circ - A = 180^\circ - 2\hat{A}.$

அதேபோல், $D\hat{E}F = 180^\circ - 2\hat{B}; \quad E\hat{F}D = 180^\circ - 2\hat{C}$

குறிப்பு (1) : (மேல் கண்ட பாத முக்கோணத்தின் பக்கங்கள், கோணங்கள் இவைகளின் மதிப்பிலிருந்து) பாத முக்கோணத்தின் சுற்று ஆரம் $= \dfrac{EF}{2 \sin \hat{D}} = \dfrac{a \cos A}{2 \sin (180^\circ - 2A)}$

$= \dfrac{2R \sin A \cos A}{2 \cdot \sin 2A}$

$= \dfrac{R \sin 2A}{2 \sin 2A} = \dfrac{R}{2}.$

$= \frac{1}{2}$. ($\triangle ABC$ன் சுற்று வட்ட ஆரம்)

$\triangle$ $DEF$இன் சுற்று வட்டம் $\triangle ABC$இன் ஒன்பது புள்ளி வட்டம். ஆகையால் $\triangle DEF$இன் சுற்று வட்ட ஆரம் $\triangle ABC$இன் சுற்று வட்ட ஆரத்தில் பாதி....

குறிப்பு (2) : $DO$, $F\hat{D}E$ன் உள் இரு சமவெட்டி.

ஏனெனில், $F\hat{D}O = 90^\circ - \hat{A} = O\hat{D}E$ இதேபோல் $OE$, $OF$; $\hat{E}$, $\hat{F}$ ன் உள் இரு சமவெட்டிகள். ஆகையால், $O$ என்னும் புள்ளி $\triangle$ $DEF$ன் உள் மையம். அதாவது, ஒரு முக்கோணத்தின் செங்குத்து மையம் அதனுடைய பாத முக்கோணத்திற்கு உள் மையமாகும்.

## மாதிரிக் கணக்குகள்

2. 110.

மாதிரி 1. $r_a$, $r_b$, $r_c$ முக்கோணம் $ABC$ன் வெளி ஆரங்களானால் $\dfrac{1}{r^2} + \sum_{a,b,c} \dfrac{1}{r_a^2} = \sum_{a,b,c} \dfrac{a^2}{\Delta^2}$ என நிறுவுக. ($r$, $\triangle ABC$ன் உள் ஆரம்)

$r_a = \frac{\Delta}{s-a}$; $r_b = \frac{\Delta}{s-b}$; $= r_c \frac{\Delta}{s-c}$; $r = \frac{\Delta}{s}$.

$$\therefore \frac{1}{r^2} + \frac{1}{r_a^2} + \frac{1}{r_b^2} + \frac{1}{r_c^2} = \frac{1}{\Delta^2}$$

$$\left\{ s^2 + (s-a)^2 + (s-b)^2 + (s-c)^2 \right\}$$

$$= \frac{1}{\Delta^2} \left\{ 4s^2 - 2s(a+b+c) + a^2 + b^2 + c^2 \right\}$$

$$= \frac{1}{\Delta^2} \left\{ 4s^2 - 2s.2s + a^2 + b^2 + c^2 \right\}$$

$$= \frac{a^2 + b^2 + c^2}{\Delta^2}$$

ஆகையால் $\frac{1}{r^2} + \sum_{a,b,c} \frac{1}{r_a^2} = \sum_{a,b,c} \frac{a^2}{\Delta^2}$

மாதிரி 2. $\Delta DEF$, $\Delta ABC$ன் பாத முக்கோணமானுல், அதன் பரப்பு $\frac{R^2}{2} \sin 2A . \sin 2B \sin 2C$ எனக் காண்க.

$\Delta ABC$ன் பரப்பு $= \Delta = 2R^2 \sin A, \sin B . \sin C$.

(சூத்திரம் ($b$)

$\Delta DEF$ன் சுற்று ஆரம் $= \frac{R}{2}$ (குறிப்பு (1), $\phi$ (2·19)) மேலும்,

$\Delta DEF$ன் மூன்று கோணங்களும் முறையே $180° - 2A$, $180° - 2B$, $180° - 2C$ ($\phi$ 2·19)

ஆகையால், $\Delta DEF$ன் பரப்பு

$$= 2\left(\frac{R}{2}\right)^2 \sin(180° - 2A) . \sin(180° - B) . \sin(180° - 2C)$$

$$= \frac{R^2}{2} \sin 2A . \sin 2B . \sin 2C.$$

மாதிரி 3. $\frac{r_1}{bc} + \frac{r_2}{ca} + \frac{r_3}{ab} = \frac{1}{r} - \frac{1}{2R}$ என நிறுவுக.

($\Delta ABC$ன் உள் ஆரம் $r$; வெளி ஆரங்கள் முறையே $r_1, r_2, r_3$)

$$\frac{r_1}{bc} + \frac{r_2}{ca} + \frac{r_3}{ab} = \frac{1}{abc} \left\{ ar_1 + br_2 + cr_3 \right\}$$

$$= \frac{2}{abc} \left\{ \Delta BI_1C + \Delta CI_2A + \Delta AI_3B \right\} \quad ...(i)$$

($I_1$, $I_2$, $I_3$ முறையே $\triangle ABC$ன் வெளி மையங்கள்)

மேலும், $\frac{1}{2R} = \frac{2}{abc} \cdot \triangle$ ( $\because abc = 4R\triangle$ சூத்திரம் (b) ...(ii)

$$\therefore \frac{r_1}{bc} + \frac{r_2}{ca} + \frac{r_3}{ab} + \frac{1}{2R} = \frac{2}{abc}\left\{\triangle BI_1C + \triangle CI_2A + \triangle AI_3B + \triangle ABC\right\}$$

$$= \frac{2}{abc} \cdot \triangle I_1I_2I_3$$

$$= \frac{2}{abc} \cdot 2R \cdot s \text{ (குறிப்பு (3); ப 2·17)}$$

$$= \frac{4R}{abc} \cdot s$$

$$= \frac{1}{\triangle} \cdot s = \frac{s}{\triangle} = \frac{1}{r}.$$

$$\therefore \frac{r_1}{bc} + \frac{r_2}{ca} + \frac{r_3}{ab} = \frac{1}{r} - \frac{1}{2R}.$$

## அப்பியாசம் 2 (அ)

பின் வருவனவற்றை நிறுவுக.

1. $\frac{b-c}{r_1} + \frac{c-a}{r_2} + \frac{a-b}{r_3} = O.$
2. $r_1r_2 + r_2r_3 + r_3r_1 = s^2.$
3. $\frac{1}{r_1} + \frac{1}{r_2} + \frac{1}{r_3} = \frac{1}{r}.$
4. $r_1r_2 = rr_3$ ஆனால் $\triangle ABC$ ஒரு செங்கோண முக்கோணம்.
5. $\left(1 - \frac{r_1}{r_2}\right)\left(1 - \frac{r_1}{r_3}\right) = 3$ ஆனால் $ABC$ ஒரு செங்கோண முக்கோணம்.
6. $(r_2 + r_3)\sqrt{\frac{rr_1}{r_2r_3}} = a.$
7. $a(rr_1 + r_2r_3) = b(rr_2 + r_3r_1) = c(rr_3 + r_1r_2) = abc$
8. $\frac{1}{bc} + \frac{1}{ca} + \frac{1}{ab} + \frac{1}{2Rr}.$

9. $\dfrac{r1 - r}{a} + \dfrac{r_3 - r}{b} = \dfrac{C}{r_3}$

10. $r_1 = r_2 + r_3 + r$ எனில் $ABC$ ஒரு செங்கோண முக்கோணம்.

11. $(r_2 - r)(r_3 + r_1) = b^2$.

12. $(r - r_3) + (r_1 + r_2) = 4R \cos C$.

13. $\left(\dfrac{1}{r} - \dfrac{1}{r_1}\right)\left(\dfrac{1}{r} - \dfrac{1}{r^2}\right)\left(\dfrac{1}{r} - \dfrac{1}{r_3}\right) = \dfrac{4R}{r_2\, s_3}$.

14. $\dfrac{(r_1 - r)(r_2 - r)(r_3 - r)}{(r_1 + r_2)(r_2 + r_3)(r_3 + r_1)} = \dfrac{r_2}{s^2}$.

15. $\dfrac{bc}{r_1} + \dfrac{ca}{r_2} + \dfrac{ab}{r_3} = 2R.$

$$\left\{\frac{b}{a} + \frac{c}{a} + \frac{c}{b} + \frac{a}{b} + \frac{a}{c} + \frac{b}{c} - 3\right\}$$

16. $2(R + r) = a \operatorname{cof} A + b \operatorname{cof} B + C \operatorname{cof} C.$

17. $a\sqrt{r_1 r_2 + r_2 r_3 + r_3 r_1} = \sqrt{}_1 \sqrt{}_2 + r_3 r_1$

18. $\sqrt{}^2 + \sqrt{}_1^{\,2} + \sqrt{}_2^{\,2} + \sqrt{}_3^{\,2} = 16R^2 - (a^2 + b^2 + c^2)$

19. (i) $r_1 r_2 r_3 = r^2 \operatorname{cof}^2\left(\dfrac{A}{2}\right) \cdot \operatorname{cof}^2\left(\dfrac{B}{2}\right) \cdot \operatorname{cof}^2\left(\dfrac{C}{2}\right)$

(ii) $r r_1 r_2 r_3 = \triangle^2$

(iii) $r r_1 = \triangle \tan \dfrac{A}{2}$

20. $BC$, $CA$, $AB$ என்னும் பக்கங்களிலிருந்து $A$, $B$, $C$ன் குத்துயரங்கள் முறையே $p_1$, $p_2$, $p_3$ ஆனால்

(i) $\Sigma \dfrac{1}{p_1} = \Sigma \dfrac{1}{r_1} = \dfrac{1}{r}$

(ii) $\dfrac{1}{p_2} + \dfrac{1}{p_3} - \dfrac{1}{p_1} = \dfrac{1}{r_1}$

(iii) $R p_1 p_2 p_3 = 2\triangle^2$.

21. முக்கோணம் $ABC$ன் சுற்று மையம், உள் வட்டத்தின்மீது அமைந்தால் $\cos A + \cos B + \cos C = \sqrt{2}$.

22. $\triangle ABC$ல் $R = 2r$ ஆனால் $a = b = c$.

23. $a.\ AI^2 + b.\ BI^2 + c.\ cI^2 = abc.$

24. $a. AI_1^2 - b. BI_1^2 - c. CI_1^2 = abc.$

25. $AI^2\left(\frac{1}{b}-\frac{1}{c}\right)+BI^2\left(\frac{1}{c}-\frac{1}{a}\right)+CI^2\left(\frac{1}{a}-\frac{1}{b}\right)$
$= O.$

26. (i) $IA. IB = 4R. IC \sin^2 \frac{C}{2}.$

(ii) $AI_1. BI_1. = 4R. CI \cos^2 \frac{C}{2}$

(iii) $AI. BI\ CI = 4R. r^2.$

(iv) $(a + b + c)\ II_1. II_2. II_3 = 8R\ abc.$

27. உள் வட்டம், $\triangle ABC$ன் பக்கங்களை $C, E, F$ல் தொட்டால் $EF : FD : DE\ : \cos\frac{A}{2} : \cos\frac{B}{2} : \cos\frac{C}{2}.$

28. $\triangle ABC$ன் சுற்று மையம் $S$: $BC, CA, AB$யிலிருந்து $x, y, z$ தூரங்களில் முறையே இருந்தால் $\frac{a}{x}+\frac{b}{y}+\frac{c}{z}=\frac{abc}{4xyz}.$

29. $O$, முக்கோணம் $ABC$ ன் செங்குத்து மையமானால்,
$a. OB. OC + b. OC. OA + c. OA. OB = abc.$

30. $\triangle ABC$ன் பாத முக்கோணத்தின்

(i) சுற்றளவு $= 4R \sin A \sin B. \sin C.$

(ii) உள் ஆரம் $= 2R. \cos A. \cos B. \cos C$

31. $\triangle ABC$ன் பாத முக்கோணம் $DEF$. என்றால் $\triangle DEF$ன் பரப்பு $ABC$ன் பரப்பின் கால்பாகத்தைவிட அதிகமாக இராது என நிறுவுக

$ABC$ன் பரப்பு $= 2R^2 \sin A \sin B \sin C.$ (சூத்திரம் (b))

$\triangle DEF$ன் பரப்பு $= \frac{R^2}{2} \sin 2A. \sin 2B. \sin 2C.$

(மாதிரி 2. ϕ 2·110)

$$\therefore \frac{\triangle DEF}{\triangle ABC} = \frac{\sin 2A. \sin 2B. \sin 2C}{4. \sin A. \sin B. \sin C.}$$

$$= \frac{2 \sin A \cos A. 2 \sin B. \cos B. 2 \sin C \cos C}{4. \sin A. \sin B. \sin C}$$

$$= 2. \cos A. \cos B. \cos C \qquad \text{..............(1)}$$

ஆனல் $\triangle ABC$ன் சுற்று மையம் $S$, செங்குத்து மையம் $O$, எனில், $SO^2 = R^2 \{1 - 8\cos A.\cos B.\cos C\}$ (§ 2·18) ஆகையால், $8\cos A.\cos B.\cos C < 1$. ..............(ii)

(i), (ii) லிருந்து $\frac{\triangle DEF}{\triangle ABC} \leq \frac{1}{4}$.

## இரண்டாம் பிரிவு (நாற்கரங்கள்)

**2. 21.**

ஒரு நாற்கரம் $ABCD$ன் பரப்பை அதனுடைய பக்கங்கள் $AB, BC. CD, DA$; ஒரு சோடி எதிர்கோணங்களின் கூடுதல் இவ்வுறுப்புக்கள் மூலம் கண்டுபிடிக்க.

$AB = a$; $BC = b$: $CD = C$;
$DA = d$; $2s = a+b+c+d$.
$b + c + d - a = a + b + c + d - 2a$
$= 2s - 2a$
$\therefore\ b + c + d - a = 2(s - a)$.
இம்மாதிரியே,
$c + d + a - b = 2(s - b)$
$d + a + b - c = 2(s - c)$
$a + b + c - d = 2(s - d)$



படம் - 13 (அ)

$\triangle ABD$யிலிருந்து $BD^2 = a^2 + d^2 - 2ad\cos A$
(சூத்திரம் (c)

$\triangle BCD$யிலிருந்து $BD^2 = b^2 + c^2 - 2bc.\cos C$.

$\therefore\ b^2 + c^2 - 2bc\cos C = a^2 + d^2 - 2ad\cos A$.

அல்லது $2\{ad\cos A - bc\cos C\} = a^2 + d^2 - b^2 - c^2$ ..... (i)

$\triangle ABD$ன் பரப்பு $= \frac{1}{2}ad\sin A$

$\triangle BCD$ன் பரப்பு $= \frac{1}{2}bc\sin C$.

நாற்கரம் $ABCD$ன் பரப்பு $= \triangle = \frac{1}{2}ad\sin A + \frac{1}{2}bc\sin C$.

$\therefore\ 2\{ad\sin A + bc\sin C\} = 4\triangle$ ............ (ii

(i) ஐயும் (ii) ஐயும் வர்க்கம் செய்து கூட்டினல்,

$4\{a^2d^2\cos^2 A + b^2c^2\cos^2 C - 2abcd\cos A\cos C$
$+ a^2d^2\sin^2 A + b^2c^2\sin C + 2abcd\sin A\sin A\sin C\}$
$= 16\triangle^2 + (a^2 + d^2 - b^2 - c^2)^2$.

அதாவது,
$4\{a^2d^2 + b^2c^2 - 2abcd(\cos A\cos C - \sin A\sin c)\}$
$= 16\triangle^2 + (a^2 d^2 - b^2 - c^2)^2$

ஆகையால், $A + C = 2\alpha$ எனில்,

$$4\{a^2d^2+b^2c^2-2abcd.\cos 2\alpha\} = 16\triangle^2+(a^2+d^2-b^2-c^2)^2$$

ஆனால், $\cos 2\alpha = 2\cos^2\alpha - 1.$

ஆகையால்,

$$4\{a^2d^2+b^2c^2+2abcd-4\,abcd\cos^2\alpha\} = 16\triangle^2+(a^2+d^2-b^2-c^2)^2$$

அதாவது,

$$16\triangle^2 = 4(ad+bc)^2-(a^2+d^2-b^2-c^2)^2-16abcd\cos^2\alpha$$
$$=(2ad+2bc+a^2+d^2-b^2-c^2)(2ad+2bc-a^2-d^2+b^2+c^2)-16abcd.\cos^2\alpha.$$

அல்லது,

$$16\triangle^2 = \{(a+d)^2-(b-c)^2\}.\{(b+c)^2-(a-d)^2\}-16\,abcd\cos^2\alpha$$
$$=(a+d+b-c)(a+d-b+c)(b+c+a-d)(b+c-a+d)-16\,abcd\cos^2\alpha$$
$$=2(s-c).2(s-b).2(s-d).2(s-a)-16abcd\cos^2\alpha$$

எனவே,

$$16\triangle^2=16(s-a)(s-b)(s-c)(s-d)-16abcd\cos^2\alpha$$
$$(\text{அ-து})\ \triangle^2=(s-a)(s-b)(s-c)(s-d)-abcd\cos^2\alpha.$$

குறிப்பு (1) :— கொடுக்கப்பட்ட பக்கங்கள் $a, b, c, d$ஐக் கொண்டு வரையப்படும், மிகப் பெரிய நாற்கரம் வட்ட நாற்கரமாகும்.

ஏனெனில், $\cos^2\alpha$.வின் மிகச் சிறிய மதிப்பு $=0$. ஆகையால், $\alpha=90°$. அதாவது $2\alpha=180°$. ஆகையால், $\hat{A}+\hat{C}=180°$. அதாவது $ABCD$ ஒரு வட்ட நாற்கரம்.

குறிப்பு (2) :— பக்கங்கள் $a, b, c, d$ல் $d$ பூச்சியமாயின், நாற்கரம் முக்கோணமாக மாறும் அந்நிலையில், $2s=a+b+c$ என்றும் $\triangle^2=s(s-a)(s-b)(s-c)$ எனறும் மாறும்.

குறிப்பு (3) :— நாற்கரத்தின் கோணங்கள் நான்கினில் ஏதேனும் ஒன்றுக்கு கொசைன் (cosine) கண்டுபிடிப்பதற்கு சூத்திரம் (c)ஐயும், சைன் (sin) கண்டுபிடிப்பதற்கு சூத்திரம் (b)ஐயும் உபயோகிக்க வேண்டும்.

2.22. மூலை விட்டங்களின் நீளம் $x, y$; அவைகளுக்கு இடையே உள்ள கோணம் $\theta$ ஆயின், நாற்கரத்தின் பரப்பைக் கண்டுபிடிக்க.

மூலை விட்டம் $= AC = x$; மூலை விட்டம் $BD = y$;

$A\hat{D}B = D\hat{O}C = \theta$ என்றால்,

$\triangle AOB$ன் பரப்பு $= \frac{1}{2} OA.OB. \sin \theta$...(i)
சூத்திரம் (b)



படம் 14

இம்மாதிரியே,

$\triangle OCB$ன் பரப்பு

$= \frac{1}{2}.OB.OC \sin (180° - \theta)$

$= \frac{1}{2} OB.OC. \sin \theta$ ...(ii)

$\triangle ODC$ன் பரப்பு

$= \frac{1}{2} OD.OC \sin \theta$ ......(iii)

$\triangle OAD$ன் பரப்பு

$= \frac{1}{2}. OA.OD \sin (180° - \theta) = \frac{1}{2} OA.OD. \sin \theta$ .........(iv)

(i); (ii); (iii); (iv)ஐக் கூட்ட

நாற்கரப் பரப்பு $= \frac{1}{2} \sin \theta \{ OA \cdot OB + OB \cdot OC + OC \cdot OD + OD \cdot OA \}$

$= \frac{1}{2} \sin \theta \{ (OA + OC)(OB + OD) \}$

$= \frac{1}{2} \sin \theta (AC)(BD)$

ஆகையால், $\triangle = \frac{1}{2} xy \sin \theta$.

2·23. நாற்கரம் $ABCD$ன பரப்பை அதன் பக்கங்கள், அதன் மூலை விட்டங்கள் இவற்றின் மூலம கண்டுபிடிக்க.

வழக்கம்போல் $AB = a$; $BC = b$ $CD = c$; $DA = d$ $AC = x$; $BD = y$ எனக் கொள். (படம் 14ஐப் பார்)

இப்பொழுது $\triangle OBC$யிலிருந்து,

$$a^2 = OA^2 + OB^2 - 2 OA \cdot OB \cos \theta.$$

இம்மாதிரியே $c^2 = OC^2 + OD^2 - 2 OC \cdot OD \cos \theta$.

$$b^2 = OB^2 + OC^2 - 2 OB \cdot OC \cos (180° - \theta)$$

$\therefore$ $b^2 = OB^2 + OC^2 + 2 OB \cdot OC \cos \theta$.

இம்மாதிரியே $d^2 = OA^2 + OD^2 + 2 OA \cdot OD \cos \theta$.

ஆகையால்,

$$b^2 + d^2 - a^2 - c^2 = \{ OA^2 + OB^2 + OC^2 + OD^2 \} + 2 \cos \theta \{ OA \cdot OD + OB \cdot OC \}$$
$$- \{ OA^2 + OB^2 + OC^2 + OD^2 \} + 2 \cos \theta \{ OA \cdot OB + OC \cdot OD \}$$
$$= 2 \cos \theta \{ OA \cdot OB + OB \cdot OC + OC \cdot OD + OD \cdot OA \}$$
$$= 2 \cos \theta \{ (OA + OC)(OB + OD) \}$$
$$= 2 \cos \theta (AC)(BD)$$

$\therefore \quad b^2+d^2-a^2-c^2=2\,xy\cos\theta.$ ........(i)

ஆனல், $4\triangle \quad = 2\,xy\sin\theta$ (§ 2·22) ........ (ii)

(i), (ii)ஐ வர்க்கம் செய்து கூட்ட.

$16\triangle^2+(b^2+d^2-a^2-c^2)^2=4x^2y^2\,(\sin^2\theta+\cos^2\theta)$

$=4x^2y^2.$

அதாவது $16\triangle^2 \quad = 4x^2y^2-(b^2+d^2-a^2-c^2)^2$

எனவே $\triangle \quad = \frac{1}{4}\sqrt{4x^2y^2-(b^2+d^2-a^2-c^2)^2}$

குறிப்பு:—$ABCD$ என்பது வட்ட நாற்கரமாயின், மேற்கண்ட பரப்பு சூத்திரம் பின்வருமாறு மாறும்:

தொலமியின் (Ptolemy's Theorem) தேற்றப்படி, வட்ட நாற்கரத்தின் மூலை விட்டப் பெருக்கற் பலன் $xy=ac+bd$.

ஆகையால், $\triangle=\frac{1}{4}\sqrt{(2ac+2bd)^2-(b^2+d^2-a^2-c^2)^2}$

$=\frac{1}{4}\cdot 4.\sqrt{(s-a)(s-b)(s-c)(s-d)}$ (§ 2·21)

$=\sqrt{(s-a)(s-b)(s-c)(s-d)}$

## மாதிரிக் கணக்குகள்

**2·24.**

**மாதிரி 1.** நாற்கரம் $ABCD$ல், $AB$, $BC$, $CD$ முறையே $a$, $b$, $c$ என்னும் நீளத்திற்கு சமமாகவும்' $B$ன் மிகை நிரப்புக்கோணம் $\theta$, $C$ன் மிகை நிரப்புக் கோணம் $\phi$ ஆகவும் இருப்பின், இந்நாற்கரத்தின் பரப்பு $\frac{1}{2}\{ab\sin(\theta)+bc\sin\phi+ca\sin(\theta+\phi)\}$ எனக் காண்க.

$AB$, $CD$ இவ்விரு பக்கங்களும் $O$ல் சந்திக்கட்டும். $CO=l$; $BO=m$ எனக்கொள்.




படம் 15

$B\hat{O}C=180°-\theta-\phi$

$\therefore \quad \triangle OAD=\frac{1}{2}(a+m)(c+l)\sin(180°-\theta-\phi)$

$=\frac{1}{2}\{ac+al+mc+ml\}\sin(\theta+\phi)$ ........(i)

$\triangle \quad OBC = \frac{1}{2}\, ml \sin(180° - \theta - \phi)$ ..........(i)

$\qquad\quad = \frac{1}{2}\, ml \sin(\theta + \phi)$ ..........(ii)

(i)லிருந்து (ii)ஐக் கழிக்க.

நாற்கரம் $ABCD$ன் பரப்பு $= \frac{1}{2} \sin(\theta + \phi). \; \{ac + al + mc + ml - ml\}$

$= \frac{1}{2} \sin(\theta + \phi). \; \{ac + al + mc\}$ ......(A)

ஆனல். $\triangle OBC$லிருந்து, $\dfrac{m}{\sin\phi} = \dfrac{l}{\sin\theta} = \dfrac{b}{\sin(180° - \theta - \phi)}$

(சூத்திரம் (a))

ஆகையால், $m \sin(\theta + \phi) = b \sin\phi.$ .........(B)

மேலும், $l \sin(\theta + \phi) = b \sin\theta.$ .........(C)

(A). (B), (C)யிலிருந்து,

நாற்கரம் $ABCD$ன் பரப்பு $= \frac{1}{2}\, ac \sin(\theta + \phi) + \frac{1}{2}\, a \cdot l \sin(\theta + \phi)$
$+ \frac{1}{2}\, c \cdot m \sin(\theta + \phi)$

$= \frac{1}{2}\, ac \sin(\theta + \phi) + \frac{1}{2} a.\, b \sin\theta + \frac{1}{2} c \cdot b \sin\phi.$

$= \{ab \sin\theta + bc \sin\phi + ca \sin(\theta + \phi)\}$

மாதிரி 2. $a, b, c, d$ என்னும் நீளங்களைக்கொண்டு வரையப்பட்ட இரு சமபரப்புள்ள நாற்கரங்களில் முறையே $a$, $b$க்கு இடையே உள்ள கோணம் 90° ஆகவும், $cd$க்கு இடையே உள்ள கோணம் 90° ஆகவும் இருந்தால் $ab = cd$ அல்லது $a^2 + b^2 = c^2 + d^2$ என நிறுவுக.

$AB = a$; $BC = b$; $CD = c$; $DA = d$; $\hat{B} = 90°$ உள்ள நாற்கரம் $ABCD$ஐயும், $A_1B_1 = a$; $B_1C_1 = b$; $C_1D_1 = c$; $D_1A_1 = d$.

$\hat{D}_1 = 90°$ உள்ள நாற்கரம் $A_1B_1C_1D_1$ஐயும் எடுத்துக்கொள். $\triangle$, இரு நாற்கரங்களின் பரப்பைக் குறிக்கட்டும்.

நாற்கரம் $ABCD$யிலிருந்து

$\triangle ADC + \triangle ABC = \triangle.$

$\therefore \; \frac{1}{2} cd \sin\hat{D} + \frac{1}{2} ab = \triangle.$

அதாவது, $2cd \sin\hat{D} = 4\triangle - 2ab.$ ............(i)

மேலும், $2cd \cos\hat{D} = C^2 + d^2 - AC^2$

$= C^2 + d^2 - (a^2 + b^2)$

$(\because \; \hat{ABC} = 90°)$

$= c^2 + d^2 - a^2 - b^2$ ..........(ii)

(i). (ii)ஐ வர்க்கம் செய்து கூட்ட.

$$4c^2d^2 = (4\triangle - 2ab)^2 + (c^2 + d^2 - a^2 - b^2)^2 \ldots (A)$$

இம்மாதிரியே நாற்கரம் $A_1B_1C_1D_1$யிலிருந்து,

$$4a^2b^2 = (4\triangle - 2cd)^2 + (a^2 + b^2 - c^2 - d^2) \ldots (B)$$

$(B)$லிருந்து $(A)$ஐக் கழிக்க.

$$4(a^2b^2 - c^2d^2) = (4\triangle - 2cd)^2 - (4\triangle - 2ab)^2$$

ஆகையால், $a^2b^2 - c^2d^2 = (2\triangle - cd)^2 - (2\triangle - ab)^2$

$$= (2\triangle - cd + 2\triangle - ab)$$
$$(2\triangle - cd - 2\triangle + ab)$$

அதாவது,

$$(ab - cd)(ab + cd) = (ab - cd)(4\triangle - ab - cd)$$

ஆகையால் $ab - cd = O$ ......... iii)

அல்லது $ab + cd = 4\triangle - ab - cd$

$\therefore$ $ab + cd = 2\triangle$.

அதாவது, $\frac{1}{2}ab + \frac{1}{2}cd = \triangle$ ......... (iv)

ஆனால்,

$$\tfrac{1}{2}ab + \tfrac{1}{2}cd \sin D = \triangle.$$

ஆகையால், $\sin \hat{D} = 1$.

அதாவது, $\hat{D} = 90°$.

ஆகையால், முதல் நாற்கரம் $ABCD$ல், $A\hat{B}C = C\hat{D}A = 90°$.

எனவே $a^2 + b^2 = AC^2 = c + d^2$ ......... (v)

(iii), (v) லிருந்து, $ab = cd$ அல்லது $a^2b^2 = c^2 + d^2$.

2.25. பொதுவாக, ஒரு $ABCD$ என்னும் நாற்கரத்தின் நான்கு பக்கங்கள் $AB$ $BC$, $CD$, $DA$ஐத் தொடும் வட்டம் வரைய முடியாது. ஏனெனில், ஏதேனும் மூன்று பக்கங்கள், உதாரணமாக $AB$, $BC$, $CD$, ஐத் தொடக்கூடிய ஒரு வட்டம் நான்காவது பக்கம் $DA$ஐத் தொடவேண்டிய அவசியமில்லை.

2.26. உள் வட்டம் உள்ள (circumscribed about a circle) நாற்கரத்தின் பரப்பை, அதன் பக்கங்கள், ஒரு ஜதை எதிர்க் கோணங்களின் கூடுதல் இவ்வுறுப்புக்கள் மூலம் கண்டு பிடிக்க.

நாற்கரம் $ABCD$ன் பக்கங்கள் முறையே $a, b, c, d$; $\hat{A} + \hat{C} = 2\alpha$ எனக் கொள்.

நாற்கரத்தின் பரப்பு $\triangle$ எனில்,

$$\triangle^2 = (s-a)(s-b)(s-c)(s-d)$$
$$- abcd\cos^2\alpha. \quad (\S\ 2{\cdot}21) \qquad \ldots\ldots\ldots(i)$$

$P, Q, R, S$ முறையே $AB$, $BC$, $CD$, $DA$ வட்டத்தைத் தொடும் புள்ளிகள் ஆனால், $AP = AS$ ($\because AP$, $AS$ இரண்டும் $AS$ இலிருந்து (வட்டத்திற்கு வரையப்பட்ட தொடுகோடுகளின் நீளங்கள்)
$= x$ எனக்கொள்க.

இம்மாதிரியே, $BP = BQ = Y$ எனவும், $CR = CQ = Z$ எனவும், $DR = DS = u$ எனவும் கொண்டால்,



படம் 16

$$2s = a+b+c+d$$
$$= (x+y) + (y+z) + (z+u) + (u+x)$$
$$= 2(x+y+z+u)$$
$$\therefore \quad s = x+y+z+u$$
$$= (x+y) + (z+u)$$
$$= AB + CD = a+c.$$

இம்மாதிரியே,

$$s = x+y+z+u$$
$$= (y+z) + (x+u)$$
$$= BC + AD = b=d.$$

எனவே, உள்வட்டம் உள்ள நாற்கரத்திற்கு,

$$s = a+c = b+d. \qquad \ldots\ldots\ldots(A)$$

ஆகையால், $(i)$லிருந்து,

$$\triangle^2 = (s-a)(s-b)(s-c)(s-d) - abcd\cos^2\alpha$$
$$= (a+c-a)(b+d-b)(a+c-c)(b+d-d) - abcd\cos^2\alpha$$
$$= c.\,d.\,a.\,b - abcd\cos^2\alpha$$
$$= abcd(1-\cos^2\alpha)$$
$$= abcd\sin^2\alpha$$

எனவே,

$$\triangle = \sin\alpha.\sqrt{abcd}$$

2·2·7. உள் வட்டமுள்ள நாற்கரத்தின் உள் ஆரத்தை நாற்கரத்தின் பரப்பு, நாற்கரத்தின் சுற்றளவு, இவ்வுறுப்புகள் மூலம் கண்டு பிடிக்க.

படம் (16)லிருந்து,

$\triangle AIB$ன் பரப்பு $= \frac{1}{2}. IP. AB$

$= \frac{1}{2}. r. a$

இம்மாதிரியே,

$\triangle BIC$ன் பரப்பு $= \frac{1}{2}. r. b;$

$\triangle CID$ன் பரப்பு $= \frac{1}{2}. r. c;$

$\triangle DIA$ன் பரப்பு $= \frac{1}{2}. r. d$

இந்நான்கு முக்கோணங்களின் பரப்பைக் கூட்டினால்,

$\triangle AIB + \triangle BIC + \triangle CID + DIA = \frac{1}{2} r (a+b+c+d)$

அதாவது, நாற்கரம் $ABCD$ன் பரப்பு $= \frac{1}{2} r (2s)$

அல்லது, $\triangle = rs.$

ஆகையால், $r = \frac{\triangle}{s}$ ..............(B)

குறிப்பு :— § 2.11, முக்கோண சூத்திரம் (c)ஐ மேற்கண்ட நாற்கர சூத்திரம் (B)யுடன் ஒப்பிட்டுப் பார்.

2·28. § 2·26 தேற்றத்தின் மறுதலை. $ABCD$ என்னும் நாற்கரத்தில், $AB+CD=BC+DA$ ஆயின் நாற்கரத்தின் பக்கங்கள் ஒரு வட்டத்தைத் தொடும் என நிறுவுக.

நாற்கரத்தின் பக்கங்கள் $DA$, $AB$, $BC$ஐயத் தொடும் வட்டம் $\Sigma$ஐ வரை. (மூன்று கோடுகளைத் தொடும வட்டத்தை, எப்பொழுதும் வரைய முடியும்)

$\Sigma$ஐ, $DC$ தொடவில்லை எனக் கொள்வோம் .........(A)

$DC_1$ என்னும தொடு கோட்டை $D$யிலிருந்து $\Sigma$விற்கு வரை அது, $BC$ஐ $C_1$ல் வெட்டட்டும்.




படம் 17

ஆகையால், $AB+C_1D=BC_1+DA$ (§ 2·26 (A)

ஆனால், $AB+CD = BC+DA$ (கொள்கை)

எனவே, $CD-C_1D=BC-BC^1 = C_1C.$

அல்லது, $DC = DC_1+C_1C.$

அதாவது, $\triangle DCC_1$ல் இரு பக்கங்களின் கூட்டுத் தொகை மூன்றாவது பக்கத்திற்கு சமம்.

ஆகையால், $C_1$ என்னும் புள்ளி, $DC$ல் அமையும்.

ஆனல், $C^1$, $BC$ன் மீது உள்ளது.

ஆகையால், $C_1$, $BC$ $DC$ என்ற இரு கோடுகளின் மீதும் அமையும்.

அதாவது, $C_1$, $C$யுடன் இணையும். ($C_1$, $C$ coincide)

ஆகையால், $DC$, $DC$, உடன் இணையும்.

ஆனல், $DC_1$, $\Sigma$ஐத் தொடுகிறது. (அமைப்பு)

அதாவது, $DC$, $\Sigma$ஐத் தொடுகிறது. .........($B$)

($A$), ($B$) இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று மாருக இருப்பதால் நாற்கரத்தின் பக்கம் $DC$, $\Sigma$ஐத தொடவில்லை என்று நாம் வைத்துக் கொண்டது தவறு.

எனவே, நாற்கரம் $ABCD$ன் நான்கு பக்கங்களும் $\Sigma$ஐத் தொடுகின்றன.

## மாதிரிக் கணக்குகள்

2.29.

மாதிரி 1. $ABCD$ என்னும் நாற்கரத்தில் $AB+CD=BC+DA$ ஆயின், $\triangle ABD$ன் உள் வட்டம் $\triangle BCD$ன் உள் வட்டத் தொடும் என நிறுவுக.



படம் 18

$\triangle ABD$ன் உள் வட்டம் $AB$, $BD$, $DA$ஐ முறையே $K$, $P_1$ $L$ல் தொடட்டும். $\triangle BCD$ன் உள் வட்டம், $BC$, $CD$, $DB$ஐ முறையே $N$, $M$ $p_2$ல் தொடட்டும்

$AK=AL$ ($\because AK$, $AL$, வட்டம் $\Sigma_1$ன் தொடுகோடுகள்)

இம்மாதிரியே

$BP_1=BK$,

$DL=DP_1$

ஆகையால்,

$$\begin{aligned}2(BP_1+DA) &= 2(BP_1+DL+LA)\\ &= 2BP_1+2DL+2LA\\ &= BP_1+BK+DL+DP_1+AL+AK\\ &= (BP_1+P_1D)+(DL+LA)+(AK+KB)\\ &= BD+DA+AB\end{aligned}$$

$\therefore \quad 2BP_1 = BD + DA + AB - 2DA$

$= BD + AB - DA \quad \ldots\ldots\ldots(i)$

இம்மாதிரியே, $\triangle BDC$யிலிருந்து,

$2BP_2 = BC + BD - CD. \quad \ldots\ldots\ldots(ii)$

ஆனல், $AB + CD = BC + DA$ (கொள்கை)

ஆகையால்.

$AB - DA = BC - CD$

இரு பக்கமும் $BD$ஐக் கூட்ட.

$BD + AB - DA = BC + BD - CD$

(i), (ii) லிருந்து.

$2BP_1 = 2BP_2$.

அதாவது, $P_1$, $P_2$ உடன் இணையும.

ஆகையால், வட்டங்கள் $\Sigma_1$. $\Sigma_2$ ஒன்றுக்கொன்று வெளியே தொட்டுக் கொள்ளும். மேலும், இவ்வட்டங்கள் தொடும் புள்ளி $BD$ மீது அமையும்.

மாதிரி 2. உள் வட்டமுள்ள ஒரு நாற்கரத்தின் உச்சிகளிலிருந்து அவ் வட்டத்திற்கு வரையப்படும் தொடு கோடுகளின் நீளங்கள் முறையே $x, y, z, u$ எனில் அவ்வட்டத்தின் ஆரம், $\sqrt{\frac{\Sigma xyz}{\Sigma x}}$ என்றும். அந்நாற்கரத்தின் பரப்பு $\sqrt{\Sigma x \cdot \Sigma xyz}$ என்றும் நிருபி.

படம் 16 (§ 2·26)லிருந்து,
$AP = AS = x$ என்றும்
$BP = BQ = y$ என்றும்
$CQ = CR = z$ என்றும்
$DR = DS = u$ என்றும் வைக்க
$\triangle IPA \equiv \triangle ISA$.

$\therefore \quad I\hat{A}P = \frac{A}{2}$

$\frac{AP}{PI} = \cot\frac{A}{2} \quad (\because \quad I\hat{P}A = 90^\circ)$

(அ-து) $x = r \cot\frac{A}{2} \quad (\because IP = r, AP = P)$

அல்லது, $r = x \tan\frac{A}{2}$

இம்மாதிரியே

$$\left.\begin{aligned} r &= x \tan\frac{A}{2} \\ r &= y \tan\frac{B}{2} \\ r &= z \tan\frac{C}{2} \\ r &= u \tan\frac{D}{2} \end{aligned}\right\} \quad \text{...............(A)}$$

$A+B+C+D=360°$

$$\therefore \frac{A}{2}+\frac{B}{2}+\frac{C}{2}+\frac{D}{2}=180°$$

$$\tan\left(\frac{A}{2}+\frac{B}{2}\right)=\tan\left(180°-\overline{\frac{C}{2}+\frac{D}{2}}\right)$$

$$= -\tan\left(\frac{C+D}{2}\right)$$

$$\frac{\tan\frac{A}{2}+\tan\frac{B}{2}}{1-\tan\frac{A}{2}\cdot\tan\frac{B}{2}} = -\frac{\tan\frac{C}{2}+\tan\frac{D}{2}}{1-\tan\frac{C}{2}\cdot\tan\frac{D}{2}}$$

(அ-து) $\left(\tan\frac{A}{2}+\tan\frac{B}{2}\right)+\left(\tan\frac{C}{2}+\tan\frac{D}{2}\right)$

$$= \Sigma\tan\frac{B}{2}\cdot\tan\frac{C}{2}\ \tan\frac{D}{2}.$$

அல்லது, $\Sigma\tan\frac{A}{2} = \Sigma\tan\frac{B}{2}\cdot\tan\frac{C}{2}\cdot\tan\frac{D}{2}.$

ஆகையால், $(A)$யிலிருந்து, $\Sigma\frac{r}{x} = \Sigma\frac{r^3}{xyz}.$

எனவே, $r^2 = \frac{\Sigma xyz}{\Sigma x}.$

அல்லது, $r = \sqrt{\frac{\Sigma xyz}{\Sigma x}}$

$$\begin{aligned} s &= a+c \qquad (\S\ 2\cdot26\ (A)) \\ &= x+y+z+u \\ &= \Sigma x \qquad \text{.........(1)} \end{aligned}$$

---

நாற்கரத்தின் பரப்பு $\Delta = rs$ ( § 2·27 (*B*) )

$$= \sqrt{\frac{\Sigma_1 xyz}{\Sigma_1 x}} \times (\sqrt{\Sigma_1 x})^2$$

$$= \sqrt{\Sigma_1 x \times \Sigma_1 xyz}.$$

2·210. வட்ட நாற்கரம் (Quadrilateral inscribed in a circle)

ஒரு வட்ட நாற்கரத்தின் பக்கங்கள் $a, b, c, d$ எனில் அதன் பரப்பை $a, b, c, d$ மூலம் கண்டுபிடிக்க.




படம் 19

$\Delta DBA$ன் பரப்பு $= \frac{1}{2}\, ad \sin A$.

$\Delta DCB$ன் பரப்பு $= \frac{1}{2}\, bc \sin C$.

நாற்கரம் $ABCD$ன் பரப்பு $= \Delta$

$= \Delta DBA$ன் பரப்பு $+ \Delta DCB$ன் பரப்பு

$= \frac{1}{2}\, ad \sin A + \frac{1}{2}\, bc \sin C.$

$= \frac{1}{2}\, ad \sin A + \frac{1}{2}\, bc \sin A \quad (\because \hat{A} + \hat{C} = 180°)$

$= \frac{1}{2} \sin A\,(ad + bc)$

ஆகையால், $\sin A = \dfrac{2\Delta}{ad + bc}$ ......... (i)

$\Delta DBA$, $\Delta DCB$யிலிருந்து,

$a^2 + d^2 - 2ad \cos A = BD^2 = C^2 + b^2 - 2bc \cos C$

$= b^2 + c^2 + 2bc \cos A \quad (\hat{A} + \hat{C} = 180°)$

ஆகையால், $2 \cos A\,(ad + bc) = a^2 + d^2 - b^2 - c^2$

அதாவது, $\cos A = \dfrac{a^2 + d^2 - b^6 - c^2}{2(ad + bc)}$ .........(ii)

(i), (ii)ஐ வர்க்கம் செய்து கூட்ட

$$\sin^2 A + \cos^2 A = \frac{4\Delta^2}{(ad + bc)^2} + \frac{(a^2 + d^2 - b^2 - c^2)^2}{4(ad + bc)^2}$$

அதாவது, $\frac{4\triangle^2}{(ad+bc)^2} = 1 - \frac{(a^2+d^2-b^2-c^2)^2}{4(ad+bc)^2}$

ஆகையால் $16\triangle^2 = 4(ad+bc)^2 - (a^2+d^2-b^2-c^2)^2$

$= \{2(ad+bc)+a^2+d^2-b^2-c^2\} \times \{2(ad+bc)-a^2-d^2+b^2+c^2\}$

அதாவது, $16\triangle^2 = \{(a+d)^2-(b-c)^2\} \times \{(b+c)^2-(a-d)^2\}$

$= (a+d+b-c)(a+d-b+c) \times (b+c+a-d)(b+c-a+d)$

$= 2(s-c) \cdot 2(s-b) \cdot 2(s-d) \quad 2(s-a)$

$16\triangle^2 = 16(s-a) \cdot (s-b) \cdot (s-c) \cdot (s-d)$

ஆகையால் ஒரு வட்ட நாற்கரத்தின் பரப்பு=

$\triangle = \sqrt{(s-a)(s-b)(s-c)(s-d)}$

2·211. வட்ட நாற்கரததின் மூலை விட்டங்களை அதன் பக்கங்கள் மூலம் விவரிக்க.

படம் 19 (§ 2·210)லிருந்து,

$BD^2 = a^2+d^2-2ad\cos A$

$= a^2+d^2-2ad\left\{\frac{a^2+d^2-b^2-c^2}{2(ad+bc)}\right\}$ (§ 2·210 (ii))

$= \frac{(a^2+d^2)(ad+bc)-ad(a^2+d^2-b^2-c^2)}{(ad+bc)}$

$= \frac{bc(a^2+d^2)+ad(b^2+c^2)}{(ad+bc)}$

$= \frac{bca^2+bcd^2+adb^2+adc^2}{(ad+bc)}$

$= \frac{(bca^2+adb^2)+(bcd^2+adc^2)}{(ad+bc)}$

$= \frac{ab(ac+bd)+cd(ac+bd)}{(ad+bc)}$

$\therefore \quad BD^2 = \frac{(ab+cd)(ac+bd)}{(ad+bc)}$

இம்மாதிரியே,

$AC^2 = \frac{(ad+bc)(ac+bd)}{(ab+cd)}$

குறிப்பு:—மூலை விட்டங்கள் $AC$, $BD$யிலிருந்து,

$AC \cdot BD = (AB \cdot CD) + (BC \cdot DA)$ எனத் தொலமியின் தேற்றத்தை நிரூபிக்கலாம்.

$$AC^2 - BD^2 = \frac{(ad+bc)(ac+bd)}{(ab+cd)} \times \frac{(ab+cd)(ac+bd)}{(ad+bc)}$$

$$= (ac+bd)^2$$

$$\therefore \quad AC \cdot BD = AB \cdot CD + BC \cdot DA$$

**2.212.** வட்ட நாற்கரத்தின் பக்கங்கள் மூலம் அவ்வட்டத்தின் ஆரத்தைக் கண்டுபிடிக்க.

$\triangle BDA$ன் சுற்று ஆரம் $= \triangle BCD$ன் சுற்று ஆரம்

= நாற்கரம் $ABCD$ன் சுற்று ஆரம்.

(படம் 19. § 2·210)

சூத்திரம் ($b$) (§ 2·11)லிருந்து,

$$\triangle DBA\text{ன் பரப்பு} = \frac{AB.\ BD.\ DA}{4R}$$

($R$ = சுற்றுவட்ட ஆரம்)

இம்மாதிரியே,

$$\triangle DCB\text{ன் பரப்பு} = \frac{BC.\ CD.\ DB}{4R}$$

நாற்கரம் $ABCD$ன் பரப்பு

$$= \triangle DBA\text{ன் பரப்பு} + \triangle DCB\text{ன் பரப்பு}$$

$$= \frac{BD}{4R} \cdot \left\{ AB.\ DA + BC.\ CD \right\}$$

$$= \frac{BD}{4R} \cdot \left\{ ad + bc \right\}$$

அதாவது, $\triangle = \dfrac{ad+bc}{4R} \cdot \sqrt{\dfrac{(ab+cd)(ac+bd)}{ad+bc}}$

ஆகையால், $R = \dfrac{1}{4\triangle} \sqrt{(ab+cd)(ac+bd)(ad+bc)}$

## மாதிரிக் கணக்கு

**2.213.**

$ABCD$ ஒரு வட்ட நாற்கரம், $AB=a$, $BC=b$, $CD=c$, $DA=d$; $2s=a+b+c+d$. $AC$, $BD$, $O$ என்னும், புள்ளியில் வெட்டுகின்றன. $A\hat{O}B=\theta$ எனில், $\tan\dfrac{\theta}{2} = \sqrt{\dfrac{(s-b)(s-d)}{(s-a)(s-c)}}$ எனக் காண்க.

மூலை விட்டங்களின் நீளங்கள் $x$, $y$ ஆனால்

$$\cos\theta = \frac{b^2+d^2-a^2-c^2}{2xy} \qquad (\S\ 2{\cdot}23\ (1))$$

$$= \frac{b^2+d^2-a^2-c^2}{2.(ac+bd)} \qquad \text{(i)}\ (\S\ 2{\cdot}211\ \text{குறிப்பு})$$

ஆனால் $2\sin^2\frac{\theta}{2} = 1-\cos\theta$ (சூத்திரம் (9) § 1·1)

$$2\cos^2\frac{\theta}{2} = 1+\cos\theta.$$

$$\tan^2\frac{\theta}{2} = \frac{1-\cos\theta}{1+\cos\theta} \qquad \ldots\ldots\ldots\text{(ii)}$$

(i), (ii) லிருந்து,

$$\tan^2\frac{\theta}{2} = \frac{1-\dfrac{b^2+d^2-a^2-c^2}{2(ac+bd)}}{1+\dfrac{b^2+d^2-a^2-c^2}{2(ac+bd)}}$$

$$= \frac{(a+c)^2-(b-d)^2}{(b+d)^2-(a-c)^2}$$

$$= \frac{(a+c+b-d)(a+c-b+d)}{(b+d+a-c)(b+d-a+c)}$$

$$= \frac{2(s-d).2(s-b)}{2(s-c).2(s-a)}$$

$$\therefore\quad \tan^2\frac{\theta}{2} = \frac{(s-b)(s-d)}{(s-a)(s-c)}.$$

ஆகையால் $\tan\frac{\theta}{2} = \sqrt{\frac{(s-b)(s-d)}{(s-a)(s-c)}}.$

2·214. ஒரு வட்ட நாற்கரத்திற்கு உள் வட்டம் இருந்தால் அதன் பரப்பை, பக்கங்கள் மூலம் கண்டுபிடிக்க.

வட்ட நாற்கரத்தின் பக்கங்கள் $a, b, c, d$ எனில்,

அதன் பரப்பு $= \Delta = \sqrt{(s-a)(s-b)(s-c)(s-d)}$ (§ 2·210)

ஆனால் $s = a+c = b+d$. (§ 2·26)

ஆகையால், $\Delta = \sqrt{(a+c-a)(b+d-b)(a+c-c)(b+d-d)}$

$= \sqrt{abcd}$

எனவே, உள் வட்டமுள்ள, வட்ட நாற்கரத்தின் பரப்பு =

$\Delta = \sqrt{abcd}$ ($a, b, c, d$ அந்நாற்கரத்தின் பக்கங்கள்)

## மாதிரிக் கணக்கு

2·215

$a, b, c, d$ என்ற பக்கங்களைக் கொண்ட, உள் வட்ட நாற்கரத்தின் மூலை விட்டங்களுக் கிடையில் உள்ள கோணம் $\cos^{-1}\left(\frac{ac-bd}{cc+bd}\right)$ என நிறுவுக.

$x, y$ நாற்கரத்தின் மூலை விட்டங்களின் நீளமானல்,

$$\cos\theta = \frac{b^2+d^2-a^2-c^2}{2xy} \quad (\S\ 2\ 23.\ \text{(i)}) \quad \ldots\ldots\text{(i)}$$

$$= \frac{b^2+d^2-a^2-c^2}{2(ac+bd)} \quad (\S\ 2{\cdot}211,\ \text{குறிப்பு})$$

$$= \frac{(b+d)^2-(a+c)^2+2(ac-bd)}{2(ac+bd)}$$

$$= \frac{(a+c)^2-(a+c)^2+2(ac-bd)}{2(ac+bd)} \quad (\S\ 2{\cdot}26)$$

$$= \frac{ac-bd}{an+bd}.$$

ஆகையால், $\theta = \cos^{-1}\left(\frac{ac-bd}{ac+bd}\right)$

## அப்பியாசம் 2 (ஆ)

1. $a, b, c, d$ என்ற பக்கங்களைக் கொண்ட உள்ள வட்டமுள்ள நாற்கரத்தின் மூலை விட்டங்களுக்கிடையே உள்ள கோணம் $\phi$. இந்நாற்கரத்தின் ஒரு சோடி எதிர்க் கோணங்களின் கூட்டுத் தொகை $2\alpha$ என்றால், $\tan^2\phi = \frac{4abcd\sin^2\alpha}{(ac-bd)^2}$ என நிறுவுக.

2. $a, b, c, d$ என்ற பக்கங்களைக் கொண்ட வட்ட நாற்கரம் $ABCD$ன் மூலை விட்டங்கள் $E$ல் வெட்டிக் கொண்டால், $\frac{AE}{EC} = \frac{ad}{bc}$ எனக் காண்க.

3. வட்ட நாற்கரம் $ABCD$ன் பக்கங்கள் $a, b, c, d$. $2s = +b+c+d$ ஆனால் $\tan\frac{B}{2} = \sqrt{\frac{(s-a)(s-b)}{(s-c)(s-d)}}$ என நிறுவுக.

4. $a, b, c, d$ என்ற பக்கங்களையும், $x, y$ என்ற மூலை விட்டங்களையும் கொண்ட, உள் வட்டமுள்ள வட்ட நாற்கரத்தின் பரப்பு $\frac{1}{4}\sqrt{x^2y^2-(ac-bd)^2}$ எனக் காண்க.

5. $a$ $b$, $c$, $d$ என்ற பக்கங்களைக் கொண்ட, உள் வட்டமுள்ள வட்ட நாற்கரத்தின் உள் வட்ட ஆரம் $\sqrt{\dfrac{abcd}{(a+c)(b+d)}}$ எனக் காண்க.

உள் வட்டமுள்ள வட்ட நாற்கரம் $ABCD$ன் பக்கங்கள் $a$, $b$, $c$, $d$. $2s=a+b+c+d$ ஆனால், பின் வருவனவற்றை நிறுவுக,

6. $\frac{1}{2}(ad+bc)\sin A = \triangle = \sqrt{abcd}$ ($\triangle$, $ABCD$ன் பரப்பு)

7. $\cos A=(ad-bc)\div(ad+bc)$.

8. $\tan\dfrac{A}{2}=\sqrt{\dfrac{bc}{ad}}$

9. உள் வட்ட ஆரம் $\dfrac{\sqrt{abcd}}{s}$.

10. $A$, $B$, $C$, $D$யிலிருந்து, உள் வட்டத்திற்கு வரையப்படும் தொடு கோடுகளின் நீளங்கள் முறையே $\dfrac{ad}{s}$, $\dfrac{ab}{s}$, $\dfrac{bc}{s}$, $\dfrac{cd}{s}$.

அத்தியாயம் III

# சிறு கோணங்களின் திரிகோண கணித விகிதங்களும், தொடர்க்கூட்டலும்

முதற் பிரிவு (சிறு கோணங்கள்)

3·11. ஆரையன் அளவில் எடுக்கப்பட்ட $\theta$, குறுங்கோண மாகவும் நேர் ஆகவும் இருந்தால், $\sin\theta < \theta \tan\theta$ என நிரூபிக்க.

$O$ஐ மையமாகவும், $OP\ (=a)$ஐ ஆரமாகவும் கொண்ட வட்டத்தை வரை. $OA$ என்னும் ஒரு நேர் கோட்டை எடுத்துக் கொள். $OA$ வட்டத்தை $Q$ல் வெட்டட்டும். $P$ என்ற புள்ளியை $Q\hat{O}P=\theta$ என்னும் படி எடு. $P$ல் வரையப்பட்ட தொடு கோடு $OA$ஐ $A$ல் வெட்டட்டும். $\triangle POQ$ன் பரப்பு $<$ வட்டக் கோணப் பகுதி (Sector of a circle) $POQ$ன் பரப்பு $< \triangle POA$ன் பரப்பு. ........(i)




படம் 20

$\triangle POQ$ன் பரப்பு $= \frac{1}{2}\, OP\cdot OQ \sin\theta$

$= \frac{a^2}{2}\cdot\sin\theta$

வட்டக் கோணப்பகுதி $POQ$ன் பரப்பு $= \frac{a^2}{2}\cdot\theta$.

$\triangle POA$ன் பரப்பு $= \frac{1}{2}\, OP.PA$

$= \frac{1}{2}\, a.\, a\tan\theta \quad = \frac{a^2}{2}\tan\theta$.

ஆகையால், $(i)$லிருந்து,

$\frac{1}{2}a^2\sin\theta < \frac{1}{2}a^2\theta < \frac{1}{2}a^2\tan\theta$.

அதாவது, $\sin\theta < \theta < \tan\theta$.

3·12. $\lim\limits_{\theta\to O}\frac{\sin\theta}{\theta}=1;\ \lim\limits_{\theta\to O}\frac{\tan\theta}{\theta}=1$ என நிரூபிக்க.

§ 3·11லிருந்து $\sin\theta < \theta < \tan\theta$ என நமக்குக் கிடைக்கிறது. முழுவதும் $\sin\theta$ஆல் வகுக்க.

$$1 < \frac{\theta}{\sin\theta} < \frac{1}{\cos\theta}.\ \left(\because \frac{\tan\theta}{\sin\theta}=\frac{1}{\cos\theta}\right)$$

$\theta$ பூச்சியத்தை நெருங்கும் பொழுது, $\cos\theta$, $\cos O$ஐ அணுகும். ஆகையால், $\cos\theta$ன் வரம்பு (limit) = 1.

அதாவது, $\lim\limits_{\theta\to O}\cos\theta = 1.$

ஆகையால், $\theta$ பூச்சியத்தை நெருங்கும் பொழுது $\dfrac{\theta}{\sin\theta}$ ன் வரம்பு 1க்கும் 1க்கும் இடையே உள்ளது.

அதாவது, $\lim\limits_{\theta\to O}\dfrac{\theta}{\sin\theta} = 1.$

ஆகையால், $\lim\limits_{\theta\to O}\dfrac{\sin\theta}{\theta} = 1.$

இம்மாதிரியே, $\lim\limits_{\theta\to O}\dfrac{\tan\theta}{\theta} = \lim\limits_{\theta\leftarrow O}\dfrac{\sin\theta}{\theta}\cdot\dfrac{1}{\cos\theta}$

அல்லது, $\lim\limits_{\theta\to O}\dfrac{\tan\theta}{\theta} = 1.$

குறிப்பு : $\lim\limits_{\theta\to O}\dfrac{\tan^{-1}\theta}{\theta} = 1.$

ஏனெனில் $x = \tan\theta$ என்றால். $\theta = \tan^{-1}x$. மேலும் $\theta$ பூச்சியத்தை நெருங்கும் பொழுது $x$ம் பூச்சியத்தை அணுகுகிறது ($\because \tan O = O$). ஆகையால், $\lim\limits_{\theta\to O}\dfrac{x}{\tan^{-1}x} = 1$

அதாவது, $\lim\limits_{x\to\theta}\dfrac{\tan^{-1}x}{x} = 1.$

## மாதிரிக் கணக்கு

3·13.

$\sin\left(\dfrac{\pi}{3}+x\right) = 0{\cdot}87$ எனில், $x$ன் மதிப்பை ஆரையன் அளவில் இரு தசமத்தான சுத்தமாகக் கண்டுபிடிக்க.

$$\sin\frac{\pi}{3} = \sin 60^\circ = \frac{\sqrt{3}}{2} = \frac{1{\cdot}732}{2} = 0{\cdot}866 \qquad \ldots\ldots\ldots (i)$$

(தோராய மதிப்பு)

(approximate value)

$$\sin\left(\frac{\pi}{3}+x\right) = 0{\cdot}87 \text{ (கொள்கை)} \qquad \ldots\ldots\ldots (ii)$$

(i), (ii)லிருந்து, $x$ன் மதிப்பு, ஆரையன் அளவில் மிகச் சிறியது எனப் புலப்படுகிறது. ஆகையால், $\sin x$, $x$ஐயும்; $\cos x$, 1ஐயும் அணுகும்.

(ii)லிருந்து, $\sin\frac{\pi}{3}\cos x+\cos\frac{\pi}{3}\sin x, = 0{\cdot}87.$ ......(*iii*)

(iii)ல் $\sin x = x$; $\cos x = 1$ என்னும் தோராய மதிப்புக்களைப் பொருத்த

$$\frac{\sqrt{3}}{2}\cdot 1 + \tfrac{1}{2}\cdot x = 0{\cdot}87.$$

ஆகையால், $\tfrac{1}{2}\cdot x = 0{\cdot}87 - 0{\cdot}866$

$= 0{\cdot}004$

அதாவது, $x = 0{\cdot}008^c$ (ஆரையன் அளவு)

$= 0°27'$ (பாகை அளவு)

## அப்பியாசம் 3 (அ)

*கீழ்க்கண்ட சமன்பாடுகளைத் தீர்த்து ஆரையன் அளவில் xன் தோராய மதிப்பைக் காண்க*

1. $\cos\left(\frac{\pi}{3}+x\right) = 0.49$ [விடை. $x = 0{\cdot}0117$]

2. $\sin\left(\frac{\pi}{4}+x\right) = 0{\cdot}721$ [விடை. $x = 0{\cdot}0198$]

3 $\cos\left(\frac{\pi}{5}-x\right) = 0{\cdot}82$ [விடை. $x = 0{\cdot}019$]

*கீழ்க்கண்ட வற்றைத் தீர்த்து, பாகை அளவில், xன் தோராய மதிப்பைக் காண்க.*

4. $\sin(30°+x) = 0{\cdot}519$ [விடை. $x = 1°16'$]

5. $\cos(30°-x) = 0{\cdot}878$ [விடை. $x = 1°22'$]

## இரண்டாம் பிரிவு (எளிய தொடர்க்கூட்டல்)

**3·21** $n$-வது உறுப்பு $u_n$ஐ, $v_n - v_{n-1}$ என்று சுலபமாகப் பிரிக்கக்கூடிய திரிகோண கணித வரிசைகளை மட்டும் நாம் இப்பொழுது காண்போம்

இத்தகைய திரிகோண கணித வரிசையில் $u_n = v_n - v_n - 1$. $n$ஐ, $(n-1$, $(n-2)$ ......2, 1, என மாற்றினால், கீழ்க்கண்ட சமன்பாடுகள் கிடைக்கும்.

$$u_n = v_n - v_{n-1} \qquad \text{———(1)}$$

$$u_{n-1} = v_{n-1} - v_{n-2} \qquad \text{———(2)}$$

$$v_{n-2} = u_{n-2} - v_{n-3} \qquad \text{———(3)}$$

.............................

.............................

$$u_2 = v_2 - v_1 \qquad ——(n-1)$$
$$u_1 = v_1 - v_0 \qquad —— (n)$$

கூட்ட

$u_1 + u_2 + \ldots + u_n = v_n - v_0$ எனக் கிடைக்கிறது.

அதாவது, கொடுக்கப்பட்ட $u_1 + u_2 + \ldots$ வரிசையில், $S_n$ என்பது முதல் $n$ உறுப்புக்களின் கூட்டுத்தொகையைக் குறித்தால்,

$$S_n = v_n - v_0 \qquad ———(A$$

**3 22** $\sin\alpha + \sin(\alpha+\beta) + \sin(\alpha+2\beta) + \ldots\ldots\ldots + \sin(\alpha+\overline{n-1}\,\beta)$

$$= \frac{\sin\left\{\alpha+(n-1)\frac{\beta}{2}\right\} \cdot \sin\frac{n\beta}{2}}{\sin\frac{\beta}{2}}$$ என நிரூபிக்க.

கொடுக்கப்பட்ட திரிகோண கணித வரிசையில், $n$-வது உறுப்பு =

$$u_n = \sin(\alpha+\overline{n-1}\,\beta)$$

இரு பக்கமும் $2\sin\frac{\beta}{2}$ ஆல் பெருக்க.

$$2u_n \sin\frac{\beta}{2} = 2\sin(\alpha+\overline{n-1}\,\beta).\sin\frac{\beta}{2}$$

$$= \cos\left\{\alpha+(\overline{n-1})\beta-\frac{\beta}{2}\right\} - \cos\left\{\alpha+\overline{n-1}\,\beta+\frac{\beta}{2}\right\}$$

(§ 1·4 சூத்திரம் (8))

$$\therefore\ 2u_n\sin\frac{\beta}{2} = \cos\left\{\alpha+(2n-3)\frac{\beta}{2}\right\}$$
$$-\cos\left\{\alpha+(2n-1)\frac{\beta}{2}\right\} \qquad \ldots\ \ldots (1)$$

இம்மாதிரியே, $n$ஐ $(n-1)$, $(n-2)$ ..... 2, 1 ஆக மாற்றினல்,

$$2u_{n-1}\sin\frac{\beta}{2} = \cos\left\{\alpha+(2n-5)\frac{\beta}{2}\right\}$$
$$-\cos\left\{\alpha+(2n-3)\frac{\beta}{2}\right\} \qquad \ldots\ldots (2)$$

.......................................................................................................

$$2u_2\sin\frac{\beta}{2} = \cos\left\{\alpha+\frac{\beta}{2}\right\} - \cos\left\{\alpha+3\frac{\beta}{2}\right\} \qquad \ldots\ldots (n-1)$$

$$2u_1 \sin\frac{\beta}{2} = \cos\left\{\alpha - \frac{\beta}{2}\right\} - \cos\left\{\alpha + \frac{\beta}{2}\right\} \quad \ldots\ldots(n)$$

மேலே உள்ள $n$ சமன்பாடுகளைக் கூட்ட.

$$2\sin\frac{\beta}{2}\cdot\left\{u_1+u_2+\ldots+u_{n-1}+u_n\right\}$$

$$= \cos\left(\alpha-\frac{\beta}{2}\right) - \cos\left(\alpha+2\overline{n-1}\,\frac{\beta}{2}\right)$$

$$= 2\sin\left\{\frac{\alpha-\frac{\beta}{2}+\alpha+2\,\overline{n-1}\,\frac{\beta}{2}}{2}\right\}$$

$$\sin\left\{\frac{\alpha+2\overline{n-1}\,\frac{\beta}{2}-\alpha+\frac{\beta}{2}}{2}\right\}$$

$$= 2\sin\left\{\alpha+(n-1)\frac{\beta}{2}\right\}\cdot\sin\left\{n\frac{\beta}{2}\right\}.$$

அதாவது, $$S_n = \frac{\sin\left(\alpha+\overline{n-1}\,\frac{\beta}{2}\right).\ \sin n\frac{\beta}{2}}{\sin\frac{\beta}{2}}$$

**3.23** $\cos\alpha+\cos(\alpha+\beta)+\cos(\alpha+2\beta)+\ldots+\cos(\alpha+\overline{n-1}\beta)$

$$= \frac{\cos\left\{\alpha+(n-1)\frac{\beta}{2}\right\}\cdot\sin\frac{n\beta}{2}}{\sin\frac{\beta}{2}}$$ என நிரூபிக்க.

§ 3·22 லிருந்து

$\sin\alpha+\sin(\alpha+\beta)+\sin(\alpha+2\beta)+\ldots+\sin(\alpha+\overline{n-1\beta})$

$$= \frac{\sin\left\{\alpha+(n-1)\frac{\beta}{2}\right\}\cdot\sin\frac{n\beta}{2}}{\sin\frac{\beta}{2}}$$

$\alpha$ஐ $\alpha+\frac{\pi}{2}$ என மாற்ற.

$$\sin\left(\alpha+\frac{\pi}{2}\right)+\sin\left(\alpha+\frac{\pi}{2}+\beta\right)+\sin\left(\alpha+\frac{\pi}{2}+2\beta\right)$$

$$+\ldots+\sin\left(\alpha+\frac{\pi}{2}+\overline{n-1}\beta\right)$$

$$=\frac{\sin\left\{\alpha+\frac{\pi}{2}+(n+1)\frac{\beta}{2}\right\}\cdot\sin\frac{n\beta}{2}}{\sin\frac{\beta}{2}}$$

அதாவது,

$$\cos\alpha+\cos(\alpha+\beta)+\cos(\alpha+2\beta)+\ldots+\cos(\alpha+\overline{n-1}\,\beta)$$

$$=\frac{\cos\left\{\alpha+(n-1)\frac{\beta}{2}\right\}\cdot\sin\frac{n\beta}{2}}{\sin\frac{\beta}{2}}$$

குறிப்பு (1) :— § 3·22, § 3·23ல் $\beta$ஐ $\beta+\pi$ என்று மாற்றினால்,

$$\sin\alpha-\sin(\alpha+\beta)+\sin(\alpha+2\beta)\ldots\ldots+(-1)^{n-1}\sin(\alpha+\overline{n-1}\beta)$$

$$=\frac{\sin\left\{\alpha+(n-1)\frac{(\beta\pi)}{2}\right\}\cdot\sin\frac{n(\beta+\pi)}{2}}{\sin\frac{(\beta+\pi)}{2}};$$

$$\cos\alpha-\cos(\alpha+\beta)+\cos(\alpha+2\beta)\ldots\ldots+(-1)^{n-1}\cos(\alpha+\overline{n-1}\beta)$$

$$=\frac{\cos\left\{\alpha+(n-1)\frac{(\beta+\pi)}{2}\right\}\cdot\sin\frac{n(\beta+\pi)}{2}}{\sin\frac{(\beta+\pi)}{2}}$$

குறிப்பு (2) : $\beta=\frac{2\pi}{n}$ எனில், $\sum_{r=1}^{n}\sin\{\alpha+\overline{r-1}\,\beta)\}$

$$=\sum_{r=1}^{n}\cos\{\alpha+(r-1)\beta\}=0\quad[\,\therefore\sin(n\pi)=0\,]$$

## மாதிரிக் கணக்குகள்

3·24.

மாதிரி 1. கூட்ட :— $\sin^2 x+\sin^2(x+y)+\sin^2(x+2y)+\ldots$ ($n$ உறுப்புக்கள்)

$$\sin^2 x=\frac{1-\cos 2x}{2}\quad(\S\ 1{\cdot}1\ \text{சூத்திரம் (9)})$$

இம்மாதிரியே,

$$\sin^2 (x+y) = \frac{1-\cos (2x+2y)}{2}$$

$$\sin^2 (x+2y) = \frac{1-\cos (2x+4y)}{2}$$

..................................................

ஆகையால்,

$\sin^2 x+\sin^2(x+y)+\sin^2(x+2y)+\ldots$ (n உறுப்புக்கள்)

$= \frac{1-\cos 2x}{2} + \frac{1-\cos (2x+2y)}{2} + \frac{1-\cos (2x+4y)}{2} + \ldots\ldots$

(n உறுப்புக்கள்)

$= \frac{1}{2}\{ 1+1+1+\ldots\ldots (n \text{ தடவைகள்}) \}$

$- \frac{1}{2}\{ \cos 2x+\cos (2x+2y)+\cos (2x+4y)+\ldots\ldots$

(n உறுப்புக்கள்)

$$\frac{n}{2} - \frac{1}{2} \times \frac{\cos\left\{2x+\frac{(n-1)\,2y}{2}\right\}\cdot \sin\frac{n\cdot 2y}{2}}{\sin\frac{2y}{2}} \quad (\S\ 3\cdot 23)$$

$$\frac{n}{2} - \frac{1}{2} \times \frac{\cos(2x+\overline{n-1}\,y)\cdot\sin ny}{\sin y}$$

குறிப்பு :- இம்மாதிரியே $\sin 3A = 3\sin A-4\sin^3 A$;

$\cos 3A = 4\cos^3 A-3\cos A$

என்னும் சூத்திரங்களை உபயோகித்து

$\sin^3 x+\sin^3(x+y)+\sin^3(x+2y)+\ldots\ldots$ (n உறுப்புக்கள்)

$\cos^3 x+\cos^3(x+y)+\cos^3(x+2y)+\ldots\ldots$ (n உறுப்புக்கள்)

ஆகிய இவ்விரு வரிசைகளின் கூடுதல்களைக் கண்டு பிடிக்கலாம்.

மேலும், $8\sin^4 A = 3-4\cos 2A+\cos 4A$;

$8\cos^4 A = 3+4\cos 2A+\cos 4A$ என்னும் சூத்திரங்களை உபயோகித்து,

$\sin^4 x+\sin^4(x+y)+\sin^4(x+2y)+\ldots\ldots$ (n உறுப்புக்கள்)

$\cos^4 x+\cos^4(x+y)+\cos^4(x+2y)+\ldots\ldots$ (n உறுப்புக்கள்)

ஆகிய இவ்விரு வரிசைகளின் கூடுதல்களையும் கண்டு பிடிக்கலாம்.

மாதிரி 2. $ABC$ என்னும் முக்கோணத்தில், கோணம் $C$ஐ $n$ சம பாகங்களாகப் பிரிக்கும் நேர்க் கோடுகள் $AB$ஐ $P_1, P_2, P_3, \ldots P_{n-1}$ என்னும் புள்ளிகளில் வெட்டுகின்றன. $\hat{C}=90°$ ஆனால்,

$$\frac{1}{CP_1}+\frac{1}{CP_2}+\frac{1}{CP_3}+\dots+\frac{1}{CP_{n-1}}=\frac{CA+CB}{2CA\cdot CB}\left\{\cot\frac{\pi}{4n}-1\right\}$$

எனக்காண்க

$B\hat{C}P_1 = P_1CP_2 = .. = P_{n-1}CA$

$= \theta$ எனக்கொள்.

ஆகையால், $\theta = \frac{\pi}{2n}$.



படம் 21

$$\frac{CP_1}{\sin B}=\frac{CB}{\sin CP_1B}$$

$$=\frac{CB}{\sin(180^\circ-\overline{B+\theta})}$$

$$=\frac{CB}{\sin(B+\theta)}$$

இம்மாதிரியே,

$$\frac{CP_2}{\sin B}=\frac{CB}{\sin(B+2\theta)};\quad \frac{CP_3}{\sin B}=\frac{CB}{\sin(B+3\theta)};\dots;$$

$$\frac{CP_{n-1}}{\sin B}=\frac{CB}{\sin(B+\overline{n-1}\,\theta)}$$

ஆகையால்,

$$\frac{1}{CP_1}+\frac{1}{CP_2}+\frac{1}{CP_3}+\dots+\frac{1}{CP_{n-1}}$$

$$=\frac{\sin(B+\theta)}{CB\sin B}+\frac{\sin(B+2\theta)}{CB\sin B}+\frac{\sin(B+3\theta)}{CB\cdot\sin B}+\dots$$

$$+\frac{\sin(B+\overline{n-1}\theta)}{CB\sin B}$$

$$=\frac{1}{CB\cdot\sin B'}\left\{\sin(B+\theta)+\sin(B+2\theta)+\sin(B+3\theta)+\dots\dots+\sin(B+\overline{n-1}\theta)\right\}$$

($n-1$ உறுப்புகள்)

$$=\frac{1}{CB\sin B'}\left\{\frac{\sin\left\{B+\theta+\frac{(n-2)\theta}{2}\right\}.\sin\frac{(n-1)\theta}{2}}{\sin\frac{\theta}{2}}\right\}$$

$$=\frac{1}{CB\sin B'}\left\{\frac{\sin\left(B+\frac{n\theta}{2}\right).\sin\frac{(n-1)\theta}{2}}{\sin\frac{\theta}{2}}\right\}$$

$$= \frac{1}{2CB \sin B'} \left\{ \frac{2 \sin\left(B + \frac{n\theta}{2}\right) \cdot \sin\frac{(n-1)\theta}{2}}{\sin\frac{\theta}{2}} \right\}$$

$$= \frac{1}{2CB \sin\frac{\theta}{2} \cdot \sin B'} \left\{ \cos\left(B + \frac{\theta}{2}\right) - \cos\left(B + \overline{2n-1}\frac{\theta}{2}\right) \right\}$$

$$= \frac{1}{2CB \cdot \sin\frac{\pi}{4n} \sin B'} \left\{ \cos\left(B + \frac{\pi}{4n}\right) - \cos\left(B + \overline{(2n-1)}\frac{\pi}{4n}\right) \right\}$$

$$\left( \because \theta = \frac{\pi}{2n} \right)$$

$$= \frac{1}{2CB \cdot \sin\frac{\pi}{4n} \cdot \sin B'} \left\{ \cos\left(B + \frac{\pi}{4n}\right) + \sin\left(B - \frac{\pi}{4n}\right) \right\}$$

$$= \frac{1}{2CB \cdot \sin\frac{\pi}{4n} \cdot \sin B'} \left\{ \cos B \cdot \cos\frac{\pi}{4n} - \sin B \sin\frac{\pi}{4n} \right.$$

$$\left. - \cos B \cdot \sin\frac{\pi}{4n} + \sin B \cos\frac{\pi}{4n} \right\}$$

$$= \frac{1}{2CB \cdot \sin\frac{\pi}{4n} \sin B}$$

$$\left\{ (\sin B + \cos B)\left( \cos\frac{\pi}{4n} - \sin\frac{\pi}{4n} \right) \right\}$$

$$= \frac{1}{2\,CB} \left\{ (1 + \text{cof}\, B)\left( \text{cof}\frac{\pi}{4n} - 1 \right) \right\}$$

$$= \frac{1}{2\,CB} \cdot \left\{ \left(1 + \frac{CB}{CA}\right)\left( \text{cof}\frac{\pi}{4n} - 1 \right) \right\}$$

$$= \frac{CA + CB}{2CA \cdot CB} \left\{ \text{cof}\left( \frac{\pi}{4n} - 1 \right) \right.$$

மாதிரி 3. கூட்டுக :—

$$\frac{1}{\cos\theta + \cos 3\theta} + \frac{1}{\cos\theta + \cos 5\theta} + \frac{1}{\cos\theta + \cos 7\theta} +$$

... ($n$ உறுப்புக்கள்)

$U_n = n$—வது உறுப்பு

$$= \frac{1}{\cos\theta + \cos(3\theta + \overline{n-1}\,2\theta)}$$

$$= \frac{1}{\cos\theta + \cos(2n+1)\theta}$$

$$= \frac{1}{2\cos\frac{\theta + \overline{2n+1}\,\theta}{2} \cdot \cos\frac{\overline{2n+1}\,\theta - \theta}{2}}$$ (§1·1. சூத்திரம் (7))

$$= \frac{1}{2.\cos(n+1)\theta.\cos n\theta}$$

$$= \frac{\sin\theta}{2\sin\theta.\cos(n+1)\theta.\cos\theta}$$ (பகுதி, தொகுதி இரண்டையும் $\sin\theta$ ஆல் பெருக்க)

$$= \frac{\sin(\overline{n+1}\,\theta - n\theta)}{2\sin\theta\cos(n+1)\theta.\cos n\theta}$$

$$= \frac{\sin\overline{n+1}.\theta\cos n\theta - \cos(n+1)\theta\sin n\theta}{2\sin\theta.\cos(n+1)\theta.\cos n\theta}$$

$$U_n = \frac{1}{2\sin\theta}\left\{\tan(n+1)\theta - \tan n\theta\right\}$$

$= V_n - V_{n-1}$ எனக் கொண்டால்,

$$V_0 = \frac{1}{2\sin\theta}.\ (\tan\theta - O)$$

$\therefore\ S_n = V_n - V_0$ (§ 3. 21. (A))

$$= \frac{1}{2\sin\theta}.\ \left\{\tan(n+1)\theta - \tan\theta\right\}$$

மாதிரி 4. கூட்டுக :—

$$\tan^{-1}\frac{4}{1+3\cdot4} + \tan^{-1}\frac{6}{1+8\cdot9} + \tan^{-1}\frac{8}{1+15\cdot16} + \text{.......}$$ ($n$ உறுப்புக்கள்)

3, 8, 15, ... என்னும் வரிசையில் $n$-வது உறுப்பு, $u_n$ ஆகில் $u$ வரிசை : 3, 8, 15, ..., $u_n$

$u_2 - u_1$ஐ $v_1$ என்றும், $u_3 - u_2$ $v_2$ என்றும், ... $u_n - u_{n-1}$ ஐ $v_{n-1}$ என்றும் எழுதினால், நமக்குக் கிடைக்கும்

$v$ வரிசை : $v_1, u_2, \ldots, v_{n-1}$

ஆகையால், $v_1 = u_2 - u_1$

$v_2 = u_3 - u_2$

$v_{n-1} = v_n - u_{u-1}$

கூட்ட: $v_1 + v_2 + \ldots + v_{n-1} = u_n - u_1$

ஆகையால், $u_n = u_1 + (v_1 + v_2 + \ldots + v_{n-1})$

$= 3 + (5 + 7 + \ldots (n_{-1}$ உறுப்புகள்) )

$= 3 + \frac{n-1}{2}\left\{ 2\cdot5 + (n-2)\cdot2 \right\}$

$= 3 + (n-1)(3+n)$

$= r_2 + 2n$

$= n(n+2).$

இம்முறையில், கொடுக்கப்பட்ட ஒரு வரிசையின் $n$-வது உறுப்பைக் கண்டுபிடிப்பதற்கு வித்தியாசங்கள் முறை (Method of differences) எனப் பெயர்)

இப்மாதிரியே, 4, 9, 16, ... என்ற வரிசையின் $n$-வது உறுப்பு $= n(n+2) + 1 = (n+1)^2$.

4, 6, 8, ... என்னும் வரிசை கூ. வி. ல் இருப்பதால் இதன் $n$-வது உறுப்பு $= 4 + (n-1)2 = 2n + 2$.

ஆகையால் கொடுக்கப்பட்ட,

$\tan^{-1}\frac{4}{1+3\cdot4} + \tan^{-1}\frac{6}{1+8\cdot9} + \tan^{-1}\frac{8}{1+15\cdot16} + \ldots$ என்ற வரிசையின் $n$-வது உறுப்பு

$$= \tan^{-1}\frac{2n+2}{1+n(n+2)(n+1)^2} \quad \ldots\ldots\ldots\text{(i)}$$

அதாவது, $U_n = \tan^{-1}\frac{2n+2}{1+n(n+2)(n+1)^2}$

$= \tan^{-1}\frac{(n+2)(n+1)-(n+1)n}{1+(n+2)(n+1)\cdot(n+1)n}$

$= \tan^{-1}(n+2)(n+1) - \tan^{-1}(n+1)n$

(கேள்வி 23, அப்பியாசம் 1(அ)

$= V_n - V_{n-1}$ எனக் கொண்டால்

$V_o = \tan^{-1} 2.$

$S_n = V_n - V_o$ (§ 3·21 (A)

$= \tan^{-1}(n+2)(n+1) - \tan^{-1} 2$

$= \tan^{-1}\frac{(n+2)(n+1)-2}{1+(n+2)(n+1)\cdot2}$

$$= \tan^{-1} \frac{n(n+3)}{1+2\,(n+1)\,(n+2)}$$

மாதிரி 5. $\tan\theta = \cot\theta - 2\cot 2\theta$ என நிரூபித்து, அதைப் பயன்படுத்தி $\tan\theta + \frac{1}{2}\tan\frac{\theta}{2} + \frac{1}{2^2}\tan\frac{\theta}{2^2} + \ldots\ldots$ ($n$ உறுப்புக்கள்) என்னும் வரிசையின் மதிப்பைக் கண்டுபிடிக்க.

$$\tan\theta = \frac{\sin\theta}{\cos\theta}$$

$$= \frac{2\sin^2\theta}{2\sin\theta\cos\theta}$$ பகுதியையும், தொகுதியையும் $2\sin\theta$ஆல் பெருக்க.

$$= \frac{2\cos^2\theta - 2(\cos^2\theta - \sin^2\theta)}{2\sin\theta\cos\theta}$$

$$= \frac{2\cos^2\theta}{2\sin\theta\cos\theta} - \frac{2(\cos^2\theta - \sin^2\theta)}{2\sin\theta\cos\theta}$$

$\therefore\ \tan\theta = \cot\theta - 2\cot 2\theta.$ (§ 1·1. சூத்திரம் (9))

$\theta$ஐ, $\frac{\theta}{2}, \frac{\theta}{2^2}, \frac{\theta}{2^{n-1}}$ என்று மாற்றினால் நமக்குக் கிடைக்கும் $n$ சமன்பாடுகள் பின்வருமாறு.

$$\tan\theta = \cot\theta - 2\cot 2\theta \qquad \ldots\ldots\ldots(1)$$

$$\tfrac{1}{2}\tan\frac{\theta}{2} = \tfrac{1}{2}\cot\frac{\theta}{2} - \cot\theta \qquad \ldots\ldots\ldots(2)$$

$$\frac{1}{2^2}\tan\frac{\theta}{2^2} = \frac{1}{2^2}\cot\frac{\theta}{2^2} - \tfrac{1}{2}\cot\frac{\theta}{2} \qquad \ldots\ldots\ldots(3)$$

..........................................

$$\frac{1}{2^{n-1}}\tan\frac{\theta}{2^{n-1}} = \frac{1}{2^{n-1}}\cot\frac{\theta}{2^{n-1}} - \frac{1}{2^{n-2}}\cdot\cot\frac{\theta}{2^{n-2}} \qquad \ldots\ldots\ldots(n)$$

மேற்கண்ட சமன்பாடுகளைக் கூட்ட

$$\tan\theta + \tfrac{1}{2}\tan\frac{\theta}{2} + \frac{1}{2^2}\tan\frac{\theta}{2^2} + \ldots\ldots(n \text{ உறுப்புக்கள்})$$

$$= \frac{1}{2^{n-1}}\cot\frac{\theta}{2^{n-1}} - 2\cot 2\theta$$

எனவே, $S_n = \frac{1}{2^{n-1}}\cdot\cot\frac{\theta}{2^{n-1}} - 2\cot 2\theta.$

குறிப்பு (1):—ஒரு வரிசையின் முதல் $n$ உறுப்புக்களின் கூடுதல் $S_n$ எனக் கொள்வோம்.

$\therefore\ \lim_{n\to\infty} S_n = l$ (முடிவுள்ள எண், finite) எனில், இவ்வரிசைக்கு

குவித்தொடர் (convergent series) எனப் பெயர். மேலும்,

$l$ என்பது இம் முடிவிலித் தொடரின் (infinite series) கூட்டுத் தொகையாகும் (Sum to Infinity).

குறிப்பு (2) :— $n \to \infty$ ($n$ மிகப் பெரியதாகில்) $\frac{\theta}{2^{n-1}} \to 0$

ஆகையால் $\operatorname{lt}_{\frac{\theta}{2^{n-1}} \to 0} \left\{ \frac{\tan \frac{\theta}{2^{n-1}}}{\frac{\theta}{2^{n-1}}} \right\} = 1$ (§ 3·12)

அதாவது, $2^{n-1} \tan \frac{\theta}{2^{n-1}} \to \theta$

ஆகையால், $\frac{1}{2^{n-1}} \cot \frac{\theta}{2^{n-1}} \to \frac{1}{\theta}$

மாதிரி 5லிருந்து $n \to \infty$ எனில்

$$S_n \to \frac{1}{\theta} - 2 \cot 2\theta$$

அதாவது, $\tan \theta + \frac{1}{2} \tan \frac{\theta}{2} + \frac{1}{2^2} \tan \frac{\theta}{2^2} + \ldots\ldots$ முடிவிலிவரை

$$= \frac{1}{\theta} - 2 \cot 2\theta$$

## அப்பியாசம் 3 (ஆ)

கீழ்க்கண்ட வரிசைகளின் முதல் $n$ உறுப்புக்களின் கூடுதலைக் காண்க. (கேள்விகள் (1—7)

1. $\sin^3 \alpha + \sin^3 2\alpha + \sin^3 3\alpha + \ldots\ldots$

$$\left\{ \text{விடை.} \ \frac{\frac{3}{4} \sin \frac{(n+1)\alpha}{2} \cdot \sin \frac{n\alpha}{2}}{\sin \frac{\alpha}{2}} - \frac{\frac{1}{4} \sin \frac{3(n+1)\alpha}{2} \sin \frac{3n\alpha}{2}}{\sin \frac{3\alpha}{2}} \right\}$$

2. $\sin^3 \frac{\theta}{3} + 3 \sin^3 \frac{\theta}{3^2} + 3^2 \sin^3 \frac{\theta}{3^3} + \ldots\ldots$

[விடை : $\frac{3^n}{4} \sin \frac{\theta}{3^n} - \frac{1}{4} \sin\theta$ ]

3. $\cos^4 \theta + \cos^4 \left( \theta + \frac{\pi}{n} \right) + \cos^4 \left( \theta + \frac{2\pi}{n} \right) + \ldots\ldots$

[விடை : $\frac{3n}{}$ ]

4 $1^2\cos\theta+2^2\cos 2\theta+3^2\cos 3\theta+\ldots\ldots$

$$\left[\text{விடை}:\ -\frac{d^2}{d\theta^2}\left\{\frac{\cos(n+1)\frac{\theta}{2}\cdot\sin n\frac{\theta}{2}}{\sin\frac{\theta}{2}}\right\}\right]$$

5 $\sin\alpha\ \sin 2\alpha+\sin 2\alpha\cdot\sin 3\alpha+\sin 3\alpha\ \sin 4\alpha+\ldots\ldots$

$$\left[\text{விடை}:\ \tfrac{1}{2}\left\{n\cos\alpha-\frac{\cos(n+2)\alpha\cdot\sin n\alpha}{\sin\alpha}\right\}\right]$$

6. $\sin\alpha\cdot\cos 3\alpha+\sin 3\alpha\cdot\cos 5\alpha+\sin 5\alpha\cdot\cos 7\alpha+\ldots\ldots$

$$\left[\text{விடை}:\ \tfrac{1}{2}\left\{\frac{\sin 2(n+1)\alpha\cdot\sin 2n\alpha}{\sin 2\alpha}-n\sin 2\alpha\right\}\right]$$

7. $\cos\alpha\cdot\cos 5\alpha+\cos 3\alpha\cdot\cos 7\alpha+\cos 5\alpha\cdot\cos 9\alpha+\ldots$

$$\left[\text{விடை}:\ \tfrac{1}{2}\left\{\frac{\cos 2(n+2)\alpha\cdot\sin 2n\alpha}{\sin 2\alpha}+n\cos 4\alpha\right\}\right]$$

8. $\lim_{n\to\infty}\cos\frac{\theta}{2}\cdot\cos\frac{\theta}{2^2}\cdot\cos\frac{\theta}{2^3}\ldots\ldots\cos\frac{\theta}{2^n}=\frac{\sin\theta}{\theta}$ என நிறுவுக.

9. $1+2\cos\theta+2\cos 2\theta+\ldots\ldots+2\cos(n-1)\theta=S_n$ எனில்,

$$S_n=\frac{\sin(2n-1)\frac{\theta}{2}}{\sin\frac{\theta}{2}}\ \text{என்றும்},\ 1+S_2+S_3+\ldots+S_n=\frac{\sin^2\frac{n\theta}{2}}{\sin^2\frac{\theta}{2}}$$

என்றும் நிறுவுக.

10. $\sin\alpha\cdot\sin 3\alpha+\sin\frac{\alpha}{2}\cdot\sin\frac{3\alpha}{2}+\sin\frac{\alpha}{2^2}\cdot\sin\frac{3\alpha}{2^2}+\ldots$ ($n$ உறுப்புகள் $=\frac{1}{2}\cdot\left[\cos\frac{\alpha}{2^{n-2}}-\cos 4\alpha\right]$ என நிறுவுக.

பின் வருவனவற்றைக் கூட்டுக:

11. $\sec\theta\cdot\sec 2\theta+\sec 2\theta\cdot\sec 3\theta+\sec 3\theta\cdot\sec 4\theta+\ldots\ldots\ldots$ ($n$ உறுப்புக்கள்)

$$\left[\text{விடை}\ \frac{1}{\sin\theta}\left\{\tan(n+1)\theta-\tan n\theta\right\}\right]$$

12. $\operatorname{cosec}\theta\cdot\operatorname{cosec}2\theta+\operatorname{cosec}2\theta\cdot\operatorname{cosec}3\theta+\operatorname{cosec}3\theta\cdot\operatorname{cosec}4\theta+\ldots\ldots$ ($n$ உறுப்புக்கள்)

$$\left[\text{விடை}:\ \frac{1}{\sin\theta}\left\{\cot\theta-\cot(n+1)\theta\right\}\right]$$

13. $\tan\theta : \sec 2\theta = \tan 2\theta - \tan\theta$ என்று நிரூபித்து, அதைப் பயன்படுத்தி, $\tan\theta \cdot \sec 2\theta + \tan 2\theta \cdot \sec 4\theta + \tan 4\theta \cdot \sec 8\theta + \ldots$ ($n$ உறுப்புக்கள்) கூடுதலைக் காண்க.

[விடை : $\tan 2^n\theta - \tan\theta$]

14. $\tan^{-1}\frac{1}{3} + \tan^{-1}\frac{2}{9} + \tan^{-1}\frac{4}{33} + \ldots +$

$\tan^{-1}\frac{2^{n-1}}{1+2^{2n-1}} + \ldots\ldots\ldots$ மு. வ.

( மு. வ : ad inf.) $\left[\text{விடை. } \frac{\pi}{4}\right]$

15. $\tan^{-1}\frac{1}{1+1+1^2} + \tan^{-1}\frac{1}{1+2+2^2} + \tan^{-1}\frac{1}{1+3+3^2}$
$+ \ldots$ ($n$, உறுப்புக்கள்)

$\left[\text{விடை. } \tan^{-1}(n+1) - \frac{\pi}{4}\right]$

16. $\tan^{-1}\frac{2x}{1+3\cdot1x^2} + \tan^{-1}\frac{2x}{1+5\cdot3x^2} + \tan^{-1}\frac{2x}{1+7\cdot5x^2}$
$+ \ldots\ldots$ ($n$ உறுப்புக்கள்)

[ விடை. $\tan^{-1}(2n+1)x - \tan^{-1}x$ ]

17. $\tan^{-1}\frac{x}{1+2\cdot1x^2} + \tan^{-1}\frac{x}{1+3\cdot2x^2} + \tan^{-1}\frac{x}{1+4\cdot3x^2}$
$+ \ldots\ldots$ ($n$ உறுப்புக்கள்)

[ விடை. $\tan^{-1}(n+1)x - \tan^{-1}n$ ]

18. $\tan^{-1}\frac{1}{3} + \tan^{-1}\frac{1}{7} + \tan^{-1}\frac{1}{13} + \tan^{-1}\frac{1}{21}$
$+ \ldots$ ($n$ உறுப்புக்கள்)

$\left[\text{விடை. } \tan^{-1}(n+1) - \frac{\pi}{4}\right]$

19. $\tan\alpha + 2\tan 2\alpha + 2^2\tan 2^2\alpha + \ldots\ldots$ ($n$ உறுப்புக்கள்)

[விடை. $\cot\alpha - 2^n \cot 2^n\alpha$]

20. $\tan\frac{\theta}{2} \cdot \sec\theta = \tan\theta - \tan\frac{\theta}{2}$ என்று நிரூபித்து, அதைப் பயன்படுத்தி $\tan\frac{\theta}{2} \cdot \sec\theta + \tan\frac{\theta}{4} \sec\frac{\theta}{2} + \tan\frac{\theta}{8} \sec\frac{\theta}{4}$ $+ \ldots\ldots$ ($n$ உறுப்புக்கள் கூடுதலைக் கண்டுபிடிக்க.

$\left[\text{விடை. } \tan\theta - \tan\frac{\theta}{2^n}\right]$

21. $\frac{\sin x}{\cos 3x} = \frac{1}{2}\left\{\tan 3x - \tan x\right\}$ என்று நிரூபித்து, அதைப் பயன்படுத்தி, $\frac{\sin x}{\cos 3x} + \frac{\sin 3x}{\cos 3^2 x} + \frac{\sin 3^2 x}{\cos 3^3 x} + \dots\dots\dots$ ($n$ உறுப்புக்கள்) கூடுதலைக் கண்டுபிடிக்க.

[விடை. $\frac{1}{2}\left\{\tan 3^n x - \tan x\right\}$]

22. $\tan\alpha \cdot \tan 2\alpha + \tan 2\alpha \tan 3\alpha + \tan 3\alpha \cdot \tan 4\alpha + \dots\dots\dots$ ($n$ உறுப்புக்கள்)

[விடை. $\frac{\tan (n+1)\alpha}{\tan\alpha} - (n+1)$]

23. $\cot\theta \cdot \cot 2\theta + \cot 2\theta \cot 3\theta + \cot 3\theta \cdot \cot 4\theta + \dots\dots\dots$ ($n$ உறுப்புக்கள்)

[விடை. $\cot\theta\left\{\cot\theta - \cot(n+1)\theta\right\} - n$].

24. $\operatorname{cosec}\theta = \cot\frac{\theta}{2} - \cot\theta$ என்று நிரூபித்து, $\operatorname{cosec}\theta + \operatorname{cosec} 2\theta + \operatorname{cosec} 2^2\theta + \operatorname{cosec} 2^3\theta + \dots\dots$ ($n$ உறுப்புக்கள்) $= \cot\frac{\theta}{2} - \cot 2^{n-1}\theta$ என நிறுவுக.

25. $\cos\frac{2\pi}{13} + \cos\frac{6\pi}{13} + \cos\frac{8\pi}{13}$, $\cos\frac{4\pi}{13} + \cos\frac{10\pi}{13} + \cos\frac{12\pi}{13}$ ஆகிய இவை $2x^2 + 2x - 3 = 0$ன் மூலங்கள் எனக் காண்க

அத்தியாயம் IV

# ஒழுங்குப் பல் கோணங்கள்

4·1. எந்தப் பல்கோணத்திற்கு உட்கோணங்கள் எல்லாம் சமமாகவும் பக்கங்களின் நீளங்களும் சமமாகவும் இருக்கின்றனவோ அதற்கு ஒழுங்குப்பல்கோணம் (Regular polygon) எனப் பெயர்.

$n$ பக்கங்களும் $n$ உச்சிகளும் உள்ள பல்கோணத்திற்கு $n$ கோணம் (n-gon) எனப் பெயர்.

ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் ஏதேனும் மூன்று உச்சிகளின் வழியாக வரையப்படும் வட்டம் மற்ற உச்சிகள் வழியாகவும் செல்லும். இவ்வட்டத்திற்கு ஒழுங்குப் பல் கோணத்தின் வெளி வட்டம் எனப் பெயர்.

இம்மாதிரியே, ஒரு ஒழுங்குப் பல் கோணத்தின் ஏதேனும் மூன்று பக்கங்களைத் தொடும் வட்டம் மற்றப் பக்கங்களையும் தொடும். இவ்வட்டத்திற்கு ஒழுங்குப் பல் கோணத்தின் உள் வட்டம் எனப் பெயர்.




படம் 22

4.2. $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பை அதன் சுற்று ஆரத்தின் மூலம் கண்டு பிடிக்க.

$A_1, A_2, A_3, \ldots, An$, $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல் கோணத்தின் உச்சிகளாக இருக்கட்டும்.

$O$ என்னும் புள்ளி இப் பல் கோணத்தின் சுற்று மையத்தைக் குறிக்கட்டும். (படம் 22)

$O$விலிருந்து இப் பல கோணத்தின் பக்கங்கள் $A_1A_2, A_2A_3, \ldots$க்கு வரையப்படும் செங்குத்துக்கோடுகளின் அடிப் புள்ளிகள் முறையே $M_1, M_2, \ldots$ ஆக இருக்கட்டும்.

$$A_1\hat{O}A_2 = A_2\hat{O}A_3 = \ldots = An\hat{O}A_1$$

$$(\because\ A_1A_2 = A_2A_3 = \ldots\ldots = AnA_1)$$

ஆனல் $A_1\hat{O}A_2 + A_2\hat{O}A_3 + \ldots + An\hat{O}A_1 = 2\pi$

$$\therefore\ A_1\hat{O}A_2 = \frac{2\pi}{n}$$

மேலும் $OA_1 = OA_2 = OA_3 = \ldots = OAn = R$ (சுற்று ஆரம்)

$\triangle\ OA_1OA_2$ன் பரப்பு $= \frac{1}{2}\ OA_1 \cdot OA_2 \sin A_1\hat{O}A_2$

$= \frac{1}{2}\ R^2 \sin \frac{2\pi}{n}$. (§ 2·11 சூத்திரம் (b))

முக்கோணங்கள் $OA_1A_2$, $OA_2A_3$, ... $OAnA_1$ சர்வ சமமாகை யால், $\triangle OA_1A_2 + \triangle OA_2A_3 + \triangle OAnA_1$ன் பரப்பு $= n \times \triangle OA_1A_2$ன் பரப்பு.

$$= n \times \frac{R^2}{2} \sin \frac{2\pi}{n}.$$

அதாவது, ஒழுங்குப் பல்கோணம் $A_1A_2A_3 \ldots An$ன் பரப்பு

$$= \frac{nR^2}{2} \sin \frac{2\pi}{n}$$

4·3

$n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் சுற் றளவை அதன் சுற்று ஆரத்தின் மூலம் கண்டுபிடிக்க.

$OM_1 \perp A_1A_2$ (படம் 4 (அ))

$\therefore\ \triangle OA_1M_1 \equiv \triangle OA_2M_1$

ஆகையால், $A_1\hat{O}M_1 = A_2\hat{O}M = \frac{1}{2}\ A_1\hat{O}A_2 = \frac{1}{2} \cdot \frac{2\pi}{n} = \frac{\pi}{n}$.

$$\frac{M_1A_1}{OA_1} = \sin M_1\hat{O}A_1 = \sin \frac{\pi}{n}.$$

அல்லது, $M_1A_1 = OA \sin \frac{\pi}{n} = R \sin \frac{\pi}{n}$.

ஆகையால், $A_1A_2 = 2\ A_1M_1 = 2\ R \sin \frac{\pi}{n}$.

அதாவது, $a = 2\ R \sin \frac{\pi}{n}$ ($a = A_1A_2$, ஒழுங்குப் பல்கோணத்தின் பக்க நீளம்)

எனவே, ஒழுங்குப் பல்கோணம் $A_1A_2A_3 \ldots An$ன்

சுற்றளவு $= A_1A_2 + A_2A_3 + \ldots AnA_1$

$= na$

$\therefore$ சுற்றளவு $= n.\ 2\ R \sin \frac{\pi}{n}\ \ 2n\ R \sin \frac{\pi}{n}$

4·4

$n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பை அதன் உள் வட்ட ஆரத்தின் மூலம் கண்டுபிடிக்க.

$n$ பக்கங்களுள்ள ஒழுங்குப் பல் கோணம் $A_1A_2A_3$ ... $An$ன் உள் வட்டம் அதன் பக்கங்கள் $A_1A_2$, $A_2A_3$, ... $AnA_1$ ஐ முறையே $M_1$, $M_2$, ..., $Mn$ல் தொட்டால், $M_1$, $M_2$, ... $Mn$ அப் பக்கங்களின் மையப் புள்ளிகளாக இருக்கவேண்டும்.




படம் 23

இத் தொடு வட்டத்தின் மையம் $O$, ஆரம் $r$ எனில்

$$OM_1 = OM_2 = \ldots = OMn = r.$$

$$\triangle\, OA_1A_2\text{ன் பரப்பு} = \tfrac{1}{2} A_1A_2 \cdot OM_1$$
$$= A_1M_1 \cdot OM_1$$
$$= OM_1 \tan\frac{\pi}{n} \cdot OM_1$$
$$\left(\because \frac{M_1A_1}{M_1O} = \tan\frac{\pi}{n}\right)$$
$$= r^2 \tan\frac{\pi}{n}.$$

மேலும், முக்கோணங்கள் $OA_1A_2$, $OA_2A_3$, ... $OAnAn$ ஒன்றுக்கொன்று சருவசமனானவையால்,

ஒழுங்குப் பல்கோணம் $A_1A_2A_3, \ldots An$ன் பரப்பு $= n. \triangle\ OA_1A_2$ன் பரப்பு

$$= n \cdot r^2 \tan\frac{\pi}{n}.$$

அதாவது, $n$ பக்கங்களுள்ள ஒழுங்குப் பல் கோணத்தின்

$$\text{பரப்பு} = n\, r^2 \tan\frac{\pi}{n}$$

4·5. $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல் கோணத்தின் சுற்றளவை அதன் உள் ஆரத்தின் மூலம் கண்டுபிடிக்க

$n$ பக்கங்களுள்ள ஒழுங்குப் பல்கோணம்

$A_1A_2A_3 \ldots An$ல் $A_1A_2 = A_2A_3 = \ldots = AnA_1 = a$ எனில்

$$a = 2A_1M_1 \quad (\text{படம் 4 (ஆ)})$$

$$= 2 \cdot OM_1 \cdot \tan \frac{\pi}{n}$$

$$\therefore \quad a = 2r \tan \frac{\pi}{n}$$

ஆகையால், சுற்றளவு $= na = n \cdot 2r \tan \frac{\pi}{n}$

$$= 2nr \tan \frac{\pi}{n}.$$

**4·6. $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல் கோணத்தின் பரப்பை அதன் பக்கங்கள் மூலம் கண்டுபிடிக்க.**

$n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பலகோணத்தின் பக்கம் '$a$' எனில்

$$a = 2R \sin \frac{\pi}{n} \quad (= R \text{ சுற்று வட்ட ஆரம்})$$

(§ 4·3)

ஆகையால், $R = \dfrac{a}{2 \sin \frac{\pi}{n}}$ ......... (i)

ஆனால், ஒழுங்குப் பல் கோணத்தின் பரப்பு $= \dfrac{nR_2}{2} \cdot \sin \dfrac{2\pi}{n}$

(§ 4 2)

$$= \frac{nR^2}{2} \cdot 2 \sin \frac{\pi}{n} \cdot \cos \frac{\pi}{n}$$

$$= n \frac{a^2}{4 \sin^2 \frac{\pi}{n}} \cdot \sin \frac{\pi}{n} \cdot \cos \frac{\pi}{n}$$

$$= \frac{na^2}{4} \cdot \text{cof} \frac{\pi}{n}.$$

எனவே, பக்க நீளம் $a$ கொண்ட $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பு $= \dfrac{na^2}{4} \cdot \text{cof} \dfrac{\pi}{n}$.

குறிப்பு (1):—மேற்கண்ட சூத்திரத்தை, § 4·4, § 4·5ஐ உபயோகித்தும் நிறுவலாம்.

குறிப்பு (2):—§ 4·3, § 4·5லிருந்து $r = R \cos \frac{\pi}{n}$ எனப்புலப்படும்.

4 7. இப்பொழுது § 3·11, § 4·2ஐ உபயோகித்து ஒரு வட்டத்தின் பரப்பைக் கண்டுபிடிப்போம்.

$n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணம் $A_1\ A_2\ A_3 \ldots\ldots A_n$ ஐயும், ஆரம் $R$ உள்ள அதன் சுற்று வட்டத்தையும் எடுத்துக் கொள்வோம் (படம் 22)

இவ்வொழுங்குப் பல்கோணத்தின் பக்கங்களின் எண்ணிக்கை $n$ஐ, அதிகரிக்க, அதிகரிக்க அதன் பரப்பும் அதிகரித்துக்கொண்டே வரும்.

ஆகையால் $n \to \infty$ எனில், ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பின் வரம்பு, சுற்று வட்டத்தின் பரப்பிற்குச் சமமாகும்.

அதாவது, வட்டப்பரப்பு $= \lim\limits_{n\to\infty} \dfrac{nR^2}{2} \cdot \sin\dfrac{2\pi}{n}$

$$= \lim_{n\to\infty} \frac{nR^2}{2} \cdot \left(\frac{2\pi}{n}\right) \frac{\sin\frac{2\pi}{n}}{\left(\frac{2\pi}{n}\right)}$$

$$= \lim_{n\to\infty} \pi R^2 \cdot \frac{\sin\frac{2\pi}{n}}{\frac{2\pi}{n}}$$

$$= \pi R^2 \cdot \lim_{n\to\infty} \frac{\sin\frac{2\pi}{n}}{\frac{2\pi}{n}}$$

$$= \pi R^2 \lim_{\frac{2\pi}{n}\to 0} \frac{\sin\frac{2\pi}{n}}{\frac{2\pi}{n}}$$

$$= \pi R^2 \cdot 1 \qquad (\S\ 8 \cdot 11)$$

ஆகையால், வட்டத்தின் ஆரம் $R$ எனில் அதன் பரப்பு $= \pi R^2$.

குறிப்பு:—ஒரு வட்டக் கோணப் பகுதியின் கோணம் $\theta^c$ எனில் அதன் பரப்பு $= \frac{1}{2}R^2\theta$. ($R =$ வட்ட ஆரம்)

ஏனெனில், $\dfrac{\text{வட்டக்கோணப் பகுதியின்பரப்பு}}{\theta} = \dfrac{\text{வட்டப்பரப்பு}}{2\pi}$

$$= \frac{\pi R^2}{2\pi}$$

$$= \frac{R^2}{2}$$

4·8.

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1. ஒரு வட்டத்தினுள் வரைந்த (inscribed) $2n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பு, அதே வட்டத்தினுள் வரைந்த $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல் கோணத்தின் பரப்புக்கும் அந்த வட்டத்தை உள் வட்டமாகக் கொண்ட $n$ பக்க்ங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்புக்கும் இடை விகித சமன் (mean proportional) என நிறுவுக

கொடுக்கப்பட்டிருக்கும் வட்டத்தின் ஆரம் $R$ எனில் அதைச் சுற்று வட்டமாகக் கொண்ட $n$ பக்கங்களுள்ள ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பு$=\frac{nR^2}{2}\sin\frac{2\pi}{n}$. (§ 4·2 ......(i)

இதே வட்டத்தை உள் வட்டமாகக் கொண்ட $n$ பக்கங்களுள்ள ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பு$=nR^2\tan\frac{\pi}{n}$. (§ 4·4......(ii)

இவ்விரண்டு பல்கோணங்களின் பரப்புகளின் இடை

$$\text{விகித சமன்} = \sqrt{\frac{nR^2}{2}\cdot\sin\frac{2\pi}{n}\cdot nR^2\tan\frac{\pi}{n}}$$

$$= nR^2\cdot\sqrt{\sin\frac{\pi}{n}\cdot\cos\frac{\pi}{n}\cdot\frac{\sin\pi/n}{\cos\pi/n}}$$

$$= nR^2\sin\frac{\pi}{n}.$$

$$(\text{அதாவது}) = \frac{2nR^2}{2}\sin\frac{2\pi}{2n}$$

= கொடுக்கப்பட்ட வட்டத்தைச் சுற்று வட்டமாகக் கொண்ட $2n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல் கோணத்தின் பரப்பு (§ 4·2)

மாதிரி 2. ஒன்றுவிட்ட (alternate) பக்க நீளங்கள் $a, b$ உள்ள ஒரு அறுகோணத்தின் சுற்று ஆரம் $R$ எனில் $3R^2=a^2+ab+b^2$ என நிறுவுக.

ஒன்று விட்ட பக்க நீளங்கள் $a, b$ உள்ள அறுகோணம் $ABCDEF$ன் சுற்று மையம் $O$ ஆரம் $R$ எனில்,

$AB=CD=EF=a$;

$BC=DE=FA=b$;

$A\hat{O}B=C\hat{O}D=E\hat{O}F=\alpha$;

$B\hat{O}C=D\hat{O}E=F\hat{O}A=\beta$ எனக் கொள்.

ஆகையால், $a = 2R \sin \frac{\alpha}{2}$

$$\left\{ \begin{array}{l} \because \; A\hat{O}B = \alpha \\ \therefore \; ACB = \frac{\alpha}{2} \end{array} \right\}$$ (§ 2·11. சூத்திரம் (a)) ...... (i)

இம்மாதிரியே, $b = 2R \sin \frac{\beta}{2}$ ........(ii)

$$A\hat{O}B + B\hat{O}B + C\hat{O}D + D\hat{O}E \pm E\hat{O}F + F\hat{O}A = 2\pi.$$

ஆகையால், $3\alpha + 2\beta = 2\pi.$

அதாவது, $\alpha + \beta = \frac{2\pi}{3}$

$= 120°.$

$$a^2 + ab + b^2 = 4R^2 \left\{ \sin^2 \frac{\alpha}{2} + \sin \frac{\alpha}{2} \cdot \sin \frac{\beta}{2} + \sin^2 \frac{\beta}{2} \right\}$$

$$= 2R^2 \left\{ 1 - \cos \alpha + 1 - \cos \beta + \cos \frac{\alpha - \beta}{2} - \cos \frac{\alpha + \beta}{2} \right\}$$

$$= 2^2 \left\{ 2 - 2 \cos \frac{\alpha + \beta}{2} \cos \frac{\alpha - \beta}{2} + \cos \frac{\alpha - \beta}{2} - \frac{1}{2} \right\}$$

$$\left( \because \cos \frac{\alpha + \beta}{2} \cos 60° = \frac{1}{2} \right)$$

$$= 2R^2 \left\{ \frac{3}{2} - 2 \cdot \frac{1}{2} \cdot \cos \frac{\alpha - \beta}{2} + \cos \frac{\alpha - \beta}{2} \right\}$$

$$= 2R^2 \frac{3}{2}$$

$$= 3R^2.$$

மாதிரி 3. $P$ என்னும் புள்ளி $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் உள் மையத்திலிருந்து $C$ என்னும் தூரத்தில் இருக்கிறது. உள் வட்ட ஆரம் $r$ எனில், $P$யிலிருந்து இப் பல்கோணத்தின் பக்கங்களுக்கு வரையப்படும் குத்து நீளங்களின் வர்க்கக்கூடுதல் $n\left(r^2 + \frac{C^2}{2}\right)$ என நிறுவுக.

$n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணம் $A_1A_2A_3 \ldots An$ உள் மையம் $O$ எனவும், உள் வட்ட ஆரம் $r$ எனவும் கொள். $O$விலிருந்து $OM_1, OM_2, \ldots\ldots, OMn$ முதலிய குத்துக் கோடுகளை முறையே $A_1A_2, A_2A_3, \ldots\ldots AnA_1$க்கு வரை. (படம் 23)

$$OP = C \text{ (கொள்கை)}$$

$$P\hat{O}M_1 = \alpha \text{ எனில்,}$$

$$P\hat{O}M_2 = \alpha + \frac{2\pi}{n};$$

$$P\hat{O}M3 = \alpha + \frac{4\pi}{n};$$

$$\ldots\ldots\ldots\ldots\ldots\ldots$$

$$P\hat{O}Mn = \alpha + (n-1).\frac{2\pi}{n}$$

$P$யிலிருந்து $A_1A_2$க்கு வரையப்படும் செங்குத்து $PP_1$ எனில்

$$PP_1 \parallel OM_1$$

மேலும் $PP_1 = OM_1 - OP\cos\alpha$

$$= r - c\cos\alpha.$$

இம்மாதிரியே, $PP_2PP_3 \ldots, PPn$ முறையே $A_2A_3.A_3A_4 \ldots AnA_1$க்கு செங்குத்துகள் $PP_2 = r - c\cos\left(\alpha + \frac{2\pi}{n}\right)$

$$PP_3 = r - c\cos\left(\alpha + \frac{4\pi}{n}\right)$$

$$\ldots \quad \ldots \quad \ldots \quad \ldots \quad \ldots \quad \ldots$$

$$PPn = r - c\cos\left(\alpha + (n-1)\frac{2\pi}{n}\right)$$

ஆகையால், $PP_1^2 + PP^2_2 + PP^2_3 + \ldots + PPn^2$

$$= nr^2 - 2rc\left\{\cos\alpha + \cos\left(\alpha + \frac{2\pi}{n}\right) + \cos\left(\alpha + \frac{4\pi}{n}\right)\right.$$

(+ ......$n$ உறுப்பு)

$$+ c^2\left\{\cos^2\alpha + \cos^2\left(\alpha + \frac{2\pi}{n}\right) + \cos^2\left(\alpha + \frac{4\pi}{n}\right)\right.$$

+ ...... ($n$ உறுப்புக்கள்)

$$nr^2 - 2rc\frac{\cos\left\{\alpha + (n-1)\frac{\pi}{n}\right\}.\sin\frac{n\pi}{n}}{\sin\frac{\pi}{n}}$$

$$+\frac{c^2}{2}\left\{\left[1+\cos 2\alpha\right]+\left[1+\cos\left(2\alpha+\frac{4\pi}{n}\right)\right]\right.$$

$$\left.+\left[1+\cos\left(2\alpha+\frac{8\pi}{n}\right)\right]+\ldots \quad \ldots(n \text{ உறுப்புக்கள்})\right\}$$

$$nr^2-2rc.\frac{\cos\left\{\alpha+(n-1)\frac{\pi}{n}\right\}.\sin\pi}{\sin\frac{\pi}{n}}$$

$$+\frac{c^2}{2}\left\{n+\frac{\cos\left\{2\alpha+(n-1)\frac{2\pi}{n}\right\}\sin 2\pi}{\sin\frac{2\pi}{n}}\right\}$$

$$=nr^2+\frac{nc^2}{2} \quad (\because \sin\pi=\sin 2\pi=0)$$

மாதிரி 4. சம சுற்றளவுள்ள ஒழுங்கு ஐங்கோண (Pentagon) தச கோணங்களின் (Decagon) பரப்பு விகிதம் $2 : \sqrt{5}$ எனக் காண்க.

ஒழுங்கு ஐங்கோணத்தின் பக்க நீளம் $a$ எனவும், ஒழுங்கு தச கோணத்தின் பக்க நீளம் $b$ எனவும் கொள்.

இவ்விரண்டிற்கும் சுற்றளவு சமம் (கொள்கை)

ஆகையால், $5a = 10b$.

அதாவது, $a = 2b$ ..........(1)

ஐங்கோணப் பரப்பு $= 5\cdot\frac{a^2}{4}\cdot\cot\frac{\pi}{5}$ (§ 4·6)

$$=\frac{5a^2}{4}\cdot\cot 36^\circ$$

தசகோணப் பரப்பு $= 10\cdot\frac{b^2}{4}\cdot\cot\frac{\pi}{10}$ (§ 4·6)

$$=\frac{5b^2}{2}\cdot\cot 18^\circ$$

ஆகையால், பரப்பு விகிதம் $=\frac{a^2}{2b^2}\cdot\frac{\cot 36^\circ}{\cot 18^\circ}$

$$=2\cdot\frac{\cot 36^\circ}{\cot 18^\circ} \quad ((1) \text{ லிருந்து})$$

$$= \frac{2\cos 36^\circ \cdot \sin 18^\circ}{\sin 36^\circ \cos 18^\circ}$$

$$= \frac{4\cos 36^\circ \sin 18^\circ}{2\sin 36^\circ \cos 18^\circ}$$

$$= \frac{4\cos 36^\circ \cdot \sin 18^\circ}{\sin 54^\circ + \sin 18^\circ}$$

(§ 1·1 சூத்திரம் (8)

$$= \frac{4\cos 36^\circ \cdot \sin 18^\circ}{\cos 36^\circ + \sin 18^\circ}$$

$$= \frac{4 \cdot \frac{\sqrt{5}+1}{4} \cdot \frac{\sqrt{5}-1}{4}}{\frac{\sqrt{5}+1}{4} + \frac{\sqrt{5}-1}{4}} \qquad (\S\ 1\cdot36)$$

$$= \frac{1}{\frac{\sqrt{5}}{2}}$$

$$= \frac{2}{\sqrt{5}}.$$

மாதிரி 5. ஒரே வட்டத்தை, உள் வட்டமாகவும், சுற்று வட்ட மாகவும் கொண்ட, $n$ பக்கங்களுள்ள இரு ஒழுங்குப் பல் கோணங்கள் வரையப்பட்டால், முதல் ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பு, இரண்டாவது ஒழுங்குப் பல்கோணத்தின் பாதிச் சுற்றளவுக்கும், முதல் ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்று ஆரத்திற்கும் உள்ள பெருக்கல் பலன் எனக் காண்க.

கொடுக்கப்பட்ட வட்டத்தின் ஆரம் $r$ எனக் கொள். முதல் ஒழுங்குப் பல்கோணத்தின் பக்க நீளம் $a$ எனில்

$a = 2r \tan \frac{\pi}{n}$; அதன் பரப்பு $A$ என்றால்

$$A = n\frac{a^2}{4} \cdot \cot\frac{\pi}{n} \quad (\S\ 4\ 5;\ \S\ 4\cdot6) \qquad \text{.........(i)}$$

இரண்டாவது ஒழுங்குப் பல்கோணத்தின் பக்க நீளம் $b$ எனில்

$b = 2r \sin\frac{\pi}{n}$. அதன் சுற்றளவு $= nb$.

ஆகையால் அதன் பாதிச் சுற்றளவு $= \frac{nb}{2} = nr \sin\frac{\pi}{n}$.

$= s$ எனக் கொள் .........(ii)

முதல் ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்று ஆரம் $R$ எனில்

$R = r \sec \pi/n$ (§ 4·6. குறிப்பு 2) ........(iii)

ஆகையால்,

(இரண்டாமது ஒழுங்குப் பல்கோணத்தின் பாதிச் சுற்றளவு) × (முதல் ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்று ஆரம்)

$$= s \times R$$

$$= nr \sin\frac{\pi}{n} \times \frac{r}{\cos \pi/n}$$

$$= nr^2 \tan\frac{\pi}{n}$$

$$= n \cdot \frac{4r^2}{4} \tan^2\frac{\pi}{n} \times \text{cof}\frac{\pi}{n}$$

$$= n \cdot \frac{a^2}{4} \cdot \text{cof}\frac{\pi}{n} \qquad \left( \text{(i) விருந்து } a = 2r \tan\frac{\pi}{n} \right)$$

$$= A$$

= முதல் ஒழுங்குப் பல்கோணத்தின் பரப்பு.

## அப்பியாசம் 4

1. ஒரே வட்டத்தைச் சுற்று வட்டமாகவும், உள் வட்டமாகவும் கொண்டு வரையப்பட்ட, $n$ பக்கங்களுள்ள இரு ஒழுங்குப் பல்கோணங்களின் பரப்பு விகிதம் 3 : 4 ஆனால் $n$ன் மதிப்பு என்ன?

[விடை : $n = 6$]

2. $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்று வட்டத்திலுள்ள ஒரு புள்ளியை இப் பல்கோணத்தின் உச்சிகளுடன் சேர்க்கக்கூடிய நாண்களின் வர்க்கக்கூடுதல் $2nr^2$ எனக் காண்க. ($r =$ வட்ட ஆரம்)

3. சுற்று ஆரம் $R$ உள்ள, $n$ பக்கங்களைக் கொண்ட ஒழுங்குப் பல்கோணத்தின் ஒரு உச்சியை மற்ற உச்சிகளுடன் சேர்க்கும் நாண்களின் கூடுதல் $2R \,\text{cof}\, \frac{\pi}{2n}$ எனக் காண்க

4. ஆரம் $r$ உள்ள ஒரு வட்டத்தில் அமையும் ஏதேனும் ஒரு புள்ளியிலிருந்து அவ்விடத்தைத் தொடும் ஒழுங்குப் பல் கோணத்தின் $n$ பக்கங்களுக்கு வரையப்படும் குத்து நீளங்கள் $p_1, p_2, \ldots, p_n$ $(n > 3)$ எனில்

(i) $2 \sum_{r=1}^{n} p_r^2 = 3nr^2$ (ii) $2 \sum_{r=1}^{n} p_r^3 = 5nr^3$ எனக் காண்க.

5. $n$, $2n$ பக்கங்கள் உள்ள இரு ஒழுங்குப் பல்கோணங்களின் சுற்றளவுகள் சமமாகில், அவைகளின் பரப்பு விகிதம்

$2\cos\frac{\pi}{n} : \left(1+\cos\frac{\pi}{n}\right)$ என நிறுவுக.

6. பக்க நீளம் $a$ உள்ள ஏதேனும் ஒரு ஒழுங்குப் பலகோணத்தின் சுற்று வட்டத்திற்கும் உள் வட்டத்திற்கும் இடையிலிருக்கும் பரப்பு, அப்பல்கோணத்தின் பக்கங்களின் எண்ணிக்கை ஏதாயினும், மாறுது என நிறுவுக

7. $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் உள் வட்ட ஆரம் $r_n$, சுற்று ஆரம் $R_n$ எனில் $r_n + R_n = 2r_{2n}$ எனக் காண்க.

8. சம சுற்றளவுள்ள ஒரு சமபக்க முக்கோணத்தின் பரப்புக்கும் ஒரு ஒழுங்கு அறுகோணத்தின் பரப்புக்கும் உள்ள விகிதம் 2 : 3 எனக் காண்க.

9. ஒரு ஒழுங்கு எண் கோணத்தின் (Octagon) உள்வட்ட ஆரம் $a$. மற்றொரு ஒழுங்கு எண் கோணத்தின் சுற்றுவட்ட ஆரம் $b$. இவைகளின் பரப்புக்கள் சமமாகில் $\frac{a^2}{b^2} = \frac{\sqrt{2}+1}{2\sqrt{2}}$ எனக் காண்க

10. $a$, $2a$ என்ற சுற்று ஆரங்களைக் கொண்ட இரு ஒழுங்கு ஐங்கோணப் பரப்புக்களின் கூடுதல், $b$ஐ உள் ஆரமாகக் கொண்ட ஒரு ஒழுங்கு ஐங்கோணத்தின் பரப்புக்குச் சமமாகில் $4b = (5+\sqrt{5})a$ என நிறுவுக.

11. ஒரு ஒழுங்கு அறுகோணத்திற்கும், ஒரு ஒழுங்குப் பன்னிரு கோணத்திற்கும் (Regular Dodecagon)

(i) சுற்று வட்டம் ஒன்றாகில் அவைகளின் பரப்பு விகிதம் $\sqrt{3} : 2$ என்றும் சுற்றளவு விகிதம் $1 : \sqrt{6}-\sqrt{2}$ என்றும்

(ii) உள் வட்டம் ஒன்றாகில், அவைகளின் பரப்பு விகிதமும் சுற்றளவு விகிதமும் $1 : 2\sqrt{3}-3$ என்றும் காண்க.

12. சம சுற்றளவுள்ள ஒரு ஒழுங்கு அறுகோணத்திற்கும், பன்னிரு கோணத்திற்கும் உள்ள பரப்பு விகிதம் $4\sqrt{3}-6 : 1$ என நிறுவுக.

102

அத்தியாயம் V

# சிக்கல் எண்கள்

5·1. வரைவிலக்கணம். $-1$ன் வர்க்கமூலம் $\sqrt{-1}$ ஒரு கற்பனையான எண். அதை $i$ எனக்குறிப்பது வழக்கம். $x, y$ என்பவை முழுவதும் மெய்யான எண்களாகில், $x+iy$ என்னும் கணியத்திற்குச் சிக்கலெண் (complex number) எனப்பெயர்.

5·2. $i=\sqrt{-1}$ ஆகையால்,

$$i^2=-1;\quad i^3=i^2 i=-i;\quad i^4=i^2 i^2=(-1)\ (-1)=+1.$$

இம்மாதிரியே, $i^n$ன் மதிப்பைக் காணலாம் ($n$ என்பது ஒரு முழு எண்)

5·3. வரை கணித முறையில் சிக்கலெண்ணைக் குறிப்பது. (Geometrical representation of a complex number)



படம் 24

வழக்கம் போல் இரு செங்குத்து அச்சுக்கள் $OX$, $OY$ஐ எடுத்துக் கொள்வோம்.

$OM_1=x$; $M_1P_1=y$ புள்ளி $P_1$ லிருந்து $OY$, $OX$ அச்சுக்கள் வரையில் உள்ள செங்குத்து நீளங்கள் அதாவது) $P_1$ என்னும் புள்ளியின் கூறுகள் (coordinates) $(x, y)$ எனில் $P_1$ என்பது $x+iy$ என்னும் சிக்கல் எண்ணைக் குறிக்கும். இவ்வாறு $P$ஐ எடுத்துக்கொண்டால் இப் படத்திற்கு ஆர்கண்ட் வரைபடம் (Argand Diagram) என்று பெயர்.

இப்படத்தில் $x$ அச்சை மெய்யான அச்சு என்றும் $y$ அச்சைக் கற்பனையான அச்சு என்றும் சொல்லுகிறோம்.

இவ்வார்கண்ட் படத்தில் (படம் 24)) $P_2$ன் கூறுகள் $(-2, 1)$ எனில் அது குறிக்கும் சிக்கலெண் $-2+i$. $P_3$ன் கூறுகள் $(-1,-2)$ எனில் அது குறிக்கும் சிக்கலெண் $-1-2i$. இம்மாதிரியே $P_4(2,-1)$ குறிக்கும் சிக்கலெண் $2-i$.

குறிப்பு :— பல்வேறு சிக்கலெண்களைக் குறிக்கக்கூடிய புள்ளிகள் ஆர்கண் தளத்தில் (Argand Plane) நான்கு கால் பகுதிகளிலும் (Quadrants) அமையும்.

5·4. பொதுவாக $x+iy$ என்னும் சிக்கலெண்ணை $z$, எனக் குறிப்பது வழக்கம். $P$ என்னும் புள்ளி $z$ என்னும் சிக்கலெண்ணைக் குறிக்கட்டும். குத்துக் கோடு $PM$ஐ $P$யிலிருந்து $X$ அச்சுக்கு வரை.




படம் 25

ஆகையால், $OM=x$, $MP=y$.

$OP=+\sqrt{x^2+y^2}$; $\tan\theta=\dfrac{y}{x}$

எனவே $O$ ஆதியாலுல் (origin) $OP$யின் நீளம் $z$ன் குணகம் (modulus) என்று சொல்லப்படுகிறது. இக்குணகத்தை $|z|=OP=+\sqrt{x^2+y^2}$ என்று குறியீட்டு விளக்குகின்றோம்.

இக் குணகத்திற்குக் கூட்டல் குறிதான் எடுத்துக்கொள்ள வேண்டும். அதாவது, $x+y$ன் குணகம் $+\sqrt{x^2+y^2}$.

கோணம் $\theta$ஐ, சிக்கலெண் $z$ன் வீச்சம் (amplitude) என்று வரையறுக்கப்படுகிறது. $-\pi$க்கும், $+\pi$க்கும் இடையே உள்ள எந்தக் கோணம் $\theta$, $\cos\theta=\dfrac{x}{\sqrt{x^2+y^2}}$, $\sin\theta=\dfrac{y}{\sqrt{x^2+y^2}}$ என்ற இரு சமன்பாடுகளுக்கும் தகுதியாயிருக்கிறதோ, அதுதான், $x+iy$ன் வீச்சத்தினுடைய முதல் மதிப்பு (principal value). $\theta+2n\pi$ என்பது வீச்சத்தின் பொது மதிப்பாகும் (General value)

மெய்யான அச்சில் ($x$ அச்சு) $P$ன் பிரதிவிம்பம் (Reflection) $Q$ எனில், $Q$ குறிக்கும் சிக்கல் எண்ணிற்கு $z$ன் இணைச்சிக்கலெண் (conjugate) எனப் பெயர். இதன் குறியீட்டு விளக்கம் $\bar{z}$. படம் 25 லிருந்து. $\bar{z}=x-iy$. என விளங்கும்.

$P^1$ என்னும் புள்ளியை $OP$ல் $PO=OP^1$ என்னும்படி எடுக்க. படம் 25லிருந்து, $P_1$ என்னும் புள்ளி $-x-iy$ஐ, அதாவது $-z$ஐ குறிக்கும் என விளங்குகிறது.

சிக்கலெண்ணின் குணகம், வீச்சம் (முதல் மதிப்பு) இவைகளைப் பற்றிய குறிப்பு : (படம் 24ஐ பார்க்கவும்)

(a) $P_1$ குறிக்கும் சிக்கலெண்ணின் குணகம் $=+OP_1$: வீச்சத்தின் முக்கிய மதிப்பு $=\angle XOP_1$ [இது ஒரு நேர் குறுங் கோணம்]

(b) $P_2$ குறிக்கும் சிக்கலெண்ணின் குணகம் $=+OP_2$; வீச்சத்தின் முதல் மதிப்பு $=\angle XOP_2$ [இது ஒரு நேர் விரி கோணம்]

(c) $P_3$ குறிக்கும் சிக்கலெண்ணின் குணகம் $= +OP_3$; வீச்சத்தின் முதல் மதிப்பு $= \angle XOP_3$ [இது ஒரு எதிர் விரி கோணம்]

(d) $P_4$ குறிக்கும் சிக்கலெண்ணின் குணகம் $= +OP_4$; வீச்சத்தில் முதல் மதிப்பு $= \angle XOP_4$ [இது ஒரு எதிர் குறுங் கோணம்.

**5·5. ஒரு சிக்கலெண்ணை அதன் குணகம் வீச்சம் இவைகளின் மூலம் விவரிக்க.**

கொடுக்கப்பட்ட சிக்கலெண்ணை $z = x + iy$ என்க.

படம் 25லிருந்து, $z = r\cos\theta$; $y = r\sin\theta$

ஆகையால் $x + iy = r\cos\theta + ir\sin\theta$

அல்லது, $z = r(\cos\theta + i\sin\theta)$

உதாரணமாக, $2 + i = 2 + i\cdot 1 = \sqrt{2_2 + 1_2}$

$$\left[\frac{2}{\sqrt{2_2+1_2}} + i\frac{1}{\sqrt{2^2+1^2}}\right]$$

$$= \sqrt{5}\left[\frac{2}{\sqrt{5}} + i\frac{1}{\sqrt{5}}\right]$$

$$= \sqrt{5}\,[\cos\alpha + i\sin\alpha] \qquad (\text{இங்கு } \alpha = \tan^{-1}\tfrac{1}{2})$$

**5·6. $z_1$, $z_2$ என்னும் இரு சிக்கலெண்களின் கூடுதலை ஆர்கண் தளத்தில் குறிக்க.**

$P$, $Q$ என்ற புள்ளிகள் முறையே $z_1\ (= x_1 + iy_1)$; $z_2\ (= x_2 + iy_2)$ என்ற சிக்கலெண்களை ஆர்கண் தளத்தில் குறிக்கட்டும்.

$O$, ஆதியானுல் $R$ என்னும் புள்ளியை $OPRQ$ ஒரு இணைகரமாக இருக்கும்படி எடுத்துக்கொள்.



படம் 26

$Q$, $P$ $R$லிருந்து $OX$க்கு (மெய் அச்சு) வரையப்படும் செங்குத்துக் கோடுகளின் அடிப்புள்ளிகளை $N$, $M$, $L$ எனக் கொள் மேலும் $P$யி லிருந்து $RL$க்கு வரையப்படும் செங்குத்துக் கோட்டின் அடி $S$ ஆக இருக்கட்டும்.

முக்கோணங்கள் $ONQ$, $PSR$ல். $OQ$, $PR$ சம இணைகோடுகள். மேலும் $QN$, $RS$க்கும் இணையாக உள்ளன.

ஆகையால், $QN = PS$; $NQ = SR$. $(\because\ \triangle ONQ \equiv \triangle PSR)$

$\therefore\quad OL = OM + ML$

$\qquad\quad = OM + PS$

$$= OM+ON$$
$$= x_1+x_2$$
$$LR = LS+SR$$
$$= LS+NQ$$
$$= MP+NQ$$
$$= y_1+y_2.$$

எனவே, $R$ என்னும் புள்ளி $x_1+x_2+i\ (y_1+y_2)$, அதாவது, $(x_1+i\,y_1)+(x_2+i\,y_2)$ அதாவது $z_1+z_2$ஐக் குறிக்கிறது

ஆகையால், $z_1$, $z_2$ என்ற இரு சிக்கலெண்களை $P$, $Q$ என்னும் புள்ளிகள் குறித்தால், $z_1+z_2$ஐக் குறிக்கும். புள்ளி ($R$) $OP$, $OQ$ஐ அடுத்துள்ள பக்கங்களாகக் கொண்ட நாற்கரத்தினுடைய, $O$ வழியே செல்லும் மூலைவிட்டத்தின் முனைப்புள்ளியாகும்.

குறிப்பு (1):—$PR=OQ=|z_2|=|(z_1+z_2)-z_1|$

குறிப்பு (2):—ஒரு முக்கோணத்தில் எதேனும் ஒரு பக்கம் மற்ற இரு பக்கங்களின் கூடுதலைவிட அதிகமாய் இருக்கமுடியாது. ஆகையால் முக்கோணம் $OPR$லிருந்து, $OR \leq OP+PR$

அதாவது, $OR \leq OP+OQ$ ($\because$ $PR=OQ$)

$z_1+z_2$ஐ $R$ குறிப்பதால் $OR=|z_1+z_2|$; மேலும் $OP=|z_1|$; $OQ=|z_2|$.

ஆகையால், $|z_1+z_2| \leq |z_1|+|z_2|$

5·7. $z_1$, $z_2$ என்னும் இரு சிக்கலெண்களின் வித்தியாசத்தை ஆர்கண் தளத்தில் குறிக்க.

$P$, $Z$ ஐயும் $Q$, $Z_2$ஐயும் குறிக்கட்டும்.

$Q^1$ என்னும் புள்ளி $-Z_2$ஐக் குறித்தால் $Q^1Q$ன் மையப்புள்ளி $O$ (ஆதி) ஆகும். (§ 5·4)



படம் 27

$R^1$ என்னும் புள்ளியை $OPR^1\ Q^1$ ஒரு இணைகரமாக இருக்கும்படி எடுத்துக்கொள். $P$, $Z_1$ஐயும், $Q^1$, $-Z_2$ஐயும் குறிப்பதால் $R^1$ $Z_1+(-Z_2)$ஐக் குறிக்கும். (§ 5·6)

அதாவது $R^1$, $Z_1-Z_2$ஐக் குறிக்கும்.

குறிப்பு:—ஒரு முக்கோணத்தின் ஏதேனும் ஒரு பக்கம் மற்ற இரு பக்கங்களின் வித்தியாசத்தைவிடக் குறைவாய் இருக்க முடியாது. ஆகையால், முக்கோணம் $OQ^1\ R^1$லிருந்து

$$OR^1 \geqslant, Q^1R^1 \backsim OQ^1$$

அதாவது, $OR^1 \geqslant, OP \sim OQ^1$

$OQ^1 \geqslant, OP \sim OQ \quad (\because \; Q^1O = OQ)$

(அ-து. $1-Z_2 1 = 1 Z_2 1$)

$Z_1 - Z_2$ஐ $R^1$ குறிப்பதால் $OR^1 = 1Z_1 - Z_2 1$. இம்மாதிரியே. $OP = 1Z_1 1$, $OQ = 1Z_2 1$.

ஆகையால், $1Z_1 - Z_2 1 \geqslant, 1Z_1 1 \sim 1Z_2 1$. .........(A)

$1Z_1 1 > 1Z_2 1$ எனில், $(A)$ஐ

$1Z_1 - Z_2 1 \geqslant, 1Z_1 1 - 1Z_2 1$ என்றும்

$1Z_1 1 < 1Z_2 1$ எனில் $(A)$ஐ

$1Z_1 - Z_2 1 \geq, 1Z_2 1 - 1Z_1 1$ என்றும் எழுதலாம்.

அல்லது $1Z_1 - Z^2 1 >, [1Z_1 1 - 1Z^2 1] \quad (1Z_1 1 >< 1Z_2 1)$

.........(B)

5·8. $x, y$ இவ்விரண்டிற்கும் வெவ்வேறு மதிப்புக்களிட்டால் $Z = x + iy$ என்ற சிக்கலெண் வெவ்வேறு மதிப்புக்களைப் பெறும். இத்தகைய சிக்கலெண் $Z$க்கு சிக்கல் மாறி (complex variable) எனப் பெயர்.

$Z$ ஏதேனும் ஒரு நிபந்தனைக்கு உட்பட்டால், $Z$ஐக் குறிக்கும் புள்ளி $P$ன் நியமப்பாதையைச் (locus) சுலபமாகக் கண்டுபிடிக்கலாம் உதாரணமாக, $1Z_1 = 1$ எனில் $Z$ஐக் குறிக்கும் $P$ன் நியமப்பாதை ஆதி $O$ஐ மையமாகவும் ஆரம் $= 1$ உள்ளதாகவும் வரைந்த வட்ட மாகும்.

5·9. ஒரு முக்கிய நியமப் பாதை

$a, b$ இரு நிலைச் சிக்கலெண்களாகவும், $K$ ஒரு மெய்யான நிலையெண்ணுகவும் $\dfrac{|Z-a|}{|Z-b|} = K$ஆகவும் இருந்தால் $P(Z)$ன் நியமப்பாதை (i) ஒருவட்டம் $(K \pm 1)$ (ii) ஒரு நேர்கோடு $(K = 1)$

$a, b$ என்ற இரு நிலைச் சிக்கலெண் களையும் $A, B$ என்ற இரு புள்ளிகள் குறிக்கட்டும். $P, Z$ என்ற சிக்கலெண் ணைக் குறிப்பதால், $|Z-a| = PA$. [குறிப்பு (1), § 5·6]



படம்-28

இம்மாதிரியே,

$|Z-b| = PB$

ஆகையால், $\dfrac{PA}{PB} = K$

$AB$ஐ உள்ளும் வெளியும் $K : 1$ என்ற விகிதத்தில் வெட்டும்படி $C, D$ என்ற இரு புள்ளிகளை எடுத்துக்கொள்.

$\therefore \quad \frac{PA}{PB}=\frac{AC}{CB}=\frac{AD}{BD}$; $A, C, B, D$ நிலையான புள்ளிகள்.

ஆகையால், வரை கணிதத்திலிருந்து, $K \neq 1$ எனில் $P$ன் நியமப் பாதை $CD$ஐ விட்டமாகக் கொண்டு வரையப்பட்ட அபலோனியஸ் (Apollonius) வட்டமாகும்.

$K=1$ எனில், $C$ என்பது $AB$ன் மையப்புள்ளியாகும். இப்பொழுது, $\triangle PAC \equiv \triangle PBC$. ஆகையால், $P$ன் நியமப்பாதை $PC$ என்னும் நேர்க் கோடு, அதாவது, $AB$ன் மையக் குத்துக்கோடு.

5·10. $a,b,c,d$ என்னும் மெய்யான எண்களைக் கொண்ட, இரு சிக்கலெண்கள் $a+ib=c+id$ சமமாயிருப்பின் $a=c$; $b=d$

ஏனெனில் $a+ib=c+id$ என்பதை

$(a-c)+i(b-d)=0$ என்று எழுதலாம்.

$a-c$ என்பது ஒரு மெய்யான எண். $i(b-d)$ என்பது ஒரு கற்பனை யான எண். இவ்விரண்டு எண்களின் கூட்டுத்தொகை பூச்சியமாகில் ஒவ்வொன்றும் தனித்தனியே பூச்சியமாக இருத்தல் வேண்டும். எனவே, $a=c$; $b=d$.

5·11.

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1. $\sqrt{3}+i$, $\sqrt{2}+i\sqrt{2}$, $1+i\sqrt{3}$ஐ ஆர்கண் தளத்தில் குறிக்கும் புள்ளிகள் ஒரு இரு சமபக்க முக்கோ ணத்தின் உச்சிகள் என நிறுவுக.

$A, B, C$ முறையே $\sqrt{3}+i$, $\sqrt{2}+i\sqrt{2}$, $1+i\sqrt{3}$ஐ ஆர்கண் தளத்தில் குறித்தால்,

$$AB = |(\sqrt{3}+i)-(\sqrt{2}+i\sqrt{2})| \qquad (\S\ 5\cdot6,\ \text{குறிப்பு (i)})$$
$$= |(\sqrt{3}-\sqrt{2})+i(1-\sqrt{2})|$$
$$= \sqrt{(\sqrt{3}-\sqrt{2})^2+(1-\sqrt{2})^2} \qquad (\S\ 5\cdot4)$$
$$= \sqrt{8-2\sqrt{6}-2\sqrt{2}}$$

இம்மாதிரியே

$$BC = \sqrt{(\sqrt{2}-1)^2+(\sqrt{2}-\sqrt{3})^2}$$
$$= \sqrt{8-2\sqrt{2}-2\sqrt{6}}$$
$$CA = \sqrt{(1-\sqrt{3})^2+(\sqrt{3}-1)^2}$$
$$= \sqrt{8-4\sqrt{3}}$$
$$AB = BC \ (=\sqrt{8-2\sqrt{6}-2\sqrt{2}})$$

எனவே $ABC$ ஒரு இரு சமபக்க முக்கோணம்.

மாதிரி 2. $\frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}}$ என்னும் சிக்கலெண்ணின் குணகத்தையும் வீச்சத்தின், முதல், பொது மதிப்புக்களையும் கண்டு பிடிக்க.

$4-2i\sqrt{3}$ என்னும் சிக்கலெண் பகுதியிலிருப்பதால் அதனுடைய இணைச் சிக்கலெண் (அ.து.) $4+2\sqrt{3}i$ ஆல் தொகுதியையும், பகுதியையும் பெருக்க.

$$\therefore \frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}} = \frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}} \times \frac{4+2i\sqrt{3}}{4+2i\sqrt{3}}$$

$$= \frac{20+14\sqrt{3}.i+6i^2}{16-12i^2}$$

$$= \frac{20+14\sqrt{3}i-6}{16+12} \quad (\because i^2=-1)$$

$$= \frac{14(1+\sqrt{3}i)}{28}$$

$$= \frac{1}{2} + \frac{\sqrt{3}}{2}i$$

ஆகையால், $\left|\frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}}\right| = \left|\frac{1}{2} + i\frac{\sqrt{3}}{2}\right|$

$$= \sqrt{\tfrac{1}{4}+\tfrac{3}{4}} \qquad (\S\ 5\ 4)$$

அதாவது,

$\left(\frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}}\right)$ ன் குணகம் $= 1$

$\frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}}$ ன் வீச்சம் $= \left(\frac{1}{2} + \frac{\sqrt{3}}{2}i\right)$ ன் வீச்சம்.

$$= \tan^{-1}\frac{\sqrt{3}/2}{1/2}$$

$$= \tan^{-1}\sqrt{3}$$

அதாவது,

$\frac{5+i\sqrt{3}}{4-2i\sqrt{3}}$ ன் வீச்சம் $= \frac{\pi}{3}$. (முதல் மதிப்பு)

$= \frac{\pi}{3} + 2n\pi$ (பொது மதிப்பு)

மாதிரி 3. $1+2i$, $-1+i$, $3i$ இவைகளை சிக்கற் றளத்தில் (complex plane) குறிக்கும் புள்ளிகளை, ஆதியைச் சுற்றி

முறையே 30°, 60°, 45° இடமாகச் சுழற்றினல் கிடைக்கும் புதிய புள்ளிகள் குறிக்கும் சிக்கலெண்களைக் கண்டுபிடிக்க.

**ஆர்கண்ட் தளத்தின் மாற்றுப் பெயர் சிக்கற்றளம்.**

$P(z)\,(=r\,(\cos\theta+i\sin\theta))$ஐ ஆதியைச் சுற்றி $\alpha$ இடமாகச் சுழற்றினல் (counter clockwise) கிடைக்கும் புதிய புள்ளி $P^1(z^1)$ எனில்

$$z^1=r\{\cos(\theta+\alpha)+i\sin(\theta+\alpha)\}.$$

இப்பொழுது, $1+2i=\sqrt{1^2+2^2}\left\{\frac{1}{\sqrt{1^2+2^2}}+\frac{2}{\sqrt{1^2+2^2}}i\right\}$

$$=\sqrt{5}\left\{\frac{1}{\sqrt{5}}+\frac{2i}{\sqrt{5}}\right\}$$

$$=\sqrt{5}\,(\cos\theta^\circ+i\sin\theta^\circ)$$

$$\left\{\cos=\frac{1}{\sqrt{5}}\quad\sin\theta=\frac{2}{\sqrt{5}}\right\}$$

ஆகையால், $1+2i$ஐக் குறிக்கும் புள்ளியை, ஆதியைச் சுற்றி 30° இடமாகச் சுழற்றினல் கிடைக்கும் புதிய புள்ளி குறிக்கும் சிக்கலெண் $\sqrt{5}\{\cos(\theta^\circ+30^\circ)+i\sin(\theta^\circ+30^\circ)\}$

அதாவது, $\sqrt{5}\{\cos\theta^\circ\cdot\cos 30^\circ-\sin\theta^\circ\sin 30^\circ$
$+i(\sin\theta^\circ\cos 30^\circ+\cos\theta^\circ\sin 30^\circ)\}$

$$=\sqrt{5}\left\{\frac{1}{\sqrt{5}}\cdot\frac{\sqrt{3}}{2}-\frac{2}{\sqrt{5}}\cdot\tfrac{1}{2}+i\left(\frac{2}{\sqrt{5}}\cdot\frac{\sqrt{3}}{2}+\frac{1}{\sqrt{5}}\cdot\tfrac{1}{2}\right)\right\}$$

$$=\frac{\sqrt{3}}{2}-1+i\,(\sqrt{3}+\tfrac{1}{2})$$

இம்மாதிரியே, $-1+i$ஐக் குறிக்கும் புள்ளியை, ஆதியைச் சுற்றி 60° இடமாகச் சுழற்றினல் கிடைக்கும் புதிய புள்ளி குறிக்கும் சிக்கலெண் $-\frac{1}{2}\{\sqrt{3}+i+i(\sqrt{3}-1)\}$ மேலும், $3i$ஐக் குறிக்கும் புள்ளியை, ஆதியைச் சுற்றி 45° இடமாகச் சுழற்றினல் கிடைக்கும் புதிய புள்ளி குறிக்கும் சிக்கலெண் $\frac{3}{\sqrt{2}}\{-1+i\}$

மாதிரி 4. சிக்கலெண்கள் $z$, $\alpha$, $\beta$ இல் முதல் எண் சிக்கல் மாறியாகவும் மற்ற இரண்டும் நிலையாகவும் இருப்பின் கீழ்க் கண்ட சமன்பாடுகளுக்கொத்த, ஆர்கண் தளத்திலுள்ள நியமப் பாதைகள் யாவை?

(i) $|z-\alpha|=|z-\beta|$

(ii) $|z-\alpha|=|\beta|$

$z=x+iy;\quad \alpha=a+ib.\quad \beta=c+id$ எனில்,

$| z-\alpha | = | x-a+i(y-b) |$
$= \sqrt{(x-a)^2+(y-b)^2}$

$| z-\beta | = | x-c+i(y-d) |$
$= \sqrt{(x-c)^2+(y-d)^2}$

$| z-\alpha | = | z-\beta |$ எனில்.

$\sqrt{(x-a)^2+(y-b)^2} = \sqrt{(x-c)^2+(y-d)^2}$

இருபக்கமும் வர்க்கம் செய்ய.

$(x-a)^2+(y-b)^2=(x-c)^2+(y-d)^2$

(அ-து) $2x(c-a)+2y(d-b)=c^2+d^2-a^2-b^2$.

ஆகையால், $P(z)$ன் நியமப்பாதை ஒரு நேர்கோடு.

[§ 5·9ஐ ஒப்பிட்டுப் பார்]

$| z-\alpha | = | \beta |$, எனில்,

$\sqrt{(x-a)^2+(y-b)^2} = \sqrt{c^2+d^2}$

இருபக்கமும் வர்க்கம் செய்ய

$(x-a)^2+(y-b)^2 = c^2+d^2$

ஆகையால் $P(z)$ன் நியமப்பாதை ஒரு வட்டம். இவ்வட்டத்தின் மையம் $\alpha$ஐக் குறிக்கும் புள்ளி; ஆரம் $= | \beta |$

[§ 5·8ஐ ஒப்பிட்டுப் பார்]

மாதிரி 5. $z=2$, $z=0$ஐக் குறிக்கும் புள்ளிகள் முறையே $P$, $O$. $z$ என்னும் சிக்கல் மாறியைக் குறிக்கும் புள்ளி $OP$ஐ விட்டமாகக் கொண்டு வரைந்த வட்டத்திலிருந்தால், $z^2$ஐக் குறிக்கும் புள்ளியின் நியமப்பாதையைக் கண்டுபிடிக்க



படம்-29

$O$ குறிக்கும் எண் $z=0$

$\therefore$ $O$ என்பது ஆர்கண் தளத்தின் ஆதி.

$P$ குறிக்கும் எண் $z=2$. ஆகையால், $P$ என்பது, மெய்யான அச்சு ($OX$ அச்சு)மீது உள்ளது. மேலும் $OP=2$. $C$, $z=1$ என்னும் எண்ணைக் குறிக்குமாயின் $C$, $OP$ன் மையப் புள்ளியாகும். ஆகையால், $OP$ஐ விட்டமாகக் கொண்ட வட்டத்தின் மையப்புள்ளி $C$

$Q$, $(z)$ என்பது இவ்வட்டத்தின் மீதிருப்பதால், $P\hat{C}Q=\theta$ எனில் $z=OC+CQ\cos\theta+i\,CQ\sin\theta$.

அதாவது, $z=1+\cos\theta+i\sin\theta$. ($\because$ $OC=CQ=CP=1$)

ஆகையால், $z=2\cos^2\theta/2+2i\sin\theta/2\cdot\cos\theta/2.$

$=2\cos\theta/2\cdot\{\cos\theta/2+i\sin\theta/2\}$

$\therefore\quad z^2=4\cos^2\theta/2\cdot\{\cos\theta/2+i\sin\theta/2\}^2$

$=4\cos^2\theta/2\cdot\{\cos^2\theta/2+2i\sin\theta/2\cdot\cos\theta/2+i^2\sin^2\theta/2\}$

$=4\cos^2\theta/2\cdot\{\cos^2\theta/2-\sin^2\theta/2+2i\sin\theta/2\cdot\cos\theta/2\}$

$=4\cos^2\theta/2\cdot\{\cos\theta+i\sin\theta\}$

$=2(1+\cos\theta)\cdot\{\cos\theta+i\sin\theta\}$

எனவே, $R$ என்னும் புள்ளி $z^2$ஐக் குறித்தால்,

$OR=|z^2|$

$=\sqrt{\{2(1+\cos\theta)\cos\theta\}^2+\{2(1+\cos\theta)\sin\theta\}^2}$

$=2(1+\cos\theta)\sqrt{\cos^2\theta+\sin^2\theta}$

$2(1+\cos\theta)$

அதாவது, $OR=r$ எனில்,

$r=2(1+\cos\theta)$ .........(i)

$z^2$ன் வீச்சம் $=\tan^{-1}\dfrac{2(1+\cos\theta)\cdot\sin\theta}{2(1+\cos\theta)\cdot\cos\theta}$

$=\tan^{-1}(\tan\theta)$

$=\theta.$ (முதல் மதிப்பு) .........(ii)

ஆகையால், $X\hat{O}R=\theta.$

(i), (ii)லிருந்து, $R(z^2)$ன் நியமப்பாதையின் கோண தூரச் சமன்பாடு (Polar equations)

$r=2(1+\cos\theta)$ என்று விளங்குகிறது.

எனவே, $R(z^2)$ன் நியமப்பாதை ஒரு இதயவுரு (cardioid)

## அப்பியாசம் 5 (அ)

1. பின்வருவனவற்றின் குணகத்தையும் வீச்சத்தையும் கண்டுபிடிக்க.

(i) $\dfrac{1+2i}{3+4i}$ [விடை: $\sqrt{\frac{1}{5}}$, $\tan^{-1}\frac{2}{11}$]

(ii) $\dfrac{2+3i}{1-i}$ [விடை: $\sqrt{\frac{13}{2}}$, $\pi-\tan^{-1}5$]

(iii) $\dfrac{5-2i}{i}$ [விடை: $\sqrt{29}$, $\pi+\tan^{-1}\frac{5}{2}$]

(iv) $\frac{3}{i}\left(1-\frac{6}{i}+7i\right)$ [விடை : $3\sqrt{170}, -\tan^{-1}\frac{1}{18}$]

(v) $\frac{(2-i)(1+i)}{1-i}$ [விடை : $\sqrt{5}, \tan^{-1} 2$]

(vi) $\frac{(1+i)(1+2i)}{1+3i}$ [விடை : $1, \tan^{-1}\frac{3}{4}$]

2. $\sqrt{x+iy}=a+ib$ எனில் $x=a^2-b^2$, $y=2ab$ என்று நிரூபி. இதை உபயோகித்து $3+4i$ன் வர்க்க மூலத்தைக் கண்டுபிடிக்க.

[விடை : $\pm(2+i)$]

3 $5-12i$ன் வர்க்கமூலத்தைக் கண்டுபிடிக்க.

[விடை : $\pm(3-2i)$]

4. $\frac{2-i}{(1-2i)^2}$ன் இணைச்சிக்கலெண் $-\frac{(2+11i)}{25}$ எனக் காண்க

5. $\frac{(1+2i)^2}{1+3i}$ன் இணைச்சிக்கலெண் $\frac{9-13i}{10}$ என நிறுவுக.

6. $\frac{1}{1+\cos\theta+i\sin\theta}$ன் இணைச்சிக்கலெண் $\frac{\sin\theta+i(1-\cos\theta)}{\sin\theta}$ எனக் காண்க

7. $\frac{3}{2+\cos\theta+i\sin\theta}$ ன் குணகம், வீச்சத்தின் முதல் மதிப்பு, இணைச் சிக்கலெண் ஆகிய இவற்றைக் கண்டுபிடிக்க.

$$\left[\text{விடை: } \frac{3}{\sqrt{5+4\cos\theta}},\ -\tan^{-1}\frac{\sin\theta}{2+\cos\theta};\ \frac{3[(2+\cos\theta)+i\sin\theta]}{5+4\cos\theta}\right]$$

8 கீழ்க்கண்ட புள்ளிகணங்கள் (Sets of points) செங்கோண முக்கோணத்தின் உச்சிகள் எனக் காண்க.

(i) $4+5i$ $-1+2i$, $2-3i$

(ii) $8-10i$, $7-3i$, $-4i$

(iii) $3+4i$ $12-i$, $5+6i$

(iv) $3-2i$, $-26i$, $-5-i$

9 கீழ்க்கண்ட புள்ளிக்கணங்கள், இரு சமபக்க செங்கோண முக்கோணத்தின் உச்சிகள் என நிறுவுக.

(i) $7+3i$, $-2i$, $-5+5i$

(ii) $-7+i$, $1-6i$, $8+2i$

(iii) $5+2i$, $-6i$, $-8-i$

(iv) $4+2i$, $2-2i$, $2-8i$

10. கீழ்க்கண்ட புள்ளிக்கணங்கள், இருசமபக்க முக்கோணத்தின் உச்சிகள் எனக் காண்க.

(i) $3+4i, -13+2i, 1-6i$

(ii) $-5+i, -3-3i, i$

(iii) $-3i, -5-3i, 3+i$

(iv) $1, \frac{1}{\sqrt{2}}(1+i), i$

11. கீழ்க்கண்ட புள்ளிக்கணங்கள், சமபக்க முக்கோணத்தின் உச்சிகள் எனக் காண்க.

(i) $-2, 1-\sqrt{3}i, 1+\sqrt{3}i$

(ii) $2\sqrt{3}+2i, -2\sqrt{3}+2i, -4i$

(iii) $2+2i, -2-2i, -2\sqrt{3}+2\sqrt{3}i$

12. கீழ்க்கண்ட புள்ளிக்கணங்கள், சதுரத்தின் உச்சிகளென நிறுவுக.

(i) $7-3i, 4+i, 8+4i, 11$

(ii) $7-i, 4-3i, 2, 5+2i$

(iii) $-5+2i, -7+3i, -8+i, -6.$

13. கீழ்க்கண்ட புள்ளிக்கணங்கள் இணைகரத்தின் உச்சிகளென நிறுவுக.

(i) $5-3i, -2+7i, -1-3i, 6-13i$

(ii) $-6, 7-8i, 4+9i, -9+17i$

(iii) $-7-5i\ 3-4i, -1+2i, -11+i$

14. ஒரு சதுரத்தின் ஒரு உச்சியும், மையப்புள்ளியும் முறையே $4+7i, 1+3i$ எனில் அதன் மற்ற உச்சிகளைக் காண்க.

[விடை: $-3+6i, -2-i, 5$]

15. ஒரு சதுரத்தின் ஒரு உச்சியும், மையப்புள்ளியும் முறையே $-1+i, 2-i$ எனில் அதன் மற்ற உச்சிகளைக் காண்க.

[விடை: $-4i, 5-3i, 4+2i$]

16. ஒரு சதுரத்தின் ஒரு உச்சியும், மையப்புள்ளியும் முறையே $\frac{5}{2}(1+i), \frac{3}{2}(1+3i)$ எனில் மற்ற உச்சிகளைக் கண்டுபிடிக்க.

[விடை: $\frac{-1+7i}{2}, \frac{1+13i}{2}, \frac{7+11i}{2}$]

17. $2+(2+\sqrt{3})i;\ 2+(2-\sqrt{3})i;\ 5+iy$ என்னும் புள்ளிகள் ஆர்கண் வரைபடத்தில் ஒரு சமபக்க முக்கோணத்தின் உச்சிகளை குறித்தால் $y$க்கு மெய்யான மதிப்பு உண்டு என நிறுவுக.

[விடை: $y=2$]

18. $\alpha, \beta$ இரு நிலைச் சிக்கலெண்கள்; $t$ ஒரு மெய்யான மாறி $z=\alpha+t(\beta-\alpha)$ எனில், $P(z)$ன் நியமப்பாதை ஓர் நேர்கோடு என நிறுவுக.

19. $\dfrac{|z-1|}{|z-i|}=1$ எனில், $P(z)$ன் நியமப்பாதை ஆதியின்மூலம் செல்லும் ஒரு நேர்கோடு என நிறுவுக.

20. $2|z-2i| = |z-2|$ எனில், ஆர்கண் தளத்தில் $P(z)$ன் நியமப்பாதை ஒரு வட்டம் என நிறுவுக. அவ்வட்டமையம் குறிக்கும் சிக்கலெண் யாது? [விடை : $-\frac{2}{3}(1-4i)$]

21. $2|z+1| = |z-1|$ எனில், ஆர்கண் தளத்தில் $P(z)$ன் நியமப்பாதை ஒரு வட்டம் எனக் காண்பி. அவ்வட்டமையம் குறிக்கும் எண்ணையும் வட்ட ஆரத்தையும் கண்டுபிடிக்க.

[விடை : $-5, \frac{4}{3}$]

22. $|2z-1| = |z-2|$ எனில் $P(z)$ன் நியமப் பாதை (ஆர்கண் தளத்தில்) ஒரு வட்டமெனக் காண்க.

23. $z=2$, $z=0$ஐக் குறிக்கும் புள்ளிகள் முறையே $P, O$. $z$ என்னும் சிக்கல் மாறியைக் குறிக்கும் புள்ளி $OP$ஐ விட்டமாய்க் கொண்டு வரைந்த வட்டத்திலிருந்தால் $1/z$ஐக் குறிக்கும் புள்ளியின் நியமப்பாதை $X$ அச்சுக்கு (மெய்யான அச்சுக்கு) குத்துக்கோடு என நிறுவுக.

24. கீழ்க்கண்ட சமன்பாடுகளிலிருந்து $P(z)$ன் நியமப்பாதையைக் கண்டுபிடிக்க.

(i) $\left(\dfrac{2z+i}{z-i}\right)$ன் வீச்சத்தின் முதல் மதிப்பு $=\pi/6$

[விடை : $2x^2+2y^2-3\sqrt{3}\,x-y=1$]

(ii) $\left(\dfrac{z-1}{z-i}\right)$ன் வீச்சத்தின் முதல் மதிப்பு $=\pi/4$

[விடை : $x^2+y^2-2x-2y+1=0$]

(iii) $\left(\dfrac{z+2i}{2z+1}\right)$ன் வீச்சத்தின் முதல் மதிப்பு $=\pi/3$

[விடை : $\sqrt{3}(2x^2+2y^2+x+4y)=4x+y+2$]

(iv) $\left(\dfrac{2z-1}{z+2}\right)$ன் வீச்சத்தின் முதல் மதிப்பு $=\pi/2$

[விடை : $2x^2+2y^2+3x-2=0$]

25. $w(=u+iv)$ என்னும் சிக்கல் மாறிக்கும் $z(=x+iy)$ என்னும் சிக்கல் மாறிக்கும் உள்ள தொடர்பும், $z$ன் மீதுள்ள நிபந்தனையும் கீழே

கொடுக்கப்பட்டு இருக்கின்றன. அவைகளிலிருந்து $Q(w)$ன் நியமப் பாதையைக் கண்டுபிடிக்க.

(i) $w=\dfrac{z-2-i}{z+2-i}$: $z$ன் மெய்யான பகுதி$=0$.

[குறிப்பு: $z$ன் மெய்யான பாகம்$=x$ $(\because \quad z=x+iy)$

$$=0$$

$$u+iv=\frac{x+iy-2-i}{x+iy+2-i}$$

$$=\frac{-2+i(y-1)}{2+i(y-1)}$$

இதிலிருந்து $u$, $v$ஐ $y$ன் சார்புகளாகக் கண்டுபிடித்து, அவைகளிலிருந்து $y$ஐ நீக்கினால் (eliminate) $Q(w)$ன் நியமப்பாதை $u^2+v^2=1$ என்ற வட்டம் சுலபமாகக் கிடைக்கும்.

(ii) $w=z^2$; $z$ன் மெய்யான பகுதி$=1$

[விடை: $v^2=4(1-w)$ என்னும் பரவளைவு (parabola)]

(iii) $w=\dfrac{z-1+i}{z-1-i}$; $z$ன் கற்பனையான பகுதி$=0$

[குறிப்பு: $z$ன் கற்பனையான பாகம்$=iy$

$$=0$$

அதாவது, $y=0$]

[விடை: $u^2+v^2=1$ என்னும் வட்டம்]

(iv) $w=z+\dfrac{1}{z}$; $|z|=2$

[குறிப்பு: $z=2(\cos\theta+i\sin\theta)$ என எடுத்துக்கொள்]

$\left[\text{விடை: } \dfrac{u^2}{25}+\dfrac{v^2}{9}=\frac{1}{4}\right.$ என்னும் நீள்வட்டம் (ellipse)$\left.\right]$

5·12. இப்பொழுது சிக்கலெண்கள் $z_1$, $z_2$ன் பெருக்கற் பலனை வரைகணித முறைப்படி காண்போம்.

$(z_1=r_1 \cos\theta_1+i\sin\theta_1)$, $z_2=r_2\ (\cos\ \theta_2+i\sin\theta_2)$ எனில் $z_1 z_2=r_1 r_2\ [\cos(\theta_1+\theta_2)+i\sin(\theta_1+\theta_2)]$. ஆகையால் $|z_1, z_2|$ $=r_1 r_2$; $z_1$, $z_2$ன் வீச்சம் (முதல் மதிப்பு)$=(\theta_1+\theta_2)$. இவ்வீச்சம், குணகம் இரண்டையும் வரைகணித முறைப்படி இப்பொழுது காண்போம்].

சிக்கலெண்கள் $z_1$, $z_2$ஐக் குறிக்கும் (ஆர்கன் தளத்தில்) புள்ளிகளை $P_1$, $P_2$ எனக் கொள்வோம்.

$z$ன் வீச்சத்தினுடைய முதற்மதிப்பு $(=\theta_1)$, $z_2$ன் வீச்சத்தினுடைய முதல் மதிப்பு, $\theta_2$ஐக் காட்டிலும் பெரியது எனக் கொள்ளலாம்.



படம்-30

$A$ என்ற புள்ளியை $OA=1$ என்று இருக்குமாறு $OX$ (மெய்யான அச்சு)மீது அமையுமாறு எடு. ($O$ என்பது ஆதி)

$OP_1$மீது $OP_1P$ என்ற முக்கோணத்தை $\triangle OAP_2$க்கு வடிவொத்ததாக வரை. $P$ என்னும் புள்ளி குறிக்கும் சிக்கலெண் $z=z_1\times z_2$ என பின்வருமாறு நிரூபிக்கலாம்

$$\triangle OP_1P \,|||\, \triangle OAP_2 \quad \text{(அமைப்பு)}$$

$$\therefore \quad \frac{OP_1}{OP} = \frac{OA}{OP_2} = \frac{1}{OP_2}.$$

$$\therefore \quad OP = OP_1 \times OP_2.$$

எனவே $P(z)$ன் குணகம் $|z| = OP_1\times OP_2 = |z_1| \times |z_2|$ .......(i)

மேலும் $X\hat{O}P = X\hat{O}P_1 + P_1\hat{O}P$

$$= X\hat{O}P_1 + A\hat{O}P_2$$

$$= \theta_1+\theta_2.$$

அதாவது $z$ன் வீச்சம் $= \theta_1+\theta_2$ (முதல் மதிப்பு)

$= z_1$ன் வீச்சம் $+ z_2$ன் வீச்சம் ......(ii)

ஆகையால், $P$ என்னும் புள்ளி குறிக்கும் சிக்கலெண் $z$

$= OP\{\cos(\theta_1+\theta_2)+i\sin(\theta_1+\theta_2)\}$ (§ 5·4, § 5·5)

$= OP\{\cos\theta_1\cdot\cos\theta_2-\sin\theta_1 \sin\theta_2+i(\sin\theta_1\cdot\cos\theta_2 + \cos\theta_1 \sin\theta_2)\}$

$= OP\{\cos\theta_2(\cos\theta_1+i\sin\theta_1)+i^2\sin\theta_1\sin\theta_2 + i\cos\theta_1\sin\theta_2\}$

$= OP\{\cos\theta_2(\cos\theta_1+i\sin\theta_1)+i.\sin\theta_2(\cos\theta_1 + i\sin\theta_1)\}$

$= OP.\{(\cos_2+i\sin\theta_2)(\cos\theta_1+i\sin\theta_1)\}$

$= OP_1.(\cos\theta_1+i\sin\theta).OP_2(\cos\theta_2+i\sin\theta_2)$ ((i)லிருந்து)

$= z_1\times z_2.$

இதேபோல், $z_2$ன் வீச்சம், $z_1$ன் வீச்சத்தைவிடப் பெரியதாக இருப்பின், $OP_2P$ என்ற முக்கோணத்தை $OAP_1$ என்ற முக்கோணத்திற்கு வடிவொத்ததாக அமைத்து $P(z)$ $(z=z_1\times z_2)$ஐக் கண்டுபிடிக்கலாம்.

குறிப்பு (1) (i)லிருந்து $|z| = |z_1 z_2| = |z_1| \times |z_2|$.
(ii)லிருந்து $z$ன் வீச்சம் $= z_1 z_2$ன் வீச்சம்

குறிப்பு (2) இம்மாதிரியே $z^2, z^3, \ldots$ ஐக் குறிக்கும் புள்ளிகளைக் கண்டுபிடிக்கலாம்.

$$|z^2| = |z \cdot z| = |z||z| = |z|^2;$$

$z^2$ன் வீச்சம் $=$ $z \cdot z$ன் வீச்சம் $=$ $z$ன் வீச்சம் $+$ $z$ன் வீச்சம்
$= 2.$($z$ன் வீச்சம்)

இம்மாதிரியே,

$$|z|^n = |z|\,|z| \ldots\ldots (n \text{ தடவைகள்}) = |z|^n.$$

மேலும் $z^n$ன் வீச்சம் $=$ $z$ன் வீச்சம் $+$ $z$ன் வீச்சம் $+$
......($n$ உறுப்புக்கள்)
$= n$ ($z$ன் வீச்சம்)

குறிப்பு (3) $z_2$ன் வீச்சத்தின் குறி கழித்தல் குறியானால் ($\theta_2$ எதிர்) $OP_1$ மீது வரையும் முக்கோணம் $OP_1P$, $OP_1$க்குக் கீழே அமையும்.

5·13 : $z = \dfrac{z_1}{z_2}$ ஐ வரைகணித முறைப்படி காண்போம்.

$[z_1 = r_1(\cos\theta_1 + i\sin\theta_1]$, $z_2 = r_2\ (\cos\theta_2 + i\sin\theta_2)$ எனில்

$$\frac{z_1}{z_2} = \frac{r_1}{r_2}[\cos(\theta_1 - \theta_2) + i\sin(\theta_1 - \theta_2)]$$

ஆகையால், $\left\{\dfrac{z_1}{z_2}\right\} = \dfrac{r_1}{r_2}$; $\dfrac{z_1}{z_2}$
வின் வீச்சம் (முதல் மதிப்பு)
$= \theta_1 - \theta_2$. இவ்வீச்சம், குணகம் இவற்றை வரை கணித முறைப்படி இப்பொழுது காண்போம்]



படம் - 31

முன்போல $P_1$ $P_2$ என்ற புள்ளிகள் $z_1$, $z_2$ஐக் குறிக்கட்டும் ($z_1$ன் வீச்சம் $\theta_1 > z_2$ன் வீச்சம் $\theta_2$)

$A$ என்ற புள்ளியை $OX$ (மெய்யான அச்சு) மீது, $OA = 1$ இருக்குமாறு எடு.

$P(z)$ என்ற புள்ளியை $OP_1$க்கு கீழ் இருக்குமாறும், $\triangle OP_1P$, $\triangle OP_2A$க்கு வடிவொத்ததாக இருக்குமாறும் எடுத்துக்கொள்.

$$\therefore \frac{OP_1}{OP} = \frac{OP_2}{OP} = OP_2$$

$$OP = \frac{OP_1}{OP_2} = \frac{|z_1|}{|z_2|}$$

மேலும் $X\hat{O}P = X\hat{O}P_1 - P\hat{O}P_1$
$= X\hat{O}P_1 - A\hat{O}P_2$
$= \theta_1 - \theta_2.$

அதாவது, $(z)$ன் வீச்சம் $= \theta_1 - \theta_2$
$= z_1$ன் வீச்சம் $- z_2$ன் வீச்சம்..... (ii)

எனவே $P$ குறிக்கும் சிக்கலெண் $z$.

$= OP\{\cos(\theta_1-\theta_2)+i\sin(\theta_1-\theta_2)\}$

$= OP.\{\cos\theta_1.\cos\theta_2+\sin\theta_1.\sin\theta_2+i(\sin\theta_1.\cos\theta_2 - \cos\theta_1\sin\theta_2)\}$

$= OP\{\cos\theta_2(\cos\theta_1+i\sin\theta_1) - i^2\sin\theta^1\sin\theta_2 - i\cos\theta_1\sin\theta_2\}$

$= OP\{\cos\theta_2(\cos\theta_1+i\sin\theta_2) - i\sin\theta_2(\cos\theta_1 - +i\sin\theta_1)\}$

$= OP.\{\cos\theta_1+i\sin\theta_1)(\cos\theta_2 - i\sin\theta_2)\}$

$= OP\dfrac{\{\cos\theta_1+i\sin\theta_1)(\cos\theta_2-i\sin\theta_2).(\cos\theta_2+i\sin\theta_2)\}}{\cos\theta_2+i\sin\theta_2}$

$= \dfrac{OP_1}{OP_2}\cdot\dfrac{(\cos\theta_1+i\sin\theta_1)}{(\cos\theta_2+i\sin\theta_2)}$

$= \dfrac{z_1}{z_2}.$

குறிப்பு :— (i)லிருந்து $|z| = \left\{\dfrac{z_1}{z_2}\right\} = \dfrac{|z_1|}{|z_2|}$.

(ii)லிருந்து $z$ன் வீச்சம் $= \dfrac{z_1}{z_2}$ ன் வீச்சம்
$= z_1$ன் வீச்சம் $-- z_2$ன் வீச்சம்.

5·14. ஆதியை மையமாகவும் ஆரம் $= R$ உள்ளதாகவும் வரையப்பட்ட வட்டத்தைக் குறித்து (with respeect to a circle $P(z)$ என்னும் புள்ளிக்கு எதிர்மாறாக (Inverse) உள்ள $P^1$ $(z^1)$ ஐக் கண்டு பிடிக்க.




படம் - 32

வரைவிலக்கணம் : $P^1$ என்னும் புள்ளி ஒரு வட்டத்தைக் குறித்து $P$ன் எதிர்மார் எனில், $OP \cdot OP^1 = R^2$. ($O$ வட்ட மையம், $R =$ ஆரம்). (இவ் வரைவிலக்கணத்தை வரை கணிதத்தில் கண்டிருக்கலாம்) மேலும், $O$, $P$, $P^1$ ஒரே நேர்கோட்டில் அமையும்.

ஆகையால், $| z^1 | \cdot | z | = OP^1 \cdot OP = R^2$. ......(i)

$z^1$ன் வீச்சம் = $z$ன் வீச்சம் = $X\hat{O}P$ ......(ii)

(i), (ii)லிருந்து,

$$z^1 = \frac{R^2}{| z |} \left\{ \cos X\hat{O}P + i \sin X\hat{O}P \right\}$$

$$= \frac{R^2}{OP} \cdot \left\{ \cos X\hat{O}P + i \sin X\hat{O}P \right\} \times \frac{\{ \cos X\hat{O}P - i \sin X\hat{O}P \}}{\{ \cos X\hat{O}P - i \sin X\hat{O}P \}}$$

$$= \frac{R^2}{OP \{ \cos X\hat{O}P - i \sin X\hat{O}P \}}$$

$$= \frac{R^2}{\bar{z}} \left\{ \bar{z} \text{ என்பது } z\text{ன் இணைச் சிக்கலெண்} \right\}$$

(படம் 32ல் $z$ஐக் குறிக்கும் புள்ளி $\bar{p}$)

5.15.

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1 : $(2+i)(1+i)$ஐ வரை கணித முறையில் கண்டு பிடிக்க.

$P_1$, $P_2$ இரு புள்ளிகள் $1+i$, $2+i$ஐக் குறிக்கட்டும்.

$1+i$ ன் குணகம் = $\sqrt{2}$ ; வீச்சம் = tan = $\frac{\pi}{4}$ (முதல் மதிப்பு)

$2+i$ன் குணகம் = $\sqrt{5}$ ; வீச்சம் = $\tan^{-1}\frac{1}{2} = \theta$ (எனக் கொள்)

$A$ என்னும் புள்ளியை $OA = 1$ என்று இருக்குமாறு $OX$ (மெய்யச்சு) மீது எடு. $OP_1$ மீது $OP_1P$ என்ற முக்கோணத்தை $OAP_2$ என்ற முக்கோணத்திற்கு வடிவொத்ததாக இருக்குமாறு அமை.

ஆகையால் § 5·12ல் கூறியதுபோல்

$$OP = \sqrt{10} \text{ என்றும் } X\hat{O}P = \theta + \frac{\pi}{4}$$

$$= \tan^{-1}\tfrac{1}{2} + \tan^{-1}$$

$$= \tan^{-3} \text{ என்றும் நிரூபிக்கலாம்.}$$

எனவே, $P$ குறிக்கும் சிக்கலெண் $= z$

$$= OP\{\cos X\hat{O}P + i \sin X\hat{O}P\}.$$

$$= \sqrt{10}\left\{\frac{1}{\sqrt{10}} + i.\frac{3}{\sqrt{10}}\right\}$$

$$= 1+3i = (1+i)(2+i)$$

மாதிரி 2. வரைகணித முறைப்படி $\frac{1+i}{1-i} = i$ என நிறுவுக.

$P_1$ என்ற புள்ளி $1+i$ஐயும், $P_2$ என்ற புள்ளி $1-i$ஐயும் குறிக்கட்டும். $A$ என்ற புள்ளியை $OA = 1$ என்று இருக்குமாறு $OX$ மீது எடு. ($A$ என்பது $P_1 P_2$ மையப் புள்ளி என எளிதில் புலப்படும்).



படம் - 33

$1-i$ன் வீச்சம் $= \tan^{-1}(-1) = -\frac{\pi}{4}$.

$1+i$ன் வீச்சம் $= \tan^{-1}1 = \frac{\pi}{4}$.

$OP_1$ மீது $OP_1P$ என்ற முக்கோணத்தை $OP_2A$ என்ற முக்கோணத்திற்கு வடிவொத்ததாக அமை.

$$\therefore \frac{OP_1}{OP} = \frac{OP_2}{OA}. \quad \therefore OP = \frac{OP_1}{OP_2} = \frac{\sqrt{2}}{\sqrt{2}} = 1$$

மேலும் $(z)$ன் வீச்சம் $= A\hat{O}P_1 - A\hat{O}P_2$

$$= \frac{\pi}{4} - \left(\frac{-\pi}{4}\right)$$

$$= \frac{\pi}{2}.$$

எனவே, § 5·13ல் கூறியதுபோல் $P$ என்ற புள்ளி $z\left(=\frac{1+i}{1-i}\right)$ என்ற சிக்கலெண்ணைக் குறிக்கும்.

அதாவது, $OP\left\{\cos\frac{\pi}{2} + i\sin\frac{\pi}{2}\right\}$

$= 1\cdot(i)$ என்ற சிகலெண்ணைக் குறிக்கும்.

மாதிரி 3. வரைகணித முறைப்படி $(1+i)^4 = -4$ என நிறுவுக.

§ 5·12 லிருந்து, வரைகணித முறைப்படி,

$(1+i)^4$ன் வீச்சம் $= 4\ \{(1+i)$ன் வீச்சம்$\}$
$= 4\ \{+\tan^{-1}1\}$
$= 4\cdot\left(\frac{\pi}{4}\right) = \pi$

மேலும், $|(1+i)4| = |1+i|^4 = \{\sqrt{2}\}^4 = 4$

ஆகையால், $(1+i)^4 = 4\ \{\cos\pi + i\sin\pi\}$
$= 4(-1)$
$= -4.$

## அப்பியாசம் 5 (ஆ)

பின்வருவனவற்றின் மதிப்பை வரைகணித முறைப்படி காண்க (1—10)

1. $(1+i)(1+i\sqrt{3})$
2. $(2+3i)(1-i)$
3. $(1+2i)(-1+i)$
4. $(-3+i)(-2+i)$
5. $(-1-i)(-2-3i)$
6. $\dfrac{1-i}{1+i}$
7. $\dfrac{1+2i}{1-3i}$
8. $\dfrac{-1+2i}{-1+3i}$
9. $\dfrac{-10+10i}{1+3i}$
10. $P(z_1)$, $Q(z_2)$, $R(z_3)$ என்று மூன்று புள்ளிகளிருந்தால், $\dfrac{z_3-z_1}{z_2-z}$ன் வீச்சம் (முதல் மதிப்பு) $= \hat{QPR}$ என நிறுவுக.

11. $z_1$, $z_2$, $z_3$ஐக் குறிக்கும் புள்ளிகள், ஆதியை மையக் கோட்டுச் சந்தியாக (Centroid) கொண்ட ஒரு சமபக்க முக்கோணத்தின் உச்சிகளானால், $z_1^2 + z_2^2 + z_3^2 = z_2 z_3 + z_3 z_1 + z_1 z_2$ எனக் காண்க.

[குறிப்பு: $z_1$ன் வீச்சம் $\theta$ எனில், $z_2$ன் வீச்சம் $\theta + \dfrac{2\pi}{3}$, $z_3$ன் வீச்சம் $\theta + 4\pi/3$. ஆகும்.]

12. $a$, $b$ இரு மெய்யான எண்கள், $w = \cos\dfrac{2\pi}{3} + \sin\dfrac{2\pi}{3}$ எனில் $a+b$, $a+bw$, $a+bw^2$ என்ற இம்மூன்று எண்களையும் குறிக்கும் புள்ளிகள் ஒரு சமபக்க முக்கோணத்தின் உச்சிகளாகும் என நிறுவி மேலும், இம்முக்கோணத்தினுடைய சுற்று வட்டத்தின் சமன்பாடு $|z-a| = b$ எனவும் நிறுவுக.

122

அத்தியாயம் VI

# தே மாவரின் தேற்றமும் இருபடிக் காரணிகளும்

6 1. தேமாவரின் தேற்றம். (De Moiures theorem) $n$ என்பது ஒரு விகித முறுகின்ற குறியாய் (Rational index) இருப்பின் $\cos n\theta + i \sin n\theta$ என்பது $(\cos\theta + i\sin\theta)^n$ன் ஒரு மதிப்புக்குச் சமம்.

வகை *I.* ($n$ என்பது ஒரு நேர் முழுவெண்)

$$(\cos\alpha + i\sin\alpha)(\cos\beta + i\sin\beta) = \cos\alpha.\cos\beta$$
$$-\sin\alpha.\sin\beta + i\{\cos\alpha.\sin\beta + \sin\alpha.\cos\beta\}$$
$$(\because\ i^2 = -1)$$
$$= \cos(\alpha+\beta) + i\sin(\alpha+\beta)$$

இம்மாதிரியே,

$$(\cos\alpha + i\sin\alpha)(\cos\beta + i\sin\beta)(\cos r + i\sin r)$$
$$= \{\cos(\alpha+\beta) + i\sin(\alpha+\beta)\}.\ (\cos r + i\sin r)$$
$$= \cos(\alpha+\beta+r) + i\sin(\alpha+\beta+r)$$

எனவே,

$$(\cos\theta_1 + i\sin\theta_1)(\cos\theta_2 + i\sin\theta_2)(\cos\theta_3 + i\sin\theta_3)$$
$$\ldots\ldots\ldots\ (\cos\theta_n + i\sin\theta_n)$$
$$= \cos(\theta_1+\theta_2+\theta_3+\ldots+\theta_n) + i\sin(\theta_1+\theta_2+\theta_3\ldots+\theta_n)$$

$\therefore\ \theta_1 = \theta_2 = \theta_3 = \ldots = \theta_n = \theta$ எனில்.

$$(\cos\theta + i\sin\theta)(\cos\theta + i\sin\theta)(\cos\theta + i\sin\theta)$$
$$\ldots\ldots\ (n \text{ தடவைகள்})$$
$$= \cos(\theta+\theta+\theta+\ldots n \text{ உறுப்புக்கள்}) + i\sin(\theta+\theta+\theta+\ldots n \text{ உறுப்புகள்})$$
$$= \cos n\theta + i\sin n\theta.$$

அல்லது, $\cos n\theta + i\sin n\theta = (\cos + i\sin\theta)^n$.

வகை II. $n$ என்பது ஒரு எதிர் முழுவெண். $(= -m_1\ m$ ஒரு நேர் முழுவெண்.

$$(\cos\theta + i\sin\theta)^n = (\cos\theta + i\sin\theta)^{-m}$$
$$= \frac{1}{(\cos\theta + i\sin\theta)^m}$$

$$= \frac{1}{\cos m\theta + i \sin m\theta} \left[ \text{வகை Iலிருந்து} \right]$$

$$= \frac{\cos m\theta - i \sin m\theta}{(\cos m\theta + i \sin m\theta)(\cos m - i \sin m\theta)}$$

$$= \frac{\cos m\theta - i \sin m\theta}{\cos^2 m\theta + \sin^2 m\theta}$$

$$= \cos m\theta - i \sin m\theta$$

$$= \cos(-m\theta) + i \sin(-m\theta)$$

$$= \cos u\theta + i \sin n\theta \qquad (\because n = -m)$$

வகை III. $n$ என்பது ஒரு பின்னம் ($= p/q$, $p$ என்பது ஒரு நேர் அல்லது எதிர் முழுவெண், $q$ என்பது நேர் முழுவெண். $p, q$ ஒன்றுக்கொன்று பகாவெண்கள் (prime to cahe other))

$$\left\{\cos \frac{\theta}{q} + i \sin \frac{\theta}{q}\right\}^q = \cos\left(q \cdot \frac{\theta}{q}\right) + i \sin\left(q \cdot \frac{\theta}{q}\right)$$

[வகை I லிருந்து]

$$= \cos\theta + i \sin\theta.$$

$\therefore \quad \cos\frac{\theta}{q} + i \sin\frac{\theta}{q}$ என்பது, $(\cos + i \sin\theta)^{1/q}$ ன் ஒரு மதிப்புக்குச் சமம்.

இதை $p$-வது அடுக்குக்கு உயர்த்திஞல்,

$\left\{\cos \frac{\theta}{q} + i \sin \frac{\theta}{q}\right\}^p$ என்பது $(\cos\theta + i \sin\theta)^{p/q}$ ன் ஒரு மதிப்புக்குச் சமம்.

ஆகையால், வகைகள் I, II லிருந்து,

$\cos\frac{p\theta}{q} + i \sin\frac{p8}{q}$ என்பது $(\cos\theta + i \sin\theta)^{p/q}$ ன் ஒரு மதிப்புக்குச் சமம். அல்லது,

$\cos n\theta + i \sin n\theta$ என்பது $(\cos\theta + i \sin\theta)^n$ன் ஒரு மதிப்புக்குச் சமம் ($\therefore \quad n = p/q$)

குறிப்பு (1): $(\cos + i \sin\theta)^{p/q} = \{\cos(\theta + 2K\pi) + i \sin(\theta + 2K\pi)\}^{p/q}$ [$K$ என்பது ஒரு முழு எண்]

$$= \cos\frac{p(\theta + 2K\pi)}{q} + i \sin\frac{p(\theta + 2K\pi)}{q}$$

$K$க்கு $O$, 1, 2,...$(q-1)$ வரையில் மதிப்புக்களிட,

$\cos\frac{p(\theta+2K\pi)}{q}+i\sin\frac{p(\theta+2K\pi)}{q}$.க்கு வெவ்வேறு $q$ மதிப்புக்கள் கிடைக்கும். இப்பொழுது $K$க்கு $q$ என்ற மதிப்பிட்டால்

$$\frac{p(\theta+2K\pi)}{q}=\frac{p(\theta+2q\pi)}{q}=\frac{p\theta}{q}+2p\pi$$

ஆகையால்; $K=q$ எனில்

$$\cos\frac{p(\theta+2K\pi)}{q}+i\sin\frac{p(\theta+2K\pi)}{q}=\cos\left(\frac{p\theta}{p}+2p\pi\right)\\+i\sin\left(\frac{p\theta}{q}+2p\pi\right)$$

$$=\cos\frac{p\theta}{q}+i\sin\frac{p\theta}{q}$$

எனவே, $K=0$ அல்லது $K=q$ எனில் $\cos\frac{p(\theta+2K\pi)}{q}$ $i\sin\frac{p(\theta+2K\pi)}{q}$க்கு ஒத்த இரு மதிப்புக்களும் சமமாகும்.

இம்மாதிரியே, $K=1$ அல்லது $K=q+1$ எனில் $\cos\frac{p(\theta+2K\pi)}{q}$ $+i\sin\frac{p(\theta+2K\pi)}{q}$க்கு ஒத்த இரு மதிப்புக்களும் சமமாகும்.

ஆகையால் $(\cos\theta+i\sin\theta)^{p/q}$ க்கு $q$ மதிப்புக்கள் தான் உண்டு. இம் மதிப்புக்களில் ஒரு மதிப்புத்தான் $\cos\frac{pq}{q}+i\sin\frac{p\theta}{q}$.

குறிப்பு (2): $(\cos\theta-i\sin\theta)^n$ன் ஒரு மதிப்பு $\cos n\theta-i\sin n\theta$

குறிப்பு (3): $(\sin\theta+i\cos\theta)^n$ன் ஒரு மதிப்பு அல்லது,

$(\cos\phi+i\sin\phi)^n$ன் ஒரு மதிப்பு $\left(\phi=\frac{\pi}{2}-\theta\right)$

$=\cos n\phi+i\sin n\phi.$

$=\cos n\left(\frac{\pi}{2}-\theta\right)+i\sin n\left(\frac{\pi}{2}-\theta\right).$

இம்மாதிரியே $(\sin\theta-i\cos\theta)^n$

$$=\cos n\left(\frac{\pi}{2}-\theta\right)-i\sin n\left(\frac{\pi}{2}-\theta\right)$$

6·2.

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1. $2\cos\theta = x + \frac{1}{x}$ எனில் $2\cos r\theta = x^r + \frac{1}{x^r}$ எனக் காண்க.

($r$ என்பது ஒரு முழுவெண்)

$$x + \frac{1}{x} = 2\cos\theta$$

அல்லது, $x^2 + 1 = 2x\cos\theta$

$$x^2 - 2x\cos\theta + 1 = 0.$$

$$x = \frac{2\cos\theta \pm \sqrt{4\cos^2\theta - 4}}{2}$$

$$= \cos\theta \pm \sqrt{-\sin^2\theta}$$

$$= \cos\theta \pm i\sin\theta.$$

$x = \cos\theta + i\sin\theta$ எனில் $\frac{1}{x} = \cos\theta - i\sin\theta.$

$x = \cos\theta - i\sin\theta$ எனில் $\frac{1}{x} = \cos\theta + i\sin\theta.$ $\Bigg\}$ $(A)$

$\therefore\ x^r + \frac{1}{x^r} = (\cos\theta + i\sin\theta)^r + (\cos\theta - i\sin\theta)^r$

( $(A)$யிலிருந்து)

$$= \cos r\theta + i\sin r\theta + \cos r\theta - i\sin r\theta$$

($\because$ $r$ ஒரு முழுவெண்)

$$= 2\cos r\theta.$$

மாதிரி 2. $x + \frac{1}{x} = 2\cos a;\ y + \frac{1}{y} = 2\cos b;\ z + \frac{1}{z} = 2\cos c$ எனில் $x^p.y^q.z^r + \frac{1}{x^p.y^q.z^r}$ ன் ஒரு மதிப்பு $= 2\cos(pa + qb + rc)$ என நிறுவுக. ($p, q, r$ விகித முறுகின்ற குறிகள்)

$x + \frac{1}{x} = 2\cos a$யிலிருந்து,

$x = \cos a \pm i\sin a$ எனக் கிடைக்கும் [மாதிரி 1.]

இம்மாதிரியே

$$y = \cos b \pm i\sin b,$$

$$z = \cos c \pm i\sin c.$$

$x = \cos a + i \sin a$ என்றும்

$y = \cos b + i \sin b$ என்றும்

$z = \cos c + i \sin c$ என்றும் எடுத்துக்கொண்டால்

$\frac{1}{x} = \cos a - i \sin a$ என்றும்

$\frac{1}{y} = \cos b - i \sin b$ என்றும்

$\frac{1}{z} = \cos c - i \sin c$ என்றும் கிடைக்கும்.

ஆகையால் $x^p.y^q.z^r + \frac{1}{x^p y^q z^r}$ ன் ஒரு மதிப்பு

$= (\cos pa + i \sin pa)(\cos qb + i \sin qb)(\cos rc + i \sin rc)$

$+ (\cos pa - i \sin pa)(\cos qb - i \sin qb)(\cos rc - i \sin rc)$

$= \cos (pa + qb + rc) + i \sin (pa + qb + rc)$

$+ \cos (pa + qb + rc) - i \sin (pa + qb + rc)$

$= 2 \cos (pa + qb + rc)$.

மாதிரி 3. $\cos \alpha + \cos \beta + \cos r = 0$; $\sin \alpha + \sin \beta + \sin r = 0$ எனில் $\cos 3\alpha + \cos 3\beta + \cos 3r = 3 \cos (\alpha + \beta + r)$ என்றும் $\sin 3\alpha + \sin 3\beta + \sin 3r = 3 \sin (\alpha + \beta + r)$ என்றும் நிறுவுக.

$a = \cos \alpha + i \sin \alpha$,

$b = \cos \beta + i \sin \beta$,

$c = \cos r + i \sin r$ எனக் கொண்டால்,

$a + b + c = (\cos \alpha + \cos \beta + \cos r) + i(\sin \alpha + \sin \beta + \sin r)$

$= 0$.

ஆகையால், $a^3 + b^3 + c^3 = 3abc$

அதாவது, $(\cos \alpha + i \sin \alpha)^3 + (\cos \beta + i \sin \beta)^3 + (\cos r + i \sin r)^3$

$= 3 (\cos \alpha + i \sin \alpha)(\cos \beta + i \sin \beta)(\cos r + i \sin r)$

அல்லது, $\Sigma (\cos 3\alpha + i \sin 3\alpha) = 3 \{ \cos (\alpha + \beta + r) + i \sin (\alpha + \beta + r) \}$

$\therefore \cos 3\alpha + \cos 3\beta + \cos 3r = 3 \cos (\alpha + \beta + r)$

$\sin 3\alpha + \sin 3\beta + \sin 3r = 3 \sin (\alpha + \beta + r)$

(§. 5. 10)

மாதிரி 4. $\cos \alpha + \cos \beta + \cos r = O$; $\sin \alpha + \sin \beta + \sin r = O$ எனில் $\cos^2 \alpha + \cos^2 \beta + \cos^2 r = \frac{3}{2}$ என்றும் $\sin^2 \alpha + \sin^2 \beta + \sin^2 r = \frac{3}{2}$ என்றும் நிறுவுக.

$$a = \cos\alpha + i\sin\alpha,$$
$$b = \cos\beta + i\sin\beta,$$
$$c = \cos r + i\sin r$$ எனில்

$$a+b+c = O.$$

ஆகையால், $a^2+b^2+c^2 = -2(ab+bc+ca)$

அதாவது, $\Sigma(\cos 2\alpha + i\sin 2\alpha)$

$$= -2\,\Sigma\,(\cos\alpha + i\sin\alpha)(\cos\beta + i\sin\beta)$$
$$= -2\,\Sigma\,\{\cos(\alpha+\beta) + i\sin(\alpha+\beta)\}$$

$$\therefore\quad \cos 2\alpha + \cos 2\beta + \cos 2r$$
$$= -2\,\{\cos(\alpha+\beta) + \cos(\beta+r) + \cos(r+\alpha)\} \quad \ldots\ldots\ldots\ldots (1)$$

$$\begin{cases}\cos\alpha + \cos\alpha + \cos r = 0\\ \sin\alpha + \sin\beta + \sin r = 0\end{cases}$$ (கொள்கை)

இவ்விரு சமன்பாடுகளிலிருந்து

$$(\cos\alpha + \cos\beta)^2 + (\sin\alpha + \sin\beta)^2 = \cos^2 r + \sin^2 r = 1.$$

அல்லது, $\cos^2\alpha + \sin^2\alpha + \cos^2\beta + \sin^2\beta + 2(\cos\alpha + \cos\beta + \sin\alpha\ \sin\beta) = 1$

$$\therefore\quad 2\cos(\alpha-\beta) = -1$$

இம்மாதிரியே,

$$2\cos(\beta-r) = -1$$
$$2\cos(r-\alpha) = -1 \quad \ldots\ldots\ldots\ldots (2)$$

(1), (2)லிருந்து,

$$\cos 2\alpha + \cos 2\beta + \cos 2r = -2\cos(\alpha+\beta) - 2\cos(\beta+r) - 2\cos(r+\alpha)$$

$$= 2\{2\cos(\alpha-\beta)\}\cos(\alpha+\beta) + 2\{2\cos(\beta-r)\}\cos(\beta+r) + 2\{2\cos(r-\alpha)\}\cos(r+\alpha)$$

$$= 2\{\cos 2\alpha + \cos 2\beta\} + 2\{\cos 2\beta + \cos 2r\} + 2\{\cos 2r + 2\cos 2\alpha\}$$

$$= 4\,\Sigma\cos 2\alpha$$

எனவே, $\Sigma\cos 2\alpha = 4\,\Sigma\cos 2\alpha.$

$$\therefore\quad \Sigma\cos 2\alpha = 0.$$
$$\Sigma(2\cos^2\alpha - 1) = 0.$$
$$2\,\Sigma\cos^2\alpha - 3 = 0.$$
$$\Sigma\cos^2\alpha = \tfrac{3}{2}.$$

மேலும், $\Sigma\sin^2\alpha = \Sigma(1-\cos^2\alpha)$

$$= 3 - \Sigma \cos^2 \alpha$$
$$= 3 - \tfrac{3}{2}$$
$$= \tfrac{3}{2}.$$

மாதிரி 5. $\left\{\dfrac{1 - \cos\dfrac{\pi}{n} + i\sin\dfrac{\pi}{n}}{1 - \cos\dfrac{\pi}{n} + i\sin\dfrac{\pi}{n}}\right\}^n = 1$ எனக் காண்பி.

($n$ ஒரு ஒற்றை முழுவெண்)

$$1 - \cos\frac{\pi}{n} + i\sin\frac{\pi}{n} = 2\sin^2\frac{\pi}{2n} + 2i\sin\frac{\pi}{2n}.\ \cos\frac{\pi}{2n}$$
$$= 2\sin\frac{\pi}{2n}.\left\{\sin\frac{\pi}{2n} + i\cos\frac{\pi}{2n}\right\}$$

$$1 - \cos\frac{\pi}{n} - i\sin\frac{\pi}{n} = 2\sin\frac{\pi}{2n}\left\{\sin\frac{\pi}{2n} - i\cos\frac{\pi}{2n}\right\}$$

$$\therefore \left\{\frac{1 - \cos\frac{\pi}{n} + i\sin\frac{\pi}{n}}{1 - \cos\frac{\pi}{n} - i\sin\frac{\pi}{n}}\right\}^n = \left\{\frac{\sin\frac{\pi}{2n} + i\cos\frac{\pi}{2n}}{\sin\frac{\pi}{2n} - i\cos\frac{\pi}{2n}}\right\}^n$$
$$= \left(\sin\frac{\pi}{2n} + i\cos\frac{\pi}{2n}\right)^{2n}$$
$$= \left\{\cos\left(\frac{\pi}{2} - \frac{\pi}{2n}\right) + i\sin\left(\frac{\pi}{2} - \frac{\pi}{2n}\right)\right\}^{2n}$$
$$= \cos 2n\left(\frac{\pi}{2} - \frac{\pi}{2n}\right) + i\sin 2n\left(\frac{\pi}{2} - \frac{\pi}{2n}\right)$$
(§ 6·1)
$$= \cos(n\pi - \pi) + i\sin(n\pi - \pi)$$
$$= \cos(\pi - n\pi) - i\sin(\pi - n\pi)$$
$$= -\cos n\pi - i\sin n\pi$$
$$= -(-1)^n - i\cdot(0)$$
$$= 1$$ ($\because$ $n$ ஒரு ஒற்றை முழுவெண்)

6·3. இப்பொழுது $\pm 1$ன் $n$—வது மூலங்களைக் கண்டுபிடிப்போம் முதலில் $+1$ன் $n$-வது மூலங்களைக் கண்டுபிடிக்க. ($n$th roots of unity), $x$ன் மதிப்புக்களை $x = \sqrt[n]{1}$ என்ற சமன்பாட்டிற்கு ஏற்றவாறு கண்டுபிடித்தல்வேண்டும். அதாவது, $x^n = 1$ என்ற சமன்பாட்டைத் தீர்க்கவேண்டும்.

$$x^n = 1 = \cos 0 + i \sin 0$$
$$= \cos (0+2K\pi)+i \sin (0+2K\pi)$$
$$= \cos 2K\pi + i \sin 2K\pi$$
$$\therefore \quad x = (\cos 2K\pi + i \sin 2K\pi)^{1/n}$$
$$= \cos \frac{2K\pi}{n} + i \sin \frac{2K\pi}{n} \qquad \text{.........(i)}$$

$K = 0, 1, 2, ...(n-1)$ என (i)ல் பிரதியிட்டால், $x$க்கு $n$ வெவ்வேறு மதிப்புக்கள் கிடைக்கும்.

அவைகளாவன, $\cos 0 + i \sin 0 \ (= 1)$ (முதல் மதிப்பு)

$\cos \frac{2\pi}{n} + i \sin \frac{2\pi}{n}$ (2-வது மதிப்பு)

$\cos \frac{4\pi}{n} + i \sin \frac{4\pi}{n}$ (3-வது மதிப்பு)

.........................

$\cos \frac{2(n-1)\pi}{2} + i \sin \frac{2(n-1)\pi}{n}$ ($n$-வது மதிப்பு)

இந்த $n$ மதிப்புக்களும் $+1$ன் $n$-வது மூலங்களாகும்.

இப்பொழுது $-1$ன் $n$வது மூலங்களைக் கண்டுபிடிக்க $x^n = 1$ என்று எடுத்துக்கொள்ளவேண்டும்.

$$x^n = -1 = \cos \pi + i \sin \pi$$
$$= \cos (\pi + 2K\pi) + i \sin (\pi + 2K\pi)$$
$$= \cos [(2K+1)\pi)] + i \sin [(2K+1)\pi]$$
$$x = \{ \cos [(2K+1)\pi] + i \sin [(2K+1)\pi] \}^{1/n}$$
$$= \cos \left[\frac{(2K+1)\pi}{n}\right] + i \sin \left[\frac{(2K+1)\pi}{n}\right] \qquad \text{.........(ii)}$$

$K = 0, 1, 2, 3, ... (n-1)$ என (ii)ல் பிரதியிட.

$x = \cos \frac{\pi}{n} + i \sin \frac{\pi}{n}$ (முதல் மதிப்பு)

$x = \cos \frac{3\pi}{n} + i \sin \frac{3\pi}{n}$ (2-வது மதிப்பு)

$x = \cos \frac{5\pi}{n} + i \sin \frac{5\pi}{n}$ (3-வது மதிப்பு)

$x = \cos \frac{(2n-1)\pi}{n} + i \sin \frac{(2n-1)\pi}{n}$ ($n$-வது மதிப்பு)

இந்த $n$ மதிப்புக்களும் $-1$ன் $x$-வது மூலங்கள்.

6 4 $+1$ன் $n$-வது மூலங்களின் கூட்டுத் தொகை பூச்சியம் என நிரூபிப்போம்.

$n$ மூலங்களின் கூட்டுத் தொகை

$$= \cos 0 + \cos\frac{2\pi}{n} + \cos\frac{4\pi}{n} + \ldots + \cos\frac{2(n-1)\pi}{n}$$

$$+ i\left\{\sin 0 + \sin\frac{2\pi}{n} + \sin\frac{4\pi}{n} + \ldots + \sin\frac{2(n-1)\pi}{n}\right\}$$

$$= \frac{\cos\left\{0 + (n-1)\frac{\pi}{n}\right\} \cdot \sin n.\frac{\pi}{n}}{\sin\frac{\pi}{n}} \qquad (\S\ 3\cdot 23)$$

$$+ i\,\frac{\sin\{O + (n-1)\pi/n\} \cdot \sin n.\pi/n}{\sin \pi/n} \qquad (\S\ 3\cdot 22)$$

$$= \left\{\cos\frac{(n-1)\pi}{n} + i\sin\frac{(n-1)\pi}{n}\right\} \cdot \frac{\sin\pi}{\sin/\pi n}$$

$$= O \qquad (\because \sin\pi = O)$$

6·5. இப்பொழுது, $+1$ன் $n$-வது மூலங்கள் ஒரு பெருக்கல் விருத்தியில் (Geometric Progression) அமையும் என நிரூபிப் போம்.

§ 6·3யிலிருந்து $x$ன் $(r+1)$-வது மதிப்பு

$$= \cos\frac{2r\pi}{n} + i\sin\frac{2r\pi}{n}. \qquad \ldots\ldots\ldots (a)$$

$x$ன் $r$-வது மதிப்பு

$$= \cos\frac{2(r-1)}{n} + i\sin\frac{r-1)\pi}{n} \qquad \ldots\ldots\ldots (b)$$

$(a)$ஐ $(b)$ ஆல் வகுக்க.

$$\frac{x\text{-ன் } (r+1)\text{-வது மதிப்பு}}{x\text{ன் } r\text{-வது மதிப்பு}} = \frac{\cos\frac{2r\pi}{n} + i\sin\frac{2r\pi}{n}}{\cos\frac{2(r-1)\pi}{n} + i\sin\frac{2(r-1)\pi}{n}}$$

$$= \frac{\left(\cos\frac{2r\pi}{n} + i\sin\frac{2r\pi}{n}\right)\left(\cos\frac{2\pi}{n} + i\sin\frac{2\pi}{n}\right)}{\left(\cos\frac{2(r-1)\pi}{n} + i\sin\frac{2(r-1)\pi}{n}\right)\left(\cos\frac{2\pi}{n} + i\sin\frac{2\pi}{n}\right)}$$

$$=\frac{\left(\cos\frac{2r\pi}{n}+i\sin\frac{2r\pi}{n}\right)\left(\cos\frac{2\pi}{n}+i\sin\frac{2\pi}{n}\right)}{\left(\cos\frac{2r\pi}{n}+i\sin\frac{2r\pi}{n}\right)}$$

$$=\cos\frac{2\pi}{n}+i\sin\frac{2\pi}{n}$$

= ஒரு நிலை எண். ($r$ஐச் சாராதது)

எனவே, $+1$ன் $n$-வது மூலங்கள் ஒரு பெ.வி. (G.P.)யில் அமைகின்றன. இந்த பெ.வி யின் பொது விகிதம் (common ratio) $=\left(\cos\frac{2\pi}{n}+i\sin\frac{2\pi}{n}\right)$

6 6. இப்பொழுது, $+1$ன் $n$-வது மூலங்களின் தொடர் பெருக்கற் பலனைக் (continued product) கண்டுபிடிப்போம்.

§ 6 3யிலிருந்து, $+1$ன் $n$-வது மூலங்களின் மதிப்புக்கள் கிடைக்கின்றன. அவைகளின் தொடர் பெருக்கற் பலன்

$$=(\cos 0+i\sin 0)\times\left(\cos\frac{2\pi}{n}+i\sin\frac{2\pi}{n}\right)\left(\cos\frac{4\pi}{n}+i\sin\frac{4\pi}{n}\right)$$

$$\ldots\ldots\times\left(\cos\frac{2(n-1)\pi}{n}+i\sin\frac{2(n-1)\pi}{n}\right)$$

$$=\cos\left\{0+\frac{2\pi}{n}+\frac{4\pi}{n}+\ldots\ldots+\frac{2(n-1)\pi}{n}\right\}$$

$$+i\sin\left\{0+\frac{2\pi}{n}+\frac{4\pi}{n}+\ldots\ldots+\frac{2(n-1)\pi}{n}\right\}$$

$$=\cos\left\{\frac{n}{2}\left[\frac{2(n-1)\pi}{n}\right]\right\}$$

$$+i\sin\left\{\frac{n}{2}\left[\frac{2(n-1)\pi}{n}\right]\right\}$$

$$=\cos(n-1)\pi+i\sin(n-1)\pi$$

$$=\cos(\pi-n\pi)-i\sin(\pi-n\pi)$$

$$=-\cos n\pi-i\sin n\pi$$

$$=(-1)^n\quad(\because\ \cos n\pi=(-1)^n,\ \sin n\pi=0)$$

$$=(-1)^{n+1}$$

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1. $\alpha, \beta$ இரண்டும் $x^2-2x+2=0$ன் மூலகங்களெனில் $\alpha^n+\beta^n=2^{\frac{n+2}{n}}\cdot\cos\frac{n\pi}{n}$ என நிரூபி. ($n$ ஒரு நேர் முழுவெண்)

$$x^2-2x+2=0$$

$$x=\frac{2\pm\sqrt{4-8}}{2}$$

$$=1\pm i$$

$\alpha=1+i$ எனில், $\beta=1-i$

அல்லது $\alpha=\sqrt{2}\left\{\frac{1}{\sqrt{2}}+\frac{i}{\sqrt{2}}\right\}$ ; $\beta=\sqrt{2}\left\{\frac{1}{\sqrt{2}}-\frac{i}{\sqrt{2}}\right\}$ (§ 5·5)

$$\therefore \quad \alpha=\sqrt{2}\left\{\cos\frac{\pi}{4}+i\sin\frac{\pi}{4}\right\};$$

$$\beta=\sqrt{2}\left\{\cos\frac{\pi}{4}-i\sin\frac{\pi}{4}\right\}$$

$$\alpha^n+\beta^n=\left[\sqrt{2}\left\{\cos\frac{\pi}{4}+i\sin\frac{\pi}{4}\right\}\right]^n+\left[\sqrt{2}\left\{\cos\frac{\pi}{4}-\sin\frac{\pi}{4}\right\}\right]^n$$

$$=2^{n/2}\cdot\left\{\cos\frac{n\pi}{4}+i\sin\frac{n\pi}{4}\right\}+2^{n/2}\left\{\cos\frac{n\pi}{4}-i\sin\frac{n\pi}{4}\right\}$$

$$=2^{n/2}\cdot\left\{2\cos\frac{n\pi}{4}\right\}$$

$$=2^{\frac{n+2}{2}}\cos\frac{n\pi}{4}.$$

மாதிரி 2. $(\sqrt{3}-i)^{\frac{1}{7}}$ன் மதிப்புக்களைக் கண்டுபிடித்து அவற்றை ஆர்கண் வரைபடத்தில் குறிக்க.

$$\sqrt{3}-i=\sqrt{(\sqrt{3})^2+(-1)^2}\cdot\left\{\frac{\sqrt{3}}{\sqrt{(\sqrt{3})^2+(-1)^2}}-\frac{i}{\sqrt{(\sqrt{3})^2+(-1)^2}}\right\}$$

$$= 2 \cdot \left\{ \frac{\sqrt{3}}{2} - \frac{i}{2} \right\}$$ (§ 5·5)

$$= 2 \cdot \left\{ \cos \frac{\pi}{6} - i \sin \frac{\pi}{6} \right\}$$

$$= 2 \left\{ \cos \left( \frac{\pi}{6} + 2n\pi \right) - i \sin \left( \frac{\pi}{6} + 2n\pi \right) \right\}$$

$(\sqrt{3} - i)^{\frac{1}{7}}$

$$= \left[ 2 \left\{ \cos \left( \frac{\pi}{6} + 2n\pi \right) - i \sin \left( \frac{\pi}{6} + 2n\pi \right) \right\} \right]^{\frac{1}{7}}$$

$$= 2^{\frac{1}{7}} \left\{ \cos \frac{(12n+1)\pi}{42} - i \sin \frac{(12n+1)\pi}{42} \right\}$$ (§ 6·1)

$n = 0, 1, 2, \ldots 6$ எனப் பிரதியிட,

$\therefore$ $(\sqrt{3} - i)^{\frac{1}{7}}$ன் ஏழு மதிப்புக்களும் முறையே

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{\pi}{42} - i \sin \frac{\pi}{42} \right\};$$

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{13\pi}{42} - i \sin \frac{13\pi}{42} \right\};$$

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{25\pi}{42} - i \sin \frac{25\pi}{42} \right\};$$

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{37\pi}{42} - i \sin \frac{\pi 37}{42} \right\};$$

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{49\pi}{42} = i \sin \frac{49\pi}{42} \right\};$$

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{61\pi}{42} - i \sin \frac{61\pi}{42} \right\};$$

$$2^{\frac{1}{7}} \cdot \left\{ \cos \frac{73\pi}{42} - i \sin \frac{73\pi}{42} \right\}.$$

இவ்வேழு மதிப்புகளுக்கும் குணகம் $^{\frac{1}{7}}$ ஆகையால், ஆர்கண் வரைபடத்தில் ஆதியை மையமாக வைத்து, ஆரம் $= 2^{\frac{1}{7}}$ என்ற வட்டத்தை வரை.

$A_1, A_2, A_7 \ldots\ldots$ என்ற புள்ளிகள் மேற்கூறிய மதிப்புகளைக் குறித்தால், அவைகள் வட்டத்தின் மீது அமையும்.

மேலும் முதல் மதிப்பின் வீச்சம் $= -\dfrac{\pi}{42}$.




படம் - 34

ஆகையால், $A_1$ என்ற புள்ளியை $X\hat{O}A_1 = -\pi/42$ என்று இருக்குமாறு எடுக்கவேண்டும். இம்மாதிரியே, $A_2, A_3\ A_7$ என்ற புள்ளிகளை $A_1\hat{O}A_2 = A_2\hat{O}A_3 = \ldots = A_6\hat{O}A_7 = -\dfrac{12\pi}{42}$ என்று இருக்குமாறு எடுத்தால் புள்ளிகள் $A_1 A_2 \ldots\ldots, A_7$ மேற்கூறிய மதிப்புக்களை ஆர்கண் வரைபடத்தில் குறிக்கும். [படம் 34]

மாதிரி 3. தீர் : $x^{15} + x^8 + x^7 + 1 = 0.$

$$x^{15} + x^8 + x^7 + 1 = x^8(x^7 + 1) + 1(x^7 + 1)$$

$$= (x^8 + 1)(x^7 + 1) = O$$

$$\therefore \quad x^8 + 1 = 0 \quad \ldots\ldots(\text{i})$$

$$x^7 + 1 = 0. \quad \ldots\ldots(\text{ii})$$

என்ற இரு சமன்பாடுகளையும் தீர்க்க வேண்டும்.

(i)லிருந்து, $x^8 = -1 - \cos\pi \pm i \sin\pi$

$$= \cos(2K+1)\pi \pm i \sin(2K+1)\pi$$

$$\therefore \quad x = \cos\left\{\frac{(2K+1)\pi}{8}\right\} \pm i \sin \left\{\frac{(2K+1)\pi}{8}\right\} \quad \ldots\ldots(\text{iii})$$

$K = O,\ 1, 2, 3$ என (iii)ல் பிரதியிட்டால்

xக்கு 4 சோடி (அதாவது 8) மதிப்புக்கள் கிடைக்கும்.

$x^7 + 1 = 0$ எனில்

$$x^7 = -1 = \cos\pi \pm i\sin\pi$$
$$= \cos(2K+1)\pi \pm i\sin(2K+1)\pi$$
$$\therefore\quad x = \cos\left\{\frac{(2K+1)\pi}{7}\right\} \pm i\sin\left\{\frac{(2K+1)\pi}{7}\right\} \qquad \text{(iv)}$$

$K = 0, 1, 2,$ என (iv)ல் பிரதியிட்டால்

$x$க்கு 3 சோடி (அதாவது 6) மதிப்புக்கள் கிடைக்கும்.

இப்பொழுது, $K = 3$ என்று பிரதியிட

$$x = \cos\pi \pm i\sin\pi$$
$$= -1 \pm O$$

$= -1$ என்ற ஒரு மதிப்புத்தான் கிடைக்கும்.

எனவே, $x = -1$

$$x = \cos\left\{\frac{(2K+1)\pi}{7}\right\} \pm i\sin\left\{\frac{(2K+1)\pi}{7}\right\} \quad \text{...(v)}$$
$$(K = 0;\ 1,\ 2)$$

என்ற 7 மதிப்புக்கள் கிடைக்கின்றன.

(iii); (v)லிருந்து, $x$க்கு 15 மதிப்புக்கள் கிடைக்கின்றன.

**6·8.** $n$ ஒரு நேர் முழுவெண் எனில், $x^{2n} - 2x^n a^n \cos n\theta + a^{2n}$ஐ மெய்யான இருபடிக்காரணிகளாகப் பிரிக்க.

$x^{2n} - 2x^n a^n \cos n\theta + a^{2n} = 0$ எனக்கொள் ......(A)

$$\therefore\quad x^n = \frac{2a^n\cos n\theta \pm \sqrt{4a^{2n}\cos^2 n\theta - 4a^{2n}}}{2}$$
$$= a^n(\cos n\theta \pm ia^n \sin n\theta.$$
$$= a^n(\cos n\theta \pm i\sin n\theta)$$
$$= a^n.\{\cos(2K\pi + n\theta) \pm i\sin(2K\pi + n\theta)\}$$
$$\therefore\quad x = a.\{\cos(2K\pi + n\theta) \pm i\sin(2K\pi + n\theta)\}^{1/n}$$
$$= a.\left\{\cos\left(\frac{2K\pi + n\theta}{n}\right) \pm i\sin\left(\frac{2K\pi + n\theta}{n}\right)\right\}$$
$$x = a\left\{\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) \pm i\sin\left(\theta + \frac{2K\pi}{n}\right)\right\} \quad \text{...(B)}$$

சமன்பாடு (A)யிலிருந்து $x$க்கு $2n$ மதிப்புக்கள் கிடைக்கும் ஆகையால். $K = O, 1, 2, \ldots (n-1)$ என்று $(B)$ல் பிரதியிட்டால் $x$க்கு $n$ சோடி மதிப்புக்கள் (அதாவது $2n$ வெவ்வேறு மதிப்புக்கள்) கிடைக்கும்.

எனவே,

$$\left\{x - a\left[\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + i\sin\left(\theta + \frac{2K\pi}{n}\right)\right]\right\}.$$

$$\left\{x-a\left[\cos\left(\theta+\frac{2K\pi}{n}\right)-i\sin\left(\theta+\frac{2K\pi}{n}\right)\right]\right\}$$

$(K=0, 1, 2, \ldots (n-1))$ $x^{2n}-2x^na^n\cos n\theta+a^{2n}$ன் காரணிகள்,

ஆனால்,

$$\left\{x-a\cos\left(\theta+\frac{2K\pi}{n}\right)-ai\sin\left(\theta+\frac{2K\pi}{n}\right)\right\}$$

$$\left\{x-a\cos\left(\theta+\frac{2K\pi}{n}\right)+ai\sin\theta+\frac{2K\pi}{n}\right\}$$

$$=\left\{x-a\cos\left(\theta+\frac{2K\pi}{n}\right)\right\}^2+a^2\sin^2\left(\theta+\frac{2K\pi}{n}\right)$$

$(\therefore\ i^2=-1)$

$$=x^2-2xa\cos\left(\theta+\frac{2K\pi}{n}\right)+a^2. \qquad \ldots\ldots (C)$$

இந்த, மெய்யான இரு படிக்கோவையானது, $x2^n\ 2x^na^n\cos n\theta+a^{2n}$ன் மெய்யான இருபடிக் காரணியாகும்.

$K=0, 1, 2, \ldots (n-1)$ என்று $(C)$ல் பிரதியிட.

$x^{2n}2x^na^n\cos n\theta+a^{2w}$

$$\equiv\lambda\left\{x^2-2xa\cos\theta+a^2\right\}\cdot\left\{x^2-2xa\cos\left(\theta+\frac{2\pi}{n}\right)+a^2\right\}$$

$$\times\ldots\ldots\left\{x^2-2xa\cos\left(\theta+\frac{2(n-1)\pi}{n}\right)+a^2\right\}$$

($\lambda$ என்பது ஒரு நிலையான எண்)

$x^{2n}$ன் குணகத்தின் இரு பக்கமும் சமன்படுத்த, $\lambda=1$ என கிடைக்கிறது.

ஆகையால்,

$$x^{2n}-2x^na^n\cos n\theta+a^{2n}=\prod_{K=0}^{n-1}\left\{x^2-2ax\cos\left(\theta+\frac{2K\pi}{n}\right)+a^2\right\}$$

($\prod$ என்பது, தொடர் பெருக்கற்குறி)

6·9. மேற்கூறிய காரணிகள் சூத்திரத்தை வரைபடம் மூலம் இப்பொழுது விவரிப்போம்.

$O$ ஐ மையமாகவும் '$a$' என்பதை ஆரமாகவும் கொண்ட வட்டத்தை வரை. $P$ என்னும் புள்ளியை $OP = x$ என்று இருக்குமாறு எடு. $x>a$ ஆனால், $P$ வட்டத்திற்கு வெளியேயும், $x<a$ எனில் $P$ வட்டத்திற்கு உள்ளேயும் அமையும். $A_1$ என்னும் புள்ளியை $P\hat{O}A_1 = \theta$ வாக இருக்குமாறு வட்டத்தின் பரிதியில் எடுத்துக்கொள்.

$A_1$ஐ முதல் உச்சியாகக் கொண்ட $n$ பக்கமுள்ள ஒரு ஒழுங்கு பல்கோணம் $A_1\ A_2\ A_3 \ldots A_n$ஐ வட்டத்தின் பரிதியில் அமையுமாறு எடு.

$P\hat{O}A_1 = \theta$ (கொள்கை)

$\therefore\ P\hat{O}A_2 = P\hat{O}A_1 + A_1\hat{O}A_2 = \theta + 2\pi/n$ (§ 4·2)

$P\hat{O}A_3 = P\hat{O}A_2 + A_2\hat{O}A_3 = \theta + 2\pi/n + 2\pi/n = \theta + 4\pi/n.$

..... .........



படம்-35

$$P\hat{O}A^n = \theta + \frac{2(n-1)\pi}{n}.$$

$\triangle\ P\hat{O}A_1$லிருந்து,

$$PA_1{}^2 = OP^2 + OA_1{}^2 - 2OP\ OA_1 \cos\theta$$
$$= n^2 + a^2 - 2\,xa \cos\theta$$

இம்மாதிரியே, $PA_2{}^2 = x^2 + a^2 - 2xa\ \cos(\theta + 2\pi/n)$ ($\triangle POA_2$லிருந்து)

..............................

$$PA^2{}_n = x^2 + a^2 - 2xa \cos\left(\theta + \frac{2(n-1)\pi}{n}\right) \quad (\triangle POAn\text{லிருந்து})$$

ஆகையால்,

$$PA_1{}^2 .\ PA_2{}^2 .\ PA^2{}_3 \ldots PA^2 n = \overset{n-1}{\underset{K=O}{a\pi}} \left\{ x^2 - 2ax \cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2 \right\}$$

$$= x^{2n} - 2x^n a_n \cos(n\theta) + a^{2n}$$

இதற்குத் தேமாரின் வட்டப்பண்பு எனப் பெயர்.

(De Moivre's Property of the eirele)

6·10. §6·9-ல் எடுத்துக்கொண்ட $P$ என்பது $OA_1$ன் மீது அமைந்தால் $\theta - O$ ஆகும். எனவே, இப்பொழுது $OP = x$ எனில்

$$PA_1^2 \cdot PA_2^2 \cdot PA_3^2 \ldots PA_n^2 = x^{2n} - 2x^n a^n \cos(0) + a^{2n}$$
$$= x^{2n} - 2x^n a^n + a^{2n}$$
$$= (x^n - a^n)^2 \ldots \text{(i)}$$




படம்-36

இரு பக்கமும் வர்க்க மூலம் எடுக்க.

$PA_1\ PA_2\ PA_3 \ldots PA_n$

$= a^n - x^n \quad (x > a)$, அல்லது

$= x^n - a^n \quad (x > a)$ ...... (ii)

வட்ட விற்கள் $A_1 A_2$, $A_2 A_3, \ldots\ldots A_n A_1$ன் மையப்புள்ளிகள் முறையே $B_1, B_2, \ldots\ B_n$ எனில்,

$A_1 \hat{O} B_1 = \frac{1}{2}(2\pi/n) = \pi/n.$

$B_1 \hat{O} A_2 = \pi/n$

$A_2 \hat{O} B_2 = \pi/n$

$B_n \hat{O} A_1 = \pi/n$

ஆகையால், $A_1\ B_1\ A_2\ B_2 \ldots\ B_n$ ஒரு ($2n$ பக்கமுள்ள) ஒழுங்குப் பல்கோணம்.

எனவே, (i)லிருந்து,

$$PA_1 \cdot PB_1\ PA_2 \cdot PB_2 \ldots PB_n = a^{2n} - x^{2n}\ (x < a), \text{ அல்லது,}$$
$$= x^{2n} - a^{2n}\ (x > a) \quad \ldots\ldots$$

அதாவது,

$$(PA_1 \cdot PA_2 \ldots PA_n) \times (PB_1 \cdot PB_2 \ldots PB_n) = a^{2n} - x^{2n}\ (x < a) \text{ அல்லது}$$
$$= x^{2n} - a^{2n}\ (x > a) \quad \text{(iii)}$$

∴ (ii), (iii)லிருந்து,

$$PB_1\ PB_2\ PB_n = x^n + a^n\ (x \gtrless a)$$

எனவே, $P$ வட்டத்தினுள்ளிருந்தாலும், வெளியிலிருந்தாலும்,

$$PB_1\ PB_2 \ldots PB_n = x^n + a^n$$

இதற்கு கோட்சின் வட்டப் பண்பு எனப் பெயர்.

(Cotes Property of Circle)

6·11. $x^n - a^n$ஐக் காரணிபடுத்த. ($n$ ஒரு நேர் முழுவெண்)

வகை I. $n$ ஒரு ஒற்றை எண்

$x^n - a^n = 0$ என்றால்,

$x=a$ என்பது ஒரு தீர்வு. (அல்லது $x^n-a^n$ன் ஒரு காரணி $x-a$) .........(i)

எனவே, $x$ன் மற்ற $(n-1)$ தீர்வுகளைத்தான் நாம் கண்டுபிடிக்க வேண்டும்.

இப்பொழுது, $x^n-a^n=0$ ஆகையால்,

$$x^n=a^n\ 1$$
$$=a^n(\cos 0°\pm i\sin 0°)$$
$$=a^n(\cos 2K\pi\pm i\sin 2K\pi)$$

ஆகையால்,
$$x=a\{\cos 2K\pi\pm i\sin 2K\pi\}^{1/n}$$
$$=a\left\{\cos\frac{2K\pi}{n}\pm i\sin\frac{2K\pi}{n}\right\}$$
$$\left(K=1,\ 2\ldots\ldots\frac{(n-1)}{2}\right)$$

$x$ன் ஒரு சோடி மதிப்பு $a\left\{\cos\frac{2K\pi}{n}\pm i\sin\frac{2K\pi}{n}\right\}$ ஆகையால் $x^n-a^n$ன் ஒரு சோடிக் காரணி

$$=\left[\left\{x-a\cos\frac{2K\pi}{n}\right\}-ai\sin\frac{2K\pi}{n}\right]\times\left[\left\{x-a\cos\frac{2K\pi}{n}\right\}+ai\sin\frac{2K\pi}{n}\right]$$

$$=\left\{x-a\cos\frac{2K\pi}{n}\right\}^2 a^2\sin^2\frac{2K\pi}{n}\qquad(\because\ i^2=-1)$$

$$=x^2-2xa\cos\frac{2K\pi}{n}+a^2\qquad\ldots\ldots\ldots(ii)$$

(i), (ii)லிருந்து,

$$x^n-a^n=(x-a)\prod_{K=1}^{(n-1/2)}\left\{x^2-2xa\cos\frac{2K\pi}{n}+a^2\right\}$$

வகை II. $n$ ஒரு இரட்டை எண்

முன்போல, $x^n-a^n=0$ எனில்,

$x=\pm a$ என்ற தீர்வுகள் கிடைக்கும். எனவே $x^n-a^n$ன் இரு காரணிகள் முறையே $(x-a)$, $(x+a)$ .........(i)

நாம் இப்பொழுது $x^n-a^n=0$ன் மற்ற $(n-2)$ தீர்வுகளைத்தான் கண்டுபிடிக்கவேண்டும்.

$x^n = a^n$ ஆகையால்

$= a^n \cdot 1 = a^n (\cos 0° \pm i \sin 0°)$

$= a^n (\cos 2K\pi \pm i \sin 2K\pi)$

$\therefore \quad x = a \{ \cos 2K\pi \pm i \sin 2K\pi \}^{1/n}$

$= a \left\{ \cos \frac{2K\pi}{n} \pm i \sin \frac{2K\pi}{n} \right\}$

$$\left( K = 1, 2, 3 \ldots\ldots\ldots \frac{n-2}{2} \right)$$

$x$ன் ஒரு சோடி மதிப்பு $a \left\{ \cos \frac{2K\pi}{n} \pm i \sin \frac{2K\pi}{n} \right\}$ ஆகையால் $x^n - a^n$ன் ஒரு இருபடிக் காரணி

$$= x^2 - 2ax \cos \frac{2K\pi}{n} + a^2. \quad \ldots\ldots\ldots\ldots\ldots \text{(ii)}$$

(i), (ii)லிருந்து,

$$x^n - a^n = (x - a)(n + a) \prod_{K=1}^{\frac{(n-2)}{2}} \left\{ x^2 - 2ax \cos \frac{2K\pi}{n} + a^2 \right\}$$

$$= (x^2 - a^2) \prod_{K=1}^{\frac{(n-2)}{2}} \left\{ x^2 - 2ax \cos \frac{2K\pi}{n} + a^2 \right\}$$

6·12.

$x^n + a^n$ஐக் காரணிப்படுத்துக. ($n$ ஒரு நேர் முழுவெண்)

வகை *I.* $n$ ஒற்றை எண்.

$x^n + a^n = 0$க்கு,

$x = -a$ என்ற ஒரு மெய்யான தீர்வு உண்டு. அல்லது ($x^n - a^n$ன் ஒரு காரணி $x + a$) $\quad \ldots\ldots\ldots\ldots\ldots$ (i)

மற்ற $(n - 1)$ தீர்வுகளைக் கண்டுபிடிக்க.

$x^n = -a^n$

$= a^n (\cos \pi \pm i \sin \pi)$

$= a^n (\cos (2K + 1)\pi \pm i \sin (2K + 1)\pi)$

$\therefore \quad x = a \left\{ \cos (2K + 1) \pi \pm i \sin (2K + 1) \pi \right\}^{\frac{1}{n}}$

$$= a\left\{ \cos \frac{(2R+1)}{n}\pi \pm i \sin \frac{(2K+1)}{n}. \ \pi \right\}$$

$\left( K = O, 1, 2, \ldots, \frac{(2K+3}{2}\right.$; அதாவது, $\left.\frac{(n-1)}{2}\right.$ சோடி மதிப்புக்கள் $\big)$

§ 6·11ல் விளக்கியதுபோல, இப்பொழுது,

$x^n + a^n$க்கு ஒரு மெய்யான இரு படிக்காரணி,

$n^2 - 2ax \cos \frac{(2K+1}{n}\frac{\pi}{} + a^2$ என புலப்படும். ......... (ii)

(i), (ii) லிருந்து,

$$x^n + a^n = (x+a) \underset{K=O}{\overset{\frac{(n-3)}{2}}{\alpha\pi}} \left\{ x^2 - 2ax \cos \frac{(2K+1)}{n}\pi + a^2 \right\}$$

வகை *II*. $n$ ஒரு இரட்டை எண்.

$n^n = -a^n$க்கு $x = \pm a$ போன்ற மெய்யான தீர்வுகள் கிடையா.

ஆனல் மேற் கூறியபடி $x^n + a^n$க்கு ஒரு மெய்யான இரு படிக்காரணி.

$x^2 - 2ax \cos \frac{(2K+\,)}{n} \pi + a^2.$ $\left( K = O, 1, 2 \ldots \frac{(n-2)}{2} \right)$

உண்டு.

$$\therefore \quad x^n + a^n = \underset{K=O}{\overset{\frac{1}{2}(n-2)}{\alpha\pi}} \left\{ x^2 - 2ax \cos \frac{(2K+1)}{n}\pi + a^2 \right\}$$

$\left( \frac{n}{2} \right.$ இரு படிக்காரணிகள் $\left. \right)$

6·13.

இப்பொழுது, நாம் சில முக்கிய சூத்திரங்களைக் காண்போம்.

(i) $\sin n\theta = 2^{n-1} \sin \theta. \ \sin \left( \theta + \frac{\pi}{n} \right) \ldots\ldots\ldots \sin \left( \theta + \frac{n-1}{n} + \right)$

§ 6·8லிருந்து.

$$x^{2n} - 2x^n a^n. \quad \cos n\theta + a^{2w} \underset{K=O}{\overset{n-1}{\alpha\pi}}$$

$$\left\{ x^2 - 2ax.\ \cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2 \right\}$$

$x = a = 1$ என்றும், $\theta = 2\phi$ என்றும் இதில் பிரதியிட.

எனவே, $$2 - 2\cos 2n\phi = \prod_{K=O}^{n-1} \left\{ 2 - 2\cos\left(2\phi + \frac{2K\pi}{n}\right)\right\}$$

அதாவது, $$4\sin^2 n\phi = \prod_{K=O}^{n-1} \left\{ 4\sin^2\left(\phi + \frac{K\pi}{n}\right)\right\}$$

$$= 2^{2(n-1)} \prod_{K=O}^{n-1} \left\{ \sin^2\left(\phi + \frac{K\pi}{n}\right)\right\}$$

ஆகையால், $$\sin^2 n\phi = 2^{2n-2} \prod_{K=O}^{n-1} \left\{ \sin^2\left(\phi + \frac{K\pi}{n}\right)\right\}$$

அல்லது, $$\sin n\phi = 2^{n-1} \prod_{K=O}^{n-1} \left\{ \sin\left(\phi + \frac{K\pi}{n}\right)\right\}$$

$\phi$க்குப் பதிலாக $\theta$ என்று எழுதினால் கீழ்வருமாறு கிடைக்கும்.

$$\sin n\theta = 2^{n-1}\sin\theta \cdot \sin\left(\theta + \frac{\pi}{n}\right) \ldots \sin\left(\theta + \frac{n-1}{n}\pi\right)$$

(ii) $$\cos n\theta = 2^{n-1}.\ \sin\left(\theta + \frac{3\pi}{2n}\right)\sin\left(\theta + \frac{3\pi}{2n}\right)$$

$$\ldots \sin\left(\theta + \frac{2n+1}{2n}\pi\right)$$

சென்ற சூத்திரத்தில், $\theta$ விற்குப் பதிலாக $\theta + \frac{\pi}{2n}$ என்றுழுதினால்,

$$\sin n\left(\theta + \frac{\pi}{2n}\right) = 2^{n-1}.\ \sin\left(\theta + \frac{\pi}{2n}\right) \cdot \sin\left(\theta + \frac{\pi}{2n} + \frac{\pi}{n}\right) \ldots$$

என்று நமக்குக் கிடைக்கும்.

அதாவது, $$\sin\left(\frac{\pi}{2} + n\theta\right) = 2^{n-1}.\ \sin\left(\theta + \frac{\pi}{2n}\right).\ \sin\left(\theta + \frac{3\pi}{2n}\right) \ldots\ldots$$

அல்லது, $\cos n\theta = 2^{n-1}.\ \sin\left(\theta+\frac{\pi}{2n}\right).\ \sin\left(\theta+\frac{3\pi}{2n}\right)$
$\ldots\ \sin\left(\theta+\frac{2n-1}{2n}\pi\right)$

6·14.

## மாதிரிக் கணக்குகள்

மாதிரி 1. $n$ ஒரு நேர் முழுவெண்ணாகில் $x^{2n}-1$ ஐ இருபடிக்காரணிகளாகப் பிரித்து $\sin\frac{\pi}{2n}.\ \sin\frac{2\pi}{2n}\ \sin\frac{3\pi}{2n}\ \ldots\ldots\ \sin\frac{(n-1)\pi}{2n} = \frac{\sqrt{n}}{2^{n-1}}$ என நிறுவுக.

$2n$ ஒரு இரட்டை எண்ணாகையால்,

$$x^{2n}-a^{2n} = (x^2-a^2)\prod_{K=1}^{n-1}\left\{x^2-2ax\cos\frac{2K\pi}{2n}+a^2\right\}$$

(§ 6·11 வகை II)

$$\therefore\quad x^{2n}-1 = (x^2-1)\prod_{K=1}^{n-1}\left\{x^2-2x\cos\frac{2K\pi}{2n}+1\right\}$$

$$\frac{x^{2n}-1}{x^2-1} = \prod_{K=1}^{n-1}\left\{x^2-2x\cos\frac{2K\pi}{2n}+1\right\}$$

வகை நுண் கணிதத்திலிருந்து (Differential Calculus) $x$ ஆனது 1ஐ அணுக இருபக்க எல்லை மதிப்புகளும் சமமாகும். அதாவது,

$$\lim_{x\to 1}\frac{x^{2n}-1}{x^2-1} = \prod_{K=1}^{n-1}\left\{1-2\cos\frac{2K\pi}{2n}+1\right\}$$

$$\therefore\quad \frac{2n}{2} = 2^{n-1}\prod_{K=1}^{n-1}\left\{1-\cos\frac{2K\pi}{2n}\right\}$$

$$= 2^{n-1}.\prod_{K=1}^{n-1}\left\{2\sin^2\frac{K\pi}{2n}\right\}$$

(அ-து) $$n = 2^{n-1}.2^{n-1}.\prod_{K=1}^{n-1}\left\{\sin^2\frac{K\pi}{2n}\right\}.$$

இரு பக்கமும் வர்க்க மூலம் எடுக்க.

$$\frac{\sqrt{n}}{2^{n-1}} = \pm \prod_{K=1}^{(n-1)} \left\{ \sin \frac{K\pi}{2n} \right\} \qquad \ldots \quad (i)$$

ஆனால் கோணங்கள் $\frac{\pi}{2n}$, $\frac{2\pi}{2n}$, $\frac{3\pi}{2n}$, ;...... $\frac{(n-1)}{2n}\pi$ ஒவ்வொன்றும் $\pi$ஐ விட சிறியதாகையால், $\sin\frac{\pi}{2n}$, $\frac{2\pi}{2n}$, $\sin\frac{3\pi}{2n}$,.. $\sin\frac{(n-1)}{2n}\pi$ முதலிய அத்துணைக்கும் கூட்டற்குறிதான் உண்டு.
(plus sign)

$$\therefore \prod_{K=1}^{(n-1)} \sin \frac{K\pi}{2n} = + \frac{\sqrt{n}}{2^{n-1}}.$$

அதாவது, $\sin\frac{\pi}{2n} \cdot \sin\frac{2\pi}{2n} \cdot \sin\frac{3\pi}{2n} \ldots\ldots\ldots\ldots$

$$\sin\frac{(n-1)\pi}{n} = \frac{\sqrt{n}}{2^{n-1}}$$

மாதிரி 2. $x^{10}-x^5+1$ஐ இருபடிக்காரணிகளாகப் பிரிக்க.

$x^{10}-x^5+1 = 0$ விருந்து

$$x^5 = \frac{1\pm\sqrt{1-4}}{2} = \frac{1\pm i\sqrt{3}}{2}$$

$$= \tfrac{1}{2} \pm i\frac{\sqrt{3}}{2}$$

$$= \cos\frac{\pi}{3} \pm \sin\frac{\pi}{3}$$

$$= \cos\left(2K\pi+\frac{\pi}{3}\right) \pm i\sin\left(2K\pi+\frac{\pi}{3}\right)$$

($K$ ஒரு முழுவெண்)

$$x = \left\{\cos\left(2K\pi+\frac{\pi}{3}\right) \pm i\sin\left(2K\pi+\frac{\pi}{3}\right)\right\}^{\frac{1}{5}}$$

$$= \cos\frac{(6K+1)\pi}{15} \pm i\sin\frac{(6K+1)\pi}{15}$$

($K=0$, 1, 2, 3 4)

$$\therefore\ x^{10}-x^5+1 = \prod_{K=0}^{4}\left\{x^2-2x\cos\frac{(6K+1)}{15}\pi+1\right\}$$

மாதிரி 3.

$$\cos n\theta - \cos n\phi = 2^{n-1}\prod_{K=0}^{(n-1)}\left\{\cos\theta - \cos\left(\phi + \frac{2K\pi}{n}\right)\right\}$$

என நிறுவுக.

$$x^{2n} - 2x^n \cos n\,\phi + 1 = \prod_{K=0}^{(n-1)}$$

$$\left\{x^2 - 2x\cos\left(\phi + \frac{2K\pi}{n}\right) + 1\right\} \quad (\S\ 6\cdot 8)$$

இரு பக்கங்களையும் $x^n$ ஆல் வகுக்க.

$$x^n - 2\cos n\phi + \frac{1}{x^n} = \prod_{K=0}^{(n-1)}\left\{x - 2\cos\left(\phi + \frac{2K\pi}{n}\right) + \frac{1}{x}\right\}$$

(அ.து.) $$xn + \frac{1}{x^n} - 1\cos n\phi = \prod_{K=0}^{(n-1)}\left\{\left(x + \frac{1}{x}\right) - 2\cos\right.$$

$$\left.\left(\phi + \frac{2K\pi}{n}\right)\right\} \quad \ldots\ldots(\text{i})$$

$x = \cos\theta + i\sin\theta$ எனில் $x + \frac{1}{x} = 2\cos\theta$: $x^n + \frac{1}{x^n} = 2\cos n\theta$

$\therefore$ (i)லிருந்து.

$$2\cos n\theta - 2\cos n\phi = \prod_{K=0}^{(n-1)}\left\{2\cos\theta - 2\cos\left(\phi + \frac{2K\pi}{n}\right)\right\}$$

அதாவது, $$2(\cos n\theta - \cos n\phi) = 2^n \prod_{K=0}^{n-1}\left\{\cos\theta - \cos\left(\phi + \frac{2K\pi}{n}\right)\right\}$$

எனவே, $$\cos n\theta - \cos n\phi = 2^{n-1}\prod_{K=0}^{n-1}\left\{\cos\theta - \cos\left(\phi + \frac{2K\pi}{n}\right)\right\}$$

குறிப்பு: $\phi = \left(\frac{-\pi}{2n}\right)$ எனில்,

$$\cos n\theta - \cos n\left(\frac{-\pi}{2n}\right) = 2^{n-1}\prod_{K=0}^{n-1}\left\{\cos\theta - \cos\left(\frac{\pi}{2n} + \frac{2K\pi}{n}\right)\right\}$$

$$= 2^{n-1}\prod_{K=0}^{n-1}\left\{\cos\theta - \cos\left(\frac{4K-1}{2n}\right)\pi\right\}$$

$$\cos n\theta - 0 \qquad = 2^{n-1} \prod_{K=0}^{n-1} \left\{ \cos\theta - \cos\left(\frac{4K-1}{2n}\right)\pi \right\}$$

எனவே,

$$\cos n\theta = 2^{n-1}\left(\cos\theta - \cos\frac{\pi}{2n}\right)\left(\cos\theta - \cos\frac{3\pi}{2n}\right)\cdots\cdots$$

$$\times\left(\cos\theta - \cos\frac{2n-1}{2n}\pi\right)$$

மாதிரி 4.

$$(1+x)^{2n} + (1-x)^{2n} = 2\prod_{p=1}^{n}\left\{x^2 + \tan^2\frac{(2p-1)\pi}{4n}\right\}$$

இம்முடிவிலிருந்து $\sum_{p=1}^{n} \tan^4\frac{(2p-1)}{4n}\pi$ ன் மதிப்பை எழுதுக.

$(1+x)^{2n} + (1-x)^{2n} = 0$ எனக்கொள்.

$$\therefore \qquad (1+x)^{2n} = -(1-x)^{2n}$$

$$= (1-x)^{2n}\cdot\{\pi \pm i\sin\pi\}$$

$$= (1-x)^{2n}\cdot\{\cos(2p-1)\pi \pm i\sin(2p-1)\pi\}$$

($p$ ஒரு நேர் முழுவெண்)

எனவே, $1+x = (1-x)\cdot\{\cos(2p-1)\pi \pm i\sin(2p-1)\pi\}^{1/2n}$

அல்லது, $\frac{1+x}{1-x} = \cos\left(\frac{2p-1}{2n}\right)\pi \pm i\sin\left(\frac{2p-1}{2n}\right)\pi$

எனவே, $$\frac{2x}{2} = \frac{\cos\left(\frac{2p-1}{2n}\right)\pi \pm i\sin\left(\frac{2p-1}{2n}\right)\pi - 1}{\cos\left(\frac{2p-1}{2n}\right)\pi \pm i\sin\left(\frac{2p-1}{2n}\right)\pi - 1}$$

$$= \frac{-2\sin^2\left(\frac{2p-1}{4n}\right)\pi \pm i\sin\left(\frac{2p-1}{2n}\right)\pi - 1}{2\cos^2\left(\frac{2p-1}{4n}\right)\pi \pm i\sin\left(\frac{2p-1}{2n}\right)\pi}$$

$$= \frac{2i^2\sin^2\left(\frac{2p-1}{4n}\right)\pi \pm 2i\sin\left(\frac{2p-1}{4n}\right)\pi\cdot\cos\left(\frac{2p-1}{4n}\right)\pi}{2\cos^2\left(\frac{2p-1}{4n}\right)\pi \pm 2i\sin\left(\frac{2p-1}{4n}\right)\pi\cdot\cos\left(\frac{2p-1}{4n}\right)\pi}$$

$$= \frac{i \sin\left(\frac{2p-1}{4n}\right)\pi \left\{i \sin\left(\frac{2p-1}{4n}\right) \pm \cos\left(\frac{2p-1}{4n}\right)\pi\right\}}{\cos\left(\frac{2p-1}{4n}\right)\pi \left\{\cos\left(\frac{2p-1}{4n}\right) \pm i \sin\left(\frac{2p-1}{4n}\right)\pi\right\}}$$

அல்லது $x = \pm i \tan\left(\frac{2p-1}{n}\right)\pi.$

எனவே, $x + i \tan\left(\frac{2p-1}{4n}\right)\pi,$

$$x - i \tan\left(\frac{2p-1}{4n}\right)\pi (P = 2, \ldots\ldots (n))$$

ஆகியவை, $(1+x)^{2n} + (1-x)^{2n}$ என்ற கணியத்தின் (quantity) காரணிகளாகும். (§ 6·12ஐப் பார்க்க):

ஆகையால்

$$(1+x)^{2n} + (1-x)2n. = K \underset{p=1}{\overset{n}{\sigma\pi}} \left\{x + i \tan\left(\frac{2p-1}{4n}\right)\pi\right\}$$

$$\left\{x - i \tan\frac{2p-1}{4n}\pi\right\}$$

$$= K \underset{p=1}{\overset{n}{\pi}} \left\{x^2 + \tan^2\left(\frac{2p-1}{4n}\right)\pi\right\}.$$

இருபக்கமும் $x^{2n}$ன் குணகத்தை சமன்படுத்தினல்

$2 = K$ என்று கிடைக்கும்.

எனவே, $(1+n)^{2n} + (1-x)^{2n} = 2 \underset{p=1}{\overset{n}{\sigma\pi}} \left\{x^2 + \tan^2\left(\frac{2p-1}{4n}\right)\pi\right\}$

இருபக்கமும் $x^{2n-2}$ன் குணகத்தைச் சமன்படுத்த.

$$2 \times 2^nC_2 = 2 \times \sum_{p=1}^{n.} \tan^2 \frac{(2p-1)}{4n}\pi.$$

இருபக்கமும் $x2^{n-4}$ன் குணகத்தை சமன்படுத்த

$$2 \times {}^{2n}C_4 = 2 \times \Sigma \tan^2\left(\frac{2p-1}{4n}\right)\pi \times \tan^2\left(\frac{2q-1}{4n}\right)\pi.$$

($p, q$ இரண்டும் முழுவெண்கள் ஒன்றிலிருந்து, $n$ வரையுள்ள மதிப்புகளைப் பெறும் இவைகள், ஒன்றுக்கொன்று சமமல்ல. $(p \neq q)$)

ஆகையால்

$$\sum_{p=1}^{u} \tan^4 \left(\frac{2p-1}{4n}\right)\pi = \left\{\Sigma \tan^2\left(\frac{2p-1}{4n}\right)\pi\right\}$$

$$-2\left\{\Sigma \tan^2\left(\frac{2p-1}{4n}\right)\pi \times \tan^2\left(\frac{2q-1}{4n}\right)\pi\right\}$$

$$= \left\{{}^{2n}C2\right\}^2 - 2.\left\{{}^{2n}C4\right\}$$

$$= \tfrac{1}{8}\, n(n-1)\ (4n^2+2n-3)$$

மாதிரி. 5. $\dfrac{x^n - a^n \cos n\theta}{x^{2n} - 2a^n x^n \cos n\theta + a^{2n}} = \dfrac{1}{nx^{n-1}} \sum_{K=O}^{n-1}$

$$\frac{x - a\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right)}{x^2 - 2an\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2}$$

என்று நிறுவுக.

§ 6·8லிருந்து,

$$x^{2n} - 2a^n x^n \cos n\theta + a^{2n} = \frac{n-1}{a\pi}_{K=O}$$

$$\left\{x^2 - 2ax\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2\right\}$$

இருபக்கமும் c அடிக்கு மடக்கை எடுக்க.

$$wz\,(x^{2n} - 2a^n x^n \cos n\theta + {}^{2n}) = \sum_{K=O}^{n-1}$$

$$wz\left\{x^2 - 2ax\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2\right\}$$

xஐக் குறித்து வகையிட (differentiate)

$$\frac{2nx^{2n-1} - 2a^n.\ nx^{n-1}.\ \cos n\theta}{x^{2n} - 2a^n.\ nx^n \cos n\theta + a^{2n}} = \sum_{K=O}^{n-1}$$

$$\left\{\frac{2x - 2a\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right)}{x^2 - 2ax\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2}\right\}$$

எனவே,

$$\frac{2n\,(x^{n-1})\,(x^n - a^n \cos n\theta)}{x^{2n} - 2a^n x^n \cos n\theta + a^{2n}} = \sum_{K=O}^{n-1} \left\{ \frac{2\left[ x - a\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right)\right]}{x^2 - 2ax\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2} \right\}$$

அல்லது,

$$\frac{x^n - a^n \cos n\theta}{x^{2n} - 2a^n x^n \cos n\theta + a^{2n}} = \frac{1}{nx^{n-1}} \sum_{K=O}^{n-1} \left\{ \frac{\bar{x} - a\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right)}{x^2 - 2ax\cos\left(\theta + \frac{2K\pi}{n}\right) + a^2} \right\}$$

மாதிரி 6. $P_1P_2P_3 \ldots P_{2n}$ என்று ஒரு ஒழுங்குப் பல்கோணம் ஆரம் $r$ கொண்ட ஒரு வட்டத்தினுள்ளே வரையப்பட்டுள்ளது. $P$ என்னும் புள்ளி இவ்வட்டத்தின்மீது, வில் $P_1P_{2n}$ன் நடுவில் அமைந்தால் (i) $PP_1 \times PP_2 \times PP_3 \times \ldots\ldots PP_n = r^n\sqrt{2}$ என்றும் (ii) $P_1P_2 \times P_1P_3 \times P_1P_4 \ldots \times P_1P_n = r^{n-1}\sqrt{n}$ என்றும் நிறுவுக.

$P_1P_2P_3 \ldots P_{2n}$ என்ற $2n$ பக்கங்களுள்ள ஒழுங்குப் பல்கோணம் ஒரு வட்டத்தினுள் வரையப்பட்டுள்ளதால், ஒவ்வொரு பக்கமும் வட்ட மையத்தில் சமகோணத்தைத் தாங்கும். எனவே,

$O$ என்பது வட்ட மையமானல்

$$P^1\hat{O}P^2 = P_2\hat{O}\ P = \ldots = P_{2n}\hat{O}P_1\ \frac{2\pi}{2n} = \frac{\pi}{n}.$$

மேலும் $P$ என்ற புள்ளி வில் $P_1\ P_2$ன் நடுவில் உள்ளதால்

$$P\hat{O}P_1 = F\hat{O}P_{2n} = \frac{\pi}{2n}.$$

எனவே,

$$P\hat{O}P_2 = P\hat{O}P_1 + P_1\hat{O}P_2 = \frac{\pi}{2n} + \frac{\pi}{n}.$$

$$P\hat{O}P_3 = P\hat{O}P_2 + P_2\hat{O}P_3 = \frac{\pi}{2n} + \frac{\pi}{n} + \frac{\pi}{n}$$

$$= \frac{\pi}{2n} + \frac{2\pi}{n}.$$

இம்மாதிரியே, $P\hat{O}P_n = \frac{\pi}{2n} + \frac{(n-1)\pi}{n}$.

எனவே, $PP_1 = 2r \sin \frac{\pi}{4n}$.

$PP_2 = 2r \sin\left(\frac{\pi}{4n} + \frac{\pi}{n}\right)$

$PP_3 = 2r \sin\left(\frac{\pi}{4n} + \frac{2\pi}{n}\right)$

..............................

$PP_n = 2r \sin\left(\frac{\pi}{4n} + \frac{(n-1)\pi}{n}\right)$

ஆகையால், $PP_1 \times PP_2 \times PP_3 \times \ldots\ldots\ldots \times PP_n$

$= 2r \sin \frac{\pi}{4n} + 2r \sin\left(\frac{\pi}{4n} + \frac{\pi}{n}\right)$

$\times \ldots\ldots\ldots\ldots \times 2r \sin\left(\frac{\pi}{4n} + \frac{n-1}{n}\pi\right)$

$= 2^n . r^n . \sin \frac{\pi}{4n} \times \sin\left(\frac{\pi}{4n} + \frac{\pi}{n}\right)$

$\times \ldots\ldots \times \sin\left(\frac{\pi}{4n} + \frac{n-1}{n}\pi\right)$

$= 2^n . r^n . \frac{1}{2^{n-1}} \cdot \sin n \frac{\pi}{4n}$ ........................(§ 6·13. (i))

$= 2 \cdot r^n \cdot \frac{1}{\sqrt{2}}$

$= r^n \sqrt{2}$.

மேலும், $P_1 P_2 = 2r \sin \frac{\pi}{2n}$.

$P_1 P_3 = 2r \sin\left(\frac{\pi}{2n} + \frac{\pi}{n}\right)$

..............................

$P_1 P^n = 2r \sin\left(\frac{\pi}{2n} + \frac{\pi}{n}\right)$

மேலும் $P_1 \hat{O} P_2 = \frac{\pi}{n}$.

$$\therefore \qquad P_1 P_2 = 2r \sin\frac{\pi}{2n}.$$

$$P_1 \hat{O} P_3 = \frac{2\pi}{n} \quad (\because \; P_1\hat{O}P_3 = P_1\hat{O}P_2 + P_2\hat{O}P_3)$$

$$\therefore \qquad P_1 P_3 = 2r \sin \frac{2\pi}{2n}.$$

இம்மாதிரியே, $P_1 P_n = 2r \sin\frac{(n-1)\pi}{2n}.$

ஆகையால், $P_1 P_2 \times P_1 P_3 \times P_1 P_4 \times \ldots \times P_1 P_n$

$$= 2r \sin\left(\frac{\pi}{2n}\right) \times 2r \sin\left(\frac{2\pi}{2n}\right) \times \ldots (n-1) \text{ உறுப்புகள்}$$

$$= 2^{n-1}.\ r^{n-1}.\ \sin\frac{\pi}{2n}.\ \sin\frac{2\pi}{2n} \ldots \sin\frac{(n-1)\pi}{2n}$$

$$= 2^{n-1}.\ r^{n-1}.\ \frac{\sqrt{n}}{2^{n-1}}$$ (மாதிரி 1 லிருந்து) (§ 6·13)

$$= r^{n-1}.\ \sqrt{n}$$

மாதிரி 7. $ABCD$ என்ற, $n$ பக்கங்களுள்ள ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்றுமையம் $O$, சுற்றுவட்ட ஆரம் $a$. $P$ என்னும் புள்ளி $O$விலிருந்து $r$ என்னும் தூரத்திலுள்ளது. நீட்டப்பட்ட கோடுகள் $OA$, $OB$, $OC$,.... வுடன் முறையே $AP$, $BP$, $CP$.........உண்டாக்கும் கோணங்களின் கூட்டுத்தொகை $\tan^{-1}\frac{r^n \sin n\theta}{r^n \cos n\theta - a^n}$ $(\theta = P\hat{O}A)$ என்று நிறுவுக.

நீட்டப்பட்ட கோடுகள் $OA$, $OB$, $OC$,...வுடன் முறையே $AP$, $BP$, $CP$,...உண்டாக்கும் கோணங்கள் $\phi$, $\phi^1$, $\phi^{11}$...எனில்,

$$PA \cdot \cos \phi = r \cos \theta - a$$

$$PA \sin \phi = r \sin \theta$$

எனவே, $PA (\cos \phi + i \sin \phi) = (r \cos \theta + ir \sin \theta) - a$

இம்மாதிரியே,

$$PB(\cos\phi^1 + i \sin\phi^1) =$$

$$\left\{r \cos\left(\theta + \frac{2\pi}{n}\right) + ir \sin\left(\theta + \frac{2\pi}{n}\right)\right\} - a$$

$(\because A\hat{O}B = 2\pi/n)$

... ... ... ... ... ... ...

ஆகையால், $PA(\cos\phi+i\sin\phi)\times PB(\cos\phi^1+i\sin\theta^1)$.........

$$=\left\{r(\cos\theta+i\sin\theta)-a\right\}$$

$$\times\left\{r\left[\cos\left(\theta+\frac{2\pi}{n}\right)+i\sin\left(\theta+\frac{2\pi}{n}\right)\right]-a\right\}$$

× .......(n உறுப்புக்கள்)

$=(-1)^{n-1}\{r^n(\cos n+i\sin n\theta)-a^n.\}$ (§6·11)

மெய்யான கற்பனையான பகுதிகளை இருபக்கமும் சமன்படுத்த.

$PA\times PB\times\ldots\cos(\phi+\phi^1+\ldots)=\{r^n\cos n\theta-a^n\}(-1)^{n-1}$...(i)

$PA\times PB\times\ldots\sin(\phi+\phi^1+\ldots)=\{r^n\sin n\theta\}(-1)^{n-1}$......(ii)

(ii)ஐ (i) ஆல் வகுக்க,

$$\tan(\phi+\phi^1+\ldots)=\frac{r^n\sin n\theta}{r^n\cos n\theta-a^n}.$$

$$\therefore\quad\phi+\phi^1+\ldots=\tan^{-1}\left\{\frac{r^n\sin n\theta}{r^n\cos n\theta-a^n}\right\}.$$

## அப்பியாசம் 6

1. $x=\cos\theta+i\sin\theta$ எனில், $\dfrac{x^{2n}+1}{x^{2n-1}+x}=\dfrac{\cos n\theta}{\cos(n-1)\theta}$

என நிறுவுக (n முழு எண்)

2. $$\frac{(\cos 2\theta+i\sin 2\theta)^3(\cos 3\theta-i\sin 3\theta)^4}{(\cos 3\theta+i\sin 3\theta)^2(\cos 4\theta+i\sin 4\theta)^{-5}}$$

ஐச் சுருக்குக.

[விடை 1]

(ii) $$\frac{(\cos 2\theta-i\sin 2\theta)^4(\cos 4\theta+\sin 4\theta)^{-5}}{(\cos 5\theta+i\sin(3\theta))^2(\cos 5\theta-i\sin 5\theta)^{-6}}$$

ஐச் சுருக்குக.

[விடை $\cos 7\theta-i\sin 7\theta$]

(iii) $$\frac{(\cos 2\theta-i\sin 2\theta)^3(\cos 4\theta+i\sin 4\theta)^4}{(\cos 10\theta+i\sin 10\theta)^2(\cos 3\theta-i\sin 3\theta)^4}$$

ஐச் சுருக்குக.

[விடை $\cos 2\theta+i\sin 2\theta$]

3. $x_r=\cos\left(\dfrac{\pi}{2^r}\right)+i\sin\left(\dfrac{\pi}{2^r}\right)$ எனில்,

$x_1\cdot x_2\cdot x_3$.......மு.வ. $=1$ என நிறுவுக.

4. $x+\dfrac{1}{x}=2\cos\theta$; $y+\dfrac{1}{y}=2\cos\phi$ எனில்

$\frac{x^3}{y^2}+\frac{y^2}{x^3}$ன் ஒரு மதிப்பு $= 2\cos(3\theta-2\phi)$ எனக் காண்க.

5. $\left(\frac{1+\sin\phi+i\cos\phi}{1+\sin\phi-i\cos\phi}\right)^n = \cos\left(\frac{n\pi}{2}-n\phi\right) + i\sin\left(\frac{n\pi}{2}-n\phi\right)$ என நிறுவுக.

($n$ ஒரு முழு எண்.

6. $(1+x)^n = P_0+P_1x+P_2x^2+\ldots+P_nx^n$ எனில்,

$P_0-P_2+P_4-\ldots\ldots = 2^{n/2}.\cos\left(\frac{n\pi}{4}\right)$ என்றும்,

$P_1-P_3+P_5-\ldots\ldots = 2^{n/2}.\sin\left(\frac{n\pi}{4}\right)$ என்றும் நிறுவுக.

$n$ ஒரு நேர் முழுவெண்)

[குறிப்பு :— $(1+i)^n$ன் விரித்தல் கண்டுபிடித்து, இருபக்கமும் மெய்யான பகுதிகளையும், கற்பனையான பகுதிகளையும் சமன்படுத்து].

7. $\left\{\frac{1+\sin\frac{\pi}{8}+i\cos\frac{\pi}{8}}{1+\sin\frac{\pi}{8}-i\cos\frac{\pi}{8}}\right\}^8 = -1$ என நிறுவுக.

8. $x=\cos\theta+i\sin\theta$; $\sqrt{1-c^2}=nc-1$ எனில்

$1+c\cos\theta = \frac{c}{2n}(1+n)\left(1+\frac{n}{x}\right)$ என்று நிறுவுக.

9. $x^2-2x+2 \equiv (x-\alpha)(x-\beta)$ எனில்

$\frac{(x+\alpha)^{-n}(x+\beta)^n}{\alpha-\beta} = \frac{\sin n\phi}{\sin n\phi}$ $(\cot\phi=x+1)$ என்று நிறுவுக.

10. $(x-p)^2+q^2\equiv(x+\alpha)(x+\beta)$ எனில்

$\frac{(x+\alpha)^n-(x+\beta)^n}{\alpha-\beta} = q^{n-1}\frac{\sin^n\phi}{\sin^n\phi}$

என்று நிறுவுக. $(q\cot\theta=x+p)$

[குறிப்பு :- $(x+p)^2+q^2=(x+p+iq)(x+p-iq)$

எனவே $(x+p+iq)(x+p-iq)\equiv(x+\alpha)(x+\beta)$

ஆகையால், $\alpha = p+iq$; $\beta=p-iq$

மேலும், $x+\alpha = (x+p)+iq$

$$= q\cot\theta + iq = \frac{q(\cos\theta + i\sin\theta)}{\sin\theta}$$

$$x+\beta = x+p-iq = \frac{q(\cos\theta + i\sin\theta}{\sin\theta}$$

11. $x \equiv \cos\theta + i\sin\theta$; $y \equiv \cos\phi + i\sin\phi$ எனில,

$$\sin(\theta-\phi) = \frac{1}{2i}\left\{\frac{x^2-y^2}{xy}\right\}$$ என்றும்,

$$\cos(\theta+\phi) = \frac{1}{2}\left\{\frac{1+x^2y^2}{xy}\right\}$$ என்றும் நிறுவுக.

[குறிப்பு :- $\cos(\theta-\phi)+i\sin(\theta-\phi)$

$$= (\cos\theta+i\sin\theta)(\cos\phi-i\sin\phi)$$

$$= \frac{(\cos\theta+i\sin\theta)}{(\cos\phi+i\sin\phi)} = \frac{y}{x}.$$

இம்மாதிரியே, $\cos(\theta-\phi)-i\sin(\theta-\phi) = \frac{y}{x}$. ]

12. $(-1+\sqrt{3}i)^{3n}+(-1-\sqrt{3}i) = 2^{3n+1}$ என்று நிறுவுக.

13. $(-i)^{\frac{1}{5}}$ன் மதிப்புகளை எழுதுக.

[ விடை. $\cos\frac{(4n+1)\pi}{10} - i\sin\frac{(4n+1)\pi}{10}$; $n=0, 1, ... 4$ ]

$m$ $\frac{m}{}$

$n$ $n$

14. $(a+ib)+(a-ib)$ ன் ஒரு மதிப்பு

$$= 2(a^2+b^2)^{\frac{m}{2n}}\cos\left(\frac{m}{n} + \tan^{-1}\frac{b}{a}\right)$$ என நிறுவுக.

15. $3\sqrt{2+2i}$ன் மதிப்புக்களைக் கண்டுபிடித்து $x^6-4x^3+8=0$ ஐத் தீர்.

[ விடை $2\sqrt{2}\left\{\cos\frac{(8n+1)}{12}\pi \pm i\sin\frac{(8n+1)}{12}\pi\right\}$;

$n = 0, 1, 2, 4$ ]

16. $(i-1)^{1/5}$ன் மதிப்புக்களைக் கண்டுபிடித்து அவைகளை ஆர்கண் வரை படத்தில் குறிக்க.

[ விடை $2^{1/10}\left\{\cos\left(\frac{2\pi}{5}+\frac{3\pi}{10}\right)+i\sin\left(\frac{2\pi}{5}+\frac{3\pi}{10}\right)\right\}$ ]

17. $(\sqrt{3}-i)^{1/5}$ன் மதிப்புக்களைக் காண்க.

[விடை $2^{1/5}\left\{\cos\frac{(12n+1)}{30}\pi-\sin\frac{(12n+1)}{30}\pi\right\}$;

$n = 0, 1, 2, 3, 4,$]

18. $(-1)^{1/10}$ன் மதிப்புக்களைக் காண்க.

[விடை $\cos\frac{(2n+1)}{10}\pi \pm i\sin\frac{(2n+1)}{10}\pi$ ; $n = 0, 1, 2, 3, 4,$]

19. $(\cos 60^\circ+i\sin 60^\circ+\cos 45^\circ+i\sin 45^\circ)^{1/3}$ன் மதிப்புக்களைக் காண்க.

[விடை $\left(2\cos\frac{15^\circ}{2}\right)^{1/3}\left\{\cos\frac{n\cdot 360^\circ+52\frac{1}{2}^\circ}{3}\right.$

$\left.+i\sin\frac{n\cdot 360^\circ+52\frac{1}{2}^\circ}{3}\right\}$]

$n = 0, 1, 2.$

20. $1+i\sqrt{3}$ன் 6-வது மூலங்களின் மதிப்புக்களைக் காண்க.

[விடை $2^{1/6}\left\{\cos\frac{(6n+1)}{18}\pi+i\sin\frac{(6n+1)}{18}\pi\right\}$;

$n = 0, 1, 2, \ldots 5.$]

21. $\sqrt[4]{i}$ன் மதிப்புக்களைக் காண்க.

[விடை $\cos\frac{4n+1}{8}\pi+i\sin\frac{4n+1}{8}\pi$ ; $n = 0, 1, 2, 3$]

22 $(\sqrt{3}-i)^{2/15}$ன் மதிப்புக்களைக் கண்டுபிடித்து அவைகளின் தொடர்பெருக்கற் பலனைக் காண்க. [விடை $2-2i\sqrt{3}$]

23. $\sqrt[5]{1+i}$ன் மதிப்புக்களின் தொடர் பெருக்கற் பலன் $= 1+i$ எனக் காண்க.

24. $(a+ib)^{\frac{1}{n}}\cdot(a+ib)n^{\frac{1}{n}}$ ன் மதிப்புக்களின் கூட்டுத் தொகை பூச்சியம் எனக் காண்க.

25. $\sqrt[3]{1}$ன் ஒரு கற்பனையான மதிப்பு $w$ எனில் மற்ற மதிப்புக்கள் $1, w^2$ என்றும், $1+w+w^2 = 0$ என்றும், $\frac{1}{1+2w}-\frac{1}{1+w}+\frac{1}{2+w} = 0$ என்றும் நிறுவுக.

**26.** $x^8-x^5+32x^3=32$ஐத்தீர்.

[விடை: $x=2,\ 2\left\{\cos\frac{2n+1}{5}\pi\pm i\sin\frac{2n+1}{5}\pi\right\}$; $n=0,1$;

$x=1\ \left\{\cos\frac{2m\pi}{3}\pm i\sin\frac{2m\pi}{3}\right\}$; $m=1$]

**27.** தீர்:—(i) $x^{16}-17x^8+16=0$.

[விடை: $\sqrt{2}\left\{\cos\frac{K\pi}{4}\pm i\sin\frac{K\pi}{4}\right\}$ $(K=\phi, 1, 2, 3, 4)$;

$\left\{\cos\frac{K\pi}{4}\pm i\sin\frac{\pi K}{4}\right\}$ $(K=1, 2, 3, 4)$]

(ii) $x^{11}-x^7+x^4-1=0$

[விடை: $\pm 1, \pm i; -1, \left\{\cos\frac{2K+1}{7}\pi\pm i\sin\frac{2K+1}{7}\pi\right\}$

$(K=0, 1, 2)$]

**28.** $\cos\frac{2\pi}{5}+i\sin\frac{2\pi}{5}=\alpha$ எனில் $\alpha+\alpha^4$; $\alpha^2+\alpha^3$ என்பவை $x^2+x-1=0$ என்னும் சமன்பாட்டின் தீர்வுகள் எனக் காண்க.

$$\alpha=\cos\frac{2\pi}{5}+i\sin\frac{2\pi}{5}$$
$$=(\cos 2\pi+i\sin 2\pi)^{1/5}$$
$$\therefore\ \alpha^5=\cos 2\pi+i\sin 2\pi$$

$=1$ · ஆகையால், $\alpha$ என்பது $x^5-1=0$ என்ற சமன்பாட்டின் ஒரு தீர்வு.

எனவே, $x^5=1$ன் ஐந்து தீர்வுகள் முறையே $1, \alpha, \alpha^2, \alpha^3, \alpha^4$, (§ 6·5)

மேலும், $1+\alpha+\alpha^2+\alpha^3+\alpha^4=0$. (§ 6·4 ......(i)

$\alpha+\alpha^4=p$ என்றும், $\alpha^2+\alpha^3=q$ என்றும் கொண்டால்,

$p+q=\alpha+\alpha^2+\alpha^3+\alpha^4=-1$ ((i)லிருந்து)......(ii)

$$pq=(\alpha+\alpha^4)(\alpha^2+\alpha^3)=\alpha^3+\alpha^4+\alpha^6+\alpha^7$$
$$=\alpha^3+\alpha^4+\alpha\cdot\alpha^5+\alpha^2\cdot\alpha^5$$
$$=\alpha^3+\alpha^4+\alpha+\alpha^2\quad(\because\ \alpha^5=1)$$
$$=\alpha+\alpha^2+\alpha^3+\alpha^4=-1\ \text{......(iii)}$$

$p, q$ என்பவை, $x^2-x(p+q)+pq=0$ன் தீர்வுகள். அதாவது $p, q$ என்பவை $x^2+x-1=0$ ((ii), (iii)லிருந்து) என்னும் சமன்பாட்டின் தீர்வுகள்.

29. $\cos\frac{2\pi}{7}+i\sin\frac{2\pi}{7}=\alpha$ எனில் $\alpha+\alpha^2+\alpha^4$ம் $\alpha^3+\alpha^5+\alpha^6$ம் $x^2+x+2=0$ன் மூலங்கள் எனக் காண்க.

30. $x^{10}-1$ஐ மெய்யான இருபடிக் காரணிகளாகப் பிரிக்க.

$$\left[\text{விடை.}\quad (x^2-1)\prod_{n=1}^{4}\left\{x^2-2x\cos\frac{n\pi}{5}+1\right\}\right]$$

31. $x^{14}-1$ஐ மெய்யான இருபடிக்காரணிகளாகப் பிரிக்க.

$$\left[\text{விடை.}\quad (x^2-1)\prod_{n=1}^{6}\left\{x^2-2x\cos\frac{n\pi}{7}+1\right\}\right]$$

32. $n$ ஒரு ஒற்றை முழு எண் எனில் $\frac{x^n+1}{x+1}$ ஐ மெய்யான இருபடிக் காரணிகளாகப் பிரிக்க.

$$\left[\text{விடை.}\quad \prod_{K=0}^{(n-1)/2}\left\{x^2-2x\cos\frac{2K+1}{n}\pi+1\right\}\right.$$

33. $x^7+1=(x+1)\left\{x^2-2x\cos\frac{\pi}{7}+1\right\}\left\{x^2-2x\cos\frac{3\pi}{7}+1\right\}\left\{x^2-2x\cos\frac{5\pi}{7}+1\right\}$ என்று நிரூபித்து, $\cos\frac{\pi}{7}+\cos\frac{3\pi}{7}+\cos\frac{5\pi}{7}=4\sin\frac{\pi}{14}.\sin\frac{3\pi}{14}.\sin\frac{5\pi}{14}=\frac{1}{2}$ எனக் காண்க.

34. $x^8+1=\prod_{K=1}^{4}\left\{x^2-2x\cos\frac{(2K-1)}{8}\pi+1\right\}$ என நிரூபித்து, $\sin\frac{\pi}{16}.\sin\frac{3\pi}{16}.\sin\frac{5\pi}{16}.\sin\frac{7\pi}{16}=\frac{1}{8\sqrt{2}}$ எனக் காண்க.

35. பின் வருவனவற்றை நிறுவுக.

(i) $x^{12}-1=\prod_{n=0}^{5}\left\{x^2-2x\cos\frac{(2n+1)}{12}.\pi+1\right\}$.

(ii) $x^{12}-x^6+1=\prod_{n=0}^{5}\left\{x^2-2x\cos\frac{6n+1}{12}.\pi+1\right\}$

36. $x^{12}-1$ஐக் காரணிப்படுத்தி அவைகளுள் எந்தக் காரணிகள் $x^4+x^2+1$க்கும் காரணிகள் எனக் கண்டுபிடிக்க.

[விடை. $x^{12}-1 = \prod_{n=0}^{5}\left\{x^2-2x\cos\frac{n\pi}{6}+1\right\}$ ;

$n=2,\ n=4$ ]

37. $\frac{(1+x)^n+(1-x)^n}{2x} = A\prod_{K=1}^{p}\left(x^2+\tan^2\frac{K\pi}{n}\right)$ என்று நிரூபித்து $n$ ஒற்றை எண்ணாகில், $A=1$; $p=\frac{1}{2}(n-1)$ என்றும் $n$ இரட்டை எண்ணாகில் $A=n$; $p=\frac{1}{2}(n-2)$ என்றும் நிறுவுக.

38. $(1+x)^{2n}(1-x)^{2n} = 4nx\prod_{K=1}^{n-1}\left\{x^2+\cot^2\frac{K\pi}{2n}\right\}$ என்று நிரூபித்து இதிலிருந்து $\sum_{1}^{n-1}\operatorname{cosec}^2\frac{K\pi}{2n} = \frac{1}{2}(4n-3)$ என்று காண்க.

39. (i) $A_1A_2\ldots\ldots A_n$ என்னும் ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்று மையம் $O$, ஆரம் $a$. $P$ என்னும் புள்ளி வட்டப் பரிதியில் அமைந்தால் $PA_1\times PA_2\times PA_3\ldots\ldots PA_n=2a^n\sin\frac{n\theta}{2}$ $(POA_1=\theta)$ என்று நிறுவுக.

[குறிப்பு: § 6·9ல் $x=a$]

(ii) மேற்கூறிய ஒழுங்குப் பல்கோணத்தில், $P$யிலிருந்து $OA_1,\ OA_2\ldots\ldots\ldots OA_n$க்கு வரையப்படும் குத்துக்கோடுகள் முறையே $PP_1,\ PP_2\ldots\ldots,\ PP_n$ எனில்,

$PP_1\times PP_2\times\ldots\ldots\ldots\times PP_n=2^{1-n}\cdot a^n\sin n\theta$ என்று நிறுவுக.

(iii) மேற்கூறிய பல்கோணத்தில்,

$A_1A_2\times A_2A_3\times\ldots\ldots\ldots\times A_{n-1}A_n=$

$= n^{n/2}\cdot a^{(n(n-1))/2}$ என்று நிறுவுக.

40. $P_1P_2\ldots\ldots P_{2n+1}$ என்னும் ஒரு ஒழுங்குப் பல்கோணத்தின் சுற்று ஆரம் $a$. $P$ என்னும் புள்ளி $P_1P_{2n+1}$ என்னும் வில்லின் நடுவில் அமைந்தால், $PP_1\times PP_2\ldots\ldots\times PP_n=a^n$ என்று நிறுவுக.

அத்தியாயம் VII

# திரிகோண விகித விரித்தல்களும், வரம்புகளும்.

7·1. தேமாவரின் தேற்றத்தைப் பயன்படுத்தி $\sin n\theta$, $\cos n\theta$, $\tan n\theta$ இவைகளின் விரித்தல்களைக் (expansions) கண்டுபிடிக்கலாம்.

$n$ ஒரு நேர் முழுவெண்ணாகில், $(\cos\theta+i\sin\theta)^n=\cos n\theta+i\sin n\theta$. ......(i) ஈருறுப்புத் தேற்றத்தை (Binomial Theorem) பயன் படுத்தி,

$$(\cos\theta+i\sin\theta)^n=\cos^n\theta+n\cos^{n-1}\theta(i\sin\theta)+\frac{n(n-1)}{2}\cdot\cos^{n-2}\theta\cdot(i\sin\theta)^2+\ldots\ldots$$

$$=\cos^n\theta+ni\cos^{n-1}\theta\cdot\sin\theta+\frac{n(n-1)}{2}\cdot\cos^{n-2}\theta\cdot i^2\cdot\sin^2\theta+\ldots\ldots$$

$$=\cos^n\theta-\frac{n(n-1)}{2}\cdot\cos^{n-2}\theta\cdot\sin^2\theta+\ldots\ldots$$

$$+i\left\{n\cos^{n-1}\theta\cdot\sin\theta-\frac{n(n-1)(n-2)}{1\cdot2\cdot3}\cdot\cos^{n-3}\theta\sin^3\theta+\ldots\ldots\right\}$$

$\therefore$ (i)லிருந்து, மெய்யான பாகங்களைச் சமன்படுத்த,

$$\cos n\theta=\cos^n\theta-\frac{n(n-1)}{1\cdot2}\cdot\cos^{n-2}\theta\cdot\sin^2\theta+$$

$$+\frac{n(n-1)(n-2)(n-3)}{1\cdot2\cdot3\cdot4}\cos^{n-4}\theta\cdot\sin^4\theta-\ldots\ldots$$

வகை I. $n$ ஒரு ஒற்றை எண்ணாகில்,

$$\cos n\theta=\cos^n\theta-nC_2\cdot\cos^{n-2}\theta\cdot\sin^2\theta+\ldots\ldots$$

$$+(-1)^{n-1/2}\cdot nC_{n-1}\cdot\cos\theta\cdot\sin^{n-1}\theta.\left(\frac{n+1}{2}\text{ உறுப்புகள்}\right)$$

வகை II. $n$ ஒரு இரட்டை எண்ணாகில்,

$$\cos n\theta=\cos^n\theta-nC_2\cos^{n-2}\sin^2\theta+\ldots\ldots$$

$$+(-1)^{n/2}\cdot nC_n\cdot\sin^n\theta.\quad\left(\frac{n}{2}+1\text{ உறுப்புக்கள்}\right)$$

இம்மாதிரியே (i)லிருந்து, கற்பனையான பாகங்களைச் சமன் படுத்த

$$\sin n\theta = n\cdot\cos^{n-1}\theta\cdot\sin\theta - \frac{n(n-1)(n-2)}{1\cdot2\cdot3}\cdot\cos^{n-3}\theta\cdot\sin^3\theta + \ldots\ldots$$

வகை I. $n$ ஒரு ஒற்றை எண்ணாகில்,

$$\sin n\theta = nC_1\cdot\cos^{n-1}\theta - nC_3\cdot\cos^{n-3}\theta\cdot\sin^3\theta + \ldots\ldots$$

$$+(-1)^{n-1/2}\cdot nC_n\cdot\sin^n\theta. \quad \left(\frac{n+1}{2}\text{ உறுப்புக்கள்}\right)$$

வகை II. $n$ ஒரு இரட்டை எண்ணாகில்,

$$\sin n\theta = nc_1\cdot\cos^{n-1}\theta\cdot\sin\theta - nc_3\cdot\cos^{n-3}\theta.\sin^3\theta + \ldots$$

$$+(-1)^{n/2-1}ncn_{-1}\cdot\cos\theta.\sin^{n-}\theta. \quad (n/2 \text{ உறுப்புக்கள்})$$

7·2 $n$ ஒரு நேர் முழுவெண்ணாகில் $\tan n\theta = \dfrac{\sin n\theta}{\cos n\theta}$

$$= \frac{nc_1.\cos^{n-1}\theta\sin\theta - nc_3.\cos^{n-3}\sin^3\theta + \ldots}{\cos^n\theta - nc_2.\cos^{n-2}.\sin^2\theta + \ldots} \quad \ldots\ldots(A)$$

தொகுதியையும் பகுதியையும் $\cos^n\theta$ ஆல் வகுக்க.

$$\tan n\theta = \frac{nc_1.\tan\theta - nc_3\tan^3\theta + nc_5.\tan^5\theta - \ldots}{1 - nc_2.\tan^2\theta + nc_4.\tan^4\theta\ldots}$$

7·3. இப்பொழுது $\tan(\theta_1+\theta_2\ldots+\theta n)$ன் விரிததலைக் காண்போம்.

$$\cos(\theta_1+\theta_2+\theta_3\ldots\theta n) + i\sin(\theta_1+\theta_2+\theta_3+\ldots+\theta n)$$

$$= (\cos\theta_1 + i\sin\theta_1)(\cos\theta_2 + i\sin\theta_2)(\cos\theta_3 + i\sin\theta_3)\ldots(\cos\theta^n + i\sin\theta^n)$$

$$= \cos\theta_1(1 - i\tan\theta^1).\cos\theta_2.(1 + i\tan\theta_2).\cos\theta_3(1 + i\tan\theta_3)\ldots\cos\theta n(1 + i\tan\theta^n)$$

$$= \cos\theta_1.\cos\theta_2\cos\theta_3\ldots\cos\theta n\,(1 + i\tan\theta_1)(1 + i\tan\theta_2)(1 + i\tan\theta_3)\ldots(1 + i\tan\theta^n)$$

$$= \cos\theta_1.\cos\theta_2.\cos\theta_3\ldots\cos\theta n.$$

$$[1 + i(\Sigma\tan\theta_1)$$
$$+ i^2(\Sigma\tan\theta_1.\tan\theta_2)$$
$$+ i^3(\Sigma\tan\theta_1.\tan\theta_2.\tan\theta_3)$$
$$+ \ldots\ \ldots\ \ldots\ \ldots$$
$$+ i^n\tan\theta_1.\tan\theta_2.\tan\theta_3\ldots\tan\theta^n]$$

$$\cos\theta_1.\cos\theta_2.\cos\theta_3\ldots\cos\theta^n\,[1 + i\,s_1 - s_2 - i\,s_3 + \quad\ldots(i)$$

$\{s_1 = \Sigma\tan\theta_1;\quad s_2 = \Sigma\tan\theta_1.\tan\theta_2,\ s_3 = \Sigma\tan\theta_2\ \tan_2\ \tan\theta_3)$ ……என்று குறிக்க $\}$.

$\therefore$ (i)லிருந்து மெய்யான பகுதிகளைச் சமன்சடுத்தினுல்,

$\cos \theta_1 + \theta_2 + \theta_3 + \ldots + \theta^n.$

$= \cos \theta_1 \cos \theta_2 . \cos \theta_3 \ldots \cos \theta^n . \quad [1 - s_2 + s_4 - \ldots]$

என்றும் கற்பனையான பகுதிகளைச் சமன்படுத்தினுல்,

$\sin (\theta_1 + \theta_2 + \theta_3 + \ldots \theta^n)$

$= \cos \theta_1 - \cos \theta_2 \cos \theta_3 \ldots \cos \theta_n \quad [s_1 - s_3 + s_5 \ldots].$ என்றும் கிடைக்கும்.

$$\therefore \quad \tan (\theta_1 + \theta_2 + \theta_3 + \ldots \theta_n)$$

$$= \frac{\sin (\theta_1 + \theta_2 + \theta_3 + \ldots + \theta_n}{\cos (\theta_1 + \theta_2 + \theta_3 + \ldots + \theta_n}$$

$$= \frac{\cos \theta_1 \cos \theta_2 \cos \theta_3 \ldots \cos \theta_n [s_1 - s_3 + s_5 - \ldots]}{\cos \theta_1 \cos \theta_2 . \cos \theta_3 \ldots \cos \theta_n [1 - s_2 + s_4 - \ldots]}$$

$$= \frac{s_1 - s_3 + s_5 - \ldots}{1 - s_2 + s_4 - \ldots}$$

**7·4.** இயற்கணிதத்திலிருந்து நமககு

$$\underset{n \to \infty}{\text{lt}} \left(1 + \frac{1}{n}\right)^{nx} = e^x$$ எனத்தெரியும்.

இவ்வரம்பினைப் பயன்படுத்தி

$$\underset{n \to \infty}{\text{lt}} \left(\cos \frac{x}{n}\right)^n = 1$$ என கீழ்க்கண்டவாறு நிரூபிக்கலாம்.

$$\cos \frac{x}{n} \sqrt{1 - \sin^2 \frac{x}{n}}$$

$$\therefore \quad \left(\cos \frac{x}{n}\right)^n = \left(1 - \sin^2 \frac{x}{n}\right)^{n/2}$$

$$\therefore \quad \underset{n \to \infty}{\text{lt}} \left(\cos \frac{x}{n}\right)^n = \underset{n \to \infty}{\text{lt}} \left(1 - \sin^2 \frac{x}{n}\right)^{n/2}$$

$$= \underset{n \leftarrow \infty}{\text{lt}} \left(1 - \frac{x^2}{n^2}.\right)^{n/2}$$

$$\left(\therefore \underset{n \to \infty}{\text{lt}} \sin \frac{x}{n} = \frac{x}{n}\right)$$

(§ 3·12)

$$= \underset{n \to \infty}{\text{lt}} e^{-x/^2 n^2 . n/2} \quad -x^2/2n$$

$$= \underset{n \to \infty}{\text{lt}} e$$

$= e_0$ ($\because$ $x$ என்பது ஒரு முடிவுள்ள கணியம் (finite quantity)

$= 1.$ ...... (i)

மேலும், § 3·11லிருந்து, $O<\theta<\frac{\pi}{2}$ எனில்,

$$\sin\theta<\theta<\tan\theta$$

$$\therefore \quad \sin\frac{x}{n}<\frac{x}{n}<\tan\frac{x}{n} \quad (n\to\infty)$$

$\therefore$ $\dfrac{\frac{x}{n}}{\sin\frac{x}{n}}$ என்பது 1க்கும் $\dfrac{1}{\cos\frac{x}{n}}$ க்கும் இடையே உள்ளது

$\therefore$ $\left\{\dfrac{\sin\frac{x}{n}}{\frac{x}{n}}\right\}^n$ என்பது 1க்கும் $\left(\cos\frac{x}{n}\right)^n$ க்கும் இடையே உள்ளது

$\therefore$ $\underset{n\to\infty}{\text{lt}}\left\{\dfrac{\sin\frac{x}{n}}{\frac{x}{n}}\right\}^n$ என்பது 1க்கும் 1க்கும் இடையே உள்ளது

((i) லிருந்து)

அதாவது $\underset{n\to\infty}{\text{lt}}\left\{\dfrac{\sin\frac{x}{n}}{\frac{x}{n}}\right\}^n=1$ ...... (ii)

7·5. $x$ என்பது ஒரு முடிவுள்ள (ஆரையன் முறையில் அளக்கப்பட்ட) கணியம எனில், இப்பொழுது $\sin x$ன் விரித்தலை $x$ன் அடுக்குகள் மூலம் ஒரு ஒருங்குகின்ற ஒரு சீரான முடிவிலி தொடராகக் காண்போம்.

§ 7·1லிருந்து

$$\sin n\theta = n\cos^{n-1}\theta \frac{\sin n-n(n-1)(n-2)}{1\cdot2\cdot3}.\cos^{n-3}\theta\cdot\sin^3\theta+\ldots\ldots$$

$\frac{x}{n}=\theta$ எனக் கொள். அதாவது $x=n\theta$; இப்பொழுது $n\to\infty$ எனில், $\theta\to0$ ஆகும்; அப்பொழுது,

$$\therefore \quad \sin x=\frac{n}{\theta}.\cos^{n-1}\theta\,\frac{\sin\theta-\frac{x}{\theta}\left(\frac{x}{\theta}-1\right)\left(\frac{n}{\theta}-2\right)}{1\cdot2\cdot3}$$

$$\cos^{n-3}\theta\cdot\sin^3\theta+\ldots\ldots$$

$$= x \cdot \cos^{n-1}\theta \cdot \left(\frac{\sin\theta}{\theta}\right) - \frac{x^3}{3!} \cdot \cos^{n-3}\theta \cdot \left(\frac{\sin\theta}{\theta}\right)^3 + \ldots\ldots \quad \ldots\ldots(i)$$

§ 7·4லிருந்து, $(\cos\theta)^{n-1} \to 1$; $(\cos\theta)^{n-3} \to 1\ldots\ldots$

இம்மாதிரியே, $\left(\frac{\sin\theta}{\theta}\right) \to 1$; $\left(\frac{\sin\theta}{\theta}\right)^3 \to 1, \ldots\ldots$

ஆகையால்,

$$\sin x = x - \frac{x^3}{3!} + \frac{x^5}{5!} - \frac{x^7}{7!} + \ldots\ldots \text{மு.வ.}$$

7·6. இப்பொழுது, cos $x$ன் விரித்தலை $x$ன் அடுக்குகள் மூலம் ஒரு ஒருங்குகின்ற ஒரு சீரான முடிவிலி தொடராகக் காண்போம்.

§ 7·1லிருந்து,

$$\cos n\theta = \cos^n\theta - \frac{n(n-1)}{1 \cdot 2} \cdot \cos^{n-2}\theta \cdot \sin^2\theta + \ldots\ldots$$

$\frac{x}{n} = \theta$ எனக்கொள். அதாவது, $x = n\theta$. இப்பொழுது $n \to \infty$ எனில், $\theta \to 0$ ஆகும். ஆகையால்,

$$\cos x = \cos^n\theta - \frac{\frac{x}{\theta}\left(\frac{x}{\theta} - 1\right)}{1 \cdot 2} \cdot \cos^{n-2}\theta \cdot \sin^2\theta + \ldots\ldots$$

$$= \cos^n\theta - \frac{x^2}{2!} \cdot \cos^{n-2}\theta \cdot \left(\frac{\sin\theta}{\theta}\right)^3 + \ldots\ldots$$

$$\cos x = 1 - \frac{x^2}{2!} + \frac{x^4}{4!} - \frac{x^6}{6!} + \ldots\ldots \text{மு.வ.}$$

$$\left(\because \left(\frac{\sin\theta}{\theta}\right)^k \to 1 \; (\theta \to 0), \; (\cos\theta)^k \to 1\right)$$

குறிப்பு (1) :— $x$ என்பது ஆரையன் அளவில்தான் இருக்க வேண்டும்.

குறிப்பு (2) :— மேற்கண்ட இருதொடர்களில், ஒன்றுவிட்ட உறுப்புக்களுக்குப் கூட்டல் குறியும் கழித்தல் குறியும் வரும்.

குறிப்பு (3) :— sin $x$ன் விரித்தலில் $x$ன் அடுக்குகள் ஒற்றையாகவும், cos $x$ன் விரித்தலில் $x$ன் அடுக்குகள் இரட்டையாகவும் இருக்கும்.

7·7. $x$ன் 6-வது, 7-வது, ... முதலிய மேல் அடுக்குகள் தவிர்க்கத் தக்கவை எனில் tan $x$ன் விரித்தலைக் காண்போம் (தோராயமாக)

$$\tan x = \frac{\sin x}{\cos x}$$

$$= \frac{x - \frac{x^3}{3!} + \frac{x^5}{5!}}{1 - \frac{x^2}{2!} + \frac{x^4}{4!}}$$

$$= \left\{x - \frac{x^3}{6} + \frac{x^5}{120}\right\} \cdot \left\{1 - \left(\frac{x^2}{2} - \frac{x^4}{24}\right)\right\}^{-}$$

$$= \left\{x - \frac{x^3}{6} + \frac{x^5}{120}\right\} \cdot \left\{1 + \left(\frac{x^2}{2} - \frac{x^4}{24}\right)\right.$$

$$\left. + \left(\frac{x^2}{2} - \frac{x^4}{24}\right)\right\}$$

$$= \left\{x - \frac{x^3}{6} + \frac{x^5}{120}\right\} \cdot \left\{1 + \frac{x^2}{2} - \frac{x^4}{24} + \frac{x^4}{4}\right\}$$

$$= x + \frac{x^3}{2} - \frac{x^3}{6} + \frac{5x^5}{24} - \frac{x^5}{12} + \frac{x^5}{120}$$

$$= x + \frac{x^3}{3} + \frac{2x^5}{15}.$$

அதாவது,

$$\tan x \simeq x + \frac{x^3}{3} + \frac{2x^5}{15}$$

7.8. இப்பொழுது $\sin\theta$ அல்லது $\cos\theta$ இவைகளின் அடுக்குகளை (powers) $\theta$ன் மடங்குகளுடைய (multiples) சைன், கொசைன் மூலம் காண்போம்.

$x = \cos + i \sin\theta$ எனில்,

$$\frac{1}{x} = \cos\theta - i \sin\theta.$$

ஆகையால், $x + \frac{1}{x} = 2\cos\theta$, $x - \frac{1}{x} = 2 i \sin\theta$.

மேலும், $x^r + \frac{1}{r} = 2\cos r\theta$; $x^r - \frac{1}{x^r} = 2 i \sin\theta$. ($x$ ஒரு முழு எண்) எனவே,

$$(2 i \sin\theta)^m = \left(x - \frac{1}{x}\right)^m$$

$$= x^m - mC_1 . x^{m-1} . \frac{1}{x} + mC2.x^{m-2} . \frac{1}{x^2} + C_3 . x^{m-3} . \frac{1}{x^3} + \ldots\ldots \quad \ldots(A)$$

வகை I. $m$ ஒரு ஒற்றை எண்.

$(A)$யிலிருந்து,

$$2^m.(-1)^{\frac{m-1}{2}} i \sin^m\theta$$
$$= \left(x^m - \frac{1}{x^m}\right) - mC_1 \cdot \left(x^{m-2} - \frac{1}{x^{m-2}}\right) + \ldots$$
$$(-1)^{\frac{m-1}{2}} mC_{\frac{m-1}{2}} \left(x - \frac{1}{x}\right)$$
$$= 2i \{ \sin m\theta - mC_1 \cdot \sin(m-2)\theta + mC_2 \cdot \sin(m-4)\theta + \ldots + (-1)^{\frac{m-1}{2}} . mC_{\frac{m-1}{2}} . \sin\theta \}$$

இருபக்கமும் $2i$ஆல் வகுக்க.

$$2^{m-1}.(1-)^{\frac{m-1}{2}} . \sin^m\theta . = \sin^m\theta - mC_1 . \sin(m-2) + mC_2 . \sin(m-4)\theta - \ldots + (-1)^{\frac{m-1}{2}} . mC_{\frac{m-1}{2}} \sin\theta.$$

வகை II. $m$ ஒரு இரட்டை எண்.

$(A)$யிலிருந்து,

$$2^m.(-1)^{\frac{m}{2}} . \sin^m\theta$$
$$= \left(x^m + \frac{1}{x^m}\right) - mC_1\left(x^{m-2} + \frac{1}{x^{m-2}}\right) + \ldots$$
$$+ (-1)^{\frac{m}{2}} . m^c \frac{m}{2}$$
$$= 2 \{ \cos m\theta - mC \cos(m-2)\theta + mC_2 . \cos(m-4)\theta - \ldots\ldots + \tfrac{1}{2}.(-1)m^{/2} . mC_{m/2} \} .$$

இருபக்கமும் 2ஆல் வகுக்க.

$$2^{m-1}(-1)^{m/2}.\ \sin^m\theta = \cos m\theta - mC_1.\ \cos(m-2)\theta + mC_2.\cos(m-4)\theta \ldots\ldots + \tfrac{1}{2}.\ (-1)^{m/2}.\ mC_{m/2}.$$

**7·9.** மேற்கூறியவாறு, இப்பொழுது cos $\theta$ன் அடுக்குகளை, $\theta$ன் மடங்குகளுடைய கொசைன் மூலம் காண்போம்.

முன்போல், $x+\dfrac{1}{x}=2\cos\theta$

$$x^r+\frac{1}{x^r}=2\cos r\theta \text{ (}r\text{ ஒரு முழுவெண்)}$$

எனவே, $(2\cos\theta)^n=\left(x+\dfrac{1}{x}\right)^n$

$$=x^n+nC_1\cdot x^{n-1}\cdot\frac{1}{x}+nC_2\cdot x^{n-2}\cdot\frac{1}{x^2}+\ldots\ldots+\frac{1}{x^n}.$$

$$=\left(x^n+\frac{1}{x^n}\right)+nC_1\cdot\left(x^{n-2}+\frac{1}{x^{n-2}}\right)+\ldots\ldots \quad \text{(A)}$$

வகை I. $n$ ஒரு ஒற்றை எண்.

(A)யிலிருந்து, $(2\cos\theta)^n=\left(x^n+\dfrac{1}{x^n}\right)+nC_1\left(x^{n-2}+\dfrac{1}{x^{n-2}}\right)+nC_2\left(x^{n-4}+\dfrac{1}{x^{n-4}}\right)+\ldots\ldots+nC_{\frac{n-1}{2}}\cdot\left(x+\dfrac{1}{x}\right)$

$$=2\left\{\cos n\theta+nC_1\cdot\cos(n-2)\theta+nC_2\cos(n-4)\theta+\ldots+nC_{\frac{n-1}{2}}\cdot\cos\theta\right\}$$

இருபக்கமும் 2 ஆல் வகுக்க,

$$2^{n-1}\cdot\cos^n\theta=\cos n\theta+nC_1\cdot\cos(n-2)\theta+nC_2\cdot\cos(n-4)\theta+\ldots+nC_{\frac{n-1}{2}}\cdot\cos\theta.$$

வகை II. $n$ ஒரு இரட்டை எண்.

(A)யிலிருந்து, $(2\cos\theta)^n = \left(x^n + \frac{1}{x^n}\right) + nC_1\left(x^{n-2} + \frac{1}{x^{n-2}}\right) + \ldots$

$+ \ldots + nC_{n/2}$

$= 2\{\cos n\theta + nC_1 \cdot \cos(n-2)\theta + \ldots$

$+ \frac{1}{2} nC_{n/2}\}$.

இரு பக்கமும் 2ஆல் வகுக்க,

$2^{n-1} \cdot \cos^n\theta = \cos n\theta + nC_1 \cos(n-2)\theta + nC_2 \cdot \cos(n-4)\theta$

$+ \ldots + \frac{1}{2} \cdot nC_{n/2}$

7·10. மேற்கண்ட சூத்திரங்களிலிருந்து. $m$ ஒற்றையாகில் $\sin^m\theta$ன் கோவை $\theta$ன் மடங்குகளுடைய சைன்களிலும், $m$ இரட்டையாகில், $\sin^m\theta$ன் கோவை, $\theta$ன் மடங்குகளுடைய கொசைன்களிலும் தான் இருக்கும் எனப் புலனாகிறது.

குறிப்பு (2):— $m$ ஒற்றையாகிலும், இரட்டையாகிலும், $\cos^m\theta$ன் கோவை $\theta$ன் மடங்குகளுடைய கொசைன்களில் தான் இருக்கும்.

குறிப்பு (3) குறிப்புகள் :— (1), (2)லிருந்து, $n$ எவ்வெண்ணாகிலும், $\sin^m\theta \cos^n\theta$ன் கோவை, $m$ ஒற்றையாகில், $\theta$ன் மடங்குகளுடைய சைன்களிலும், $m$ இரட்டையாகில், $\theta$ன் மடங்குகளுடைய கொசைன்களிலும் இருக்கும்.

## மாதிரிக்கணக்குகள்

7.11.

மாதிரி 1. $\frac{\sin 6\theta}{\sin\theta}$ன் மதிப்பை $\cos\theta$ன் அடுக்குகளின் மூலம் காண்க.

$\cos 6\theta + i\sin 6\theta = (\cos\theta + i\sin\theta)^6$

$= \cos^6\theta + 6C_1 . \cos^5\theta . (i\sin\theta)$

$+ 6C_2 . \cos^4\theta\ (i\sin\theta)^2 + 6C_3 . \cos^3\theta\ (i\sin\theta)^3$

$+ 6C_4 . \cos^2\theta\ (i\sin\theta)^4 + 6C_5 . \cos\theta . (i\sin\theta)^5$

$+ 6C_6\ (i\sin\theta)^6$

$= \cos^6\theta + 6i\cos^5\theta . \sin\theta$

$- 15\cos^4\theta\sin^2\theta - 20i\cos^3\theta . \sin^3\theta$

$+ 15\cos^2\theta . \sin^4\theta + 6i\sin^5\theta\cos\theta$

$- \sin^6\theta$

இருபக்கமும் ; கற்பனையான பகுதிகளைச் சமன்படுத்த.

$\sin 6\theta = 6\cos^5\theta . \sin\theta - 20\cos^3\theta . \sin^3\theta + 6\cos\theta . \sin^5\theta$

